உ

சைவ ஸ்ரீ

சுவாமிநாத பண்டிதர்

அவர்கள்

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவுந்தியார்—

## திருக்களிற்றுப்படியார்.



இவற்றிற்குக்

காஞ்சிபுரம்

**ஸ்ரீமத் - ஏகாம்பர சிவயோகிகள்**

பாதசேகரர்

**கா. ஆலாலசுந்தரம் பிள்ளை**

அவர்களால்

**சித்தாந்தபோத ரத்நாகரமென்னும் புத்துரை**

**இயற்றப்பட்டது.**

இவை

**காஞ்சிபுரம் பிள்ளையார் பாளையம்-ஐயங்குளம்**

**நாராயணசாமி முதலியார் அவர்களால்**



சென்னை,

**கணேச அச்சுக்கூடத்திலும்,**

**பிரிட்டிஷ் இந்தியா அச்சுக்கூடத்திலும்**

பதிப்பிக்கப்பட்டன.



[விலை ரூ. **2—0—0.**

திருச்சிற்றம்பலம்.

# நூன்முகம்.

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

மெய்கண்டான் சந்தான பரம்பரையில் இப்பதினுன்கும் சித்தாந்த நூல்களெனப்படும். சித்தாந்தம் எனவே அருந்துயர்க்குரம்பையின் பாடுவிட்டொழிந்து சுகம்வருவது எப்படி என்று அந்தம் (முடிவு) காணுது அலமரும் சித்தமுடையவர்க்கு முடிவாகிய கரையைக்காட்டி சித்தத்தை நிலைபெறச்செய்வதென்க.

இச்சித்தாந்த நூல்கள் யாரைநோக்கி எழுந்ததெனின் பொறுத்தற்கரிய துயரங்களுக்கெல்லாம், ஓர் நிலைக்களமாய் தோல் முதலிய சத்த தாதுக்களால் ஆக்கப்பட்ட ஆக்கையாகிய சிறு குடிலுட்பட்டு, ஆதி தெய்விகம், ஆதியான்மிகம், ஆதிபவுதிகம் என்னும் மூன்றால் தவிக்கப்பட்டு வாழும் இயல்பினையுடைய ஆன்மாக்களினின்றும் வேறுபட்டு, நாம் இக்குரம்பை யுட்பட்டுப் படும்பாடு பெரும்பாடாக இருக்கின்றதே; இப்பாடு நம்மை விட்டொழிவது எப்படி, நமக்குச் சுகம் வருவது எப்படி என்று ஓர் புணைகாணுது மயங்கும் அறிவுடையார்க்கு பாடு விட்டொழியும் வகையும், சுகம் வரும் வழியும் இவையாமென்று உணர்த்த எழுந்தன. அக்காரணத்தால் அந்நூல்கள் சித்தாந்தம் எனப் பெயர்பெற்றன.

இனி இத்திருவுந்தியாரால் பாசத்தளையை உந்தி (விட்டுத் தள்ளி) பஞ்சாக்கர சொரூபமாகிய திருக்களிற்றுப்படி யேறிய காரணத்தால் அப் பெயருடைய நூல் வழியான் வந்தவர்க்கு எளிதாகத் தமது ஆன்ம போதத்தில் சிவஞான போதத் தோற்றமும், சிவஞான சித்தியும், சிவப்பிரகாசமும் உண்டாமென்பது துணியக்கிடத்தலான் - "**உந்தி களிறு உயர்போதம் சித்தியார்**" என்று வகுத்துக்கூறினுர் அறிவிற்பெரிய ஓர் பெரியாரென்க.

இவ்வுண்மையை நாடியே எமக்கு அம்மையப்பராய் பரமாசிரியராய் எழுந்தருளியிருந்த **ஸ்ரீமத் ஏகாம்பர சிவயோகிகள்** நாடோறும் தமது அனுஷ்டான சிவ பூஜையாதி நியமங்கள் முடிந்த பின்னர் இவ்விரண்டு நூலை முன்னரும் சிவஞானபோதச் சூத்திரமும், சிவப்பிரகாசமும் பின்னரும் பாராயணஞ் செய்து வருவர். எமக்கும் அம்முறையே சிரவணஞ்செய்வித்துச் சிந்திக்கச் செய்தருளினர்.

எமது ஆசிரியர் மாணுக்கரும், எம்பால் ஆரா அன்புடையாருமாகிய காஞ்சிபுரம் ஐயங்குளம் நாராயணசாமி முதலியார், கேட்டவண்ணம் அந்நூல்களுக்கு உரை எழுதி வெளியிடவேண்டும் என்று விரும்பினுராகலின், அவரது விருப்பத்தை மறுப்பதற்கஞ்சி, இவர் விரும்புவது ஆசிரியரது ஆணையென்றே உட்கொண்டு மறைப்பெனும் பகைவன் வாரிக்கொண்டவை போக திருவருள் உணர்த்திய அவ்வளவே பின்வரும் உரைவிளக்கத்திற்கூறு முறைப்படி ஈண்டுவரைந்து வெளியிடத்துணிந்தேம். அத்துணிபுக்கேற்ப எமது ஆசிரியர் முன்னின்றுராகலின் இடையூறின்றி இவ்விரண்டு நூல்களும் இனிதுமுற்றுபெற்றன. இங்ஙனம் முற்றுவித்த எமது ஆசிரியரது பொன்னடிகளைச் சிந்தித்தும் வாழ்த்தியும் வணங்கியும் என்றும் உள்ளேமாக.

இங்ஙனம்:

**கா. ஏ. ஆலாலசுந்தரன்.**

## உரை விளக்கம்.

திருவுந்தியார் சூர்ணிகை. திருவுந்தி என்னும் சொற்பொருள் நிற்குநிலை, திருவுந்தியாரும், ஏனைய சித்தாந்த சாஸ்திரங்களும் கொண்ட பொருள் நிலை, திருவுந்தியாரில், சிவஞானபோதம் நிற்குநிலை, திருவுந்தியார் நிற்குநிலை, திருவுந்தியாருக்குத் திருக்களிற்றுப்படியார் நிற்குநிலை, திருப்பாட்டுகளின் அட்டவணை; நூல்வரலாறு, நூல் இம்முறையாக வகுத்து முடித்துள்ளோம். எங்ஙனமெனின், திருவுந்தியின் கருத்துப்பொருள் விளங்க திருவுந்தியார் சூர்ணிகையினையும் உந்தியார் என்பது அருட்சத்தி சாமர்த்தியத்தினால் பாவமுறு தீமையற அரன்சீர் பாடலாகிய ஞானவெற்றி என்னும் பொருள்விளங்க முதலாவது நிலையினையும்,-முதல்வழி சார்பாகவுள்ள சிவஞானபோத முதலிய மூன்று நூல்களும் பொது உண்மை என்றிரண்டாக வகுத்துக்கூறுவதெனவும், சங்கற்ப நிராகரணம் பொதுவிற்கூறப்படும் ஆராய்ச்சியைக் கூறியதெனவும், இருபாவிருபஃது முதலிய எட்டும் உண்மையிற்கூறப்படும் அநுபூதியைக் கூறுவதெனவும் திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் அநுபூதியில் முடிந்த பயனாயுள்ள நிட்டையினைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலென்னு முறையால் கூறுவதெனவும் விளங்க உ-வது நிலையினையும்,—சிவஞான போதம் உண்மையதிகாரத்திற் கூறப்பட்டுள்ள ஆறு சூத்திரப்பொருளும் முன்னுள்ள (எ) உந்தியில் அடங்கி நிற்கும் முறை விளங்க ௩-வது நிலையினையும்,—அந்த ஏழனுள் ஒன்றாகிய கண்டதை—என்னும் ஓர் உந்தியில் ஏனைய (சு) உந்தியும் அடங்கி நிற்கு முறையும், பின்னர் - கண்டத்தை-என்ற அவ்வுந்தியின் பொருளையே கொண்டு அஃதாவது—கண்டது-கருமம், பிண்டத்தில் வாரார், பிறப்பிறப்பில்லை என மூன்றாக வகுத்த அந்த வகுப்பினுள் ௩அ-உந்தியும் அடங்கி நிற்கு முறையும், விளங்க ச-வது நிலையினையும்,—திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் தாம் இயற்றிய திருக்களிற்றுப்படியாரில் "என்னறிவு சென்றளவில் யான் இன்று அறிந்தபடி, என்னறிவிலார் அறிக என்றொருவன்—சொன்னபடி, சொல்லக்கேள் என்று ஒருவன் சொன்னான் எனக்கு அதனைச், சொல்லக்கேள் யான் உனக்கு அச்சொல்" என்று தமது ஆசிரியர் திருவியலூர் ஆளுடைய தேவ நாயனாருக்கு அவர் ஆசிரியர் உய்யவந்த தேவநாயனார் அருளிய திருவுந்தியாரையே தமது உள்ளத்துட்கொண்டு அப்பொருளையே திருக்களிற்றுப்பாடியாரென ஓர் நூலாக இயற்றி தமது மாணாக்கருக்கு உபதேசித்ததாக வெளிப்படுகின்றமையானும் உந்தியாரின்கண் வருஞ்சொற்றொடரையும் பொருட்டொடரையுமே கொண்டு நூலை முடித்திருக்கின்றமையானும் அம்முறை விளங்க ரு-வது நிலையினையும் தொகுத்தும் வகுத்தும் கூறி திருப்பாட்டுகளின் முதற் குறிப்புவிளங்க அட்டவணைகளையும், நூல்வரலாறுகளையும் பின் திருக்களிற்றுப் படியாரைச் சார்ந்த கடவுள் வாழ்த்து முதலாகத் தொடங்கி அமைத்து, நூலினுள் திருவுந்தியார் செய்யுளும் அதன்கீழ் அது நுதலியதும், அவ்வுந்தியாரின் பொருள் விளங்கப் பொழிப்புரையும் அரும்பதங்களுக்கு விசேடவுரையும் வேண்டும் இடத்தில் கருத்துரையும் அதற்குதாரணம்போலும் அவ்வத்திருவுந்தியார் கருத்தமைந்த திருக்களிற்றுப்படியார் செய்யுளும் அதன் பொழிப்புரையும் விசேடவுரையும் திருவுந்தியாரின் சொற்பொருளையே திருக்களிற்றுப் படியாரில் சொற்பொருளாக அமைந்துள்ளதை ஒவ்வொரு செய்யுளீற்றில் எடுத்துக்காட்டியும் விளக்கியும் உள்ளேம்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திரு உந்தியார் சூர்ணிகை.

---

(௧) ஆசிரியனுய்வருதல் அகளமயனுகிய இறைவனே. அவன் தருவது தானுகச் செய்வதாகிய அருளே.

(௨) அவ்வருளால் ஆசிரியர் முகமாய்ச் சிரவணுதி பழக்கங்களைச் செய்யின் மும்மலப் பழக்கங்கள் தவிரும். ஆசிரியர் வழியன்றிச் சாத்திரங் களை யாராயின் அவை தவிரா.

(௩) ஆசிரியரைக் கொண்டு சிரவணுதி கருமங்களை முறையாக முடித்துக் கொண்டவர் முடிவுபெருத பிறப்பிறப்பை முடித்திடுவர்.

(௪) சிரவணுதிகளைச் செய்து நிட்டைகூடினுர்க்கு உண்டாகும் ஆனந் தம் சொல்லொணுது.

(௫) அவ்வானந்த நிலையில் நிற்குங்கால் ஆனந்தரூபியாகிய சிவன்—அவர் களை ஏகனுயும் அனேகனுயும் நாதனுயும் ஆளுமுறை.

(௬) இறைவன் அங்ஙனம் ஆளத்தலைப்படுங்கால் அவர் செயலெல்லாம் தன் செயலாகக் கொண்டு அவருக்குத் தன்னைத் தருவன்.

(௭) இறைவன்—அவரது செயலைத் தன்செயலாகவும் அவரைத்தாமாகவும் கொண்டு நிற்கப்பெறவே, அவர் அவ்வருமையை நாடிச் சரியை கிரி யைகளை வன்மை மென்மைவழியான் இயற்றி தமது உள்ளமுருகி இறைவனுடனுய் சிற்பரச்செல்வராய் நிற்பர்.

(௮) உள்ளம் உருகச் செய்யவல்ல அன்பின் வழியான் ஆதார நிராதார யோகமுறையானே விமலனுக்கிடமாகிய மீதானத்தை யடைவர்.

(௯) அவற்றுள்—ஆதாரயோக நிலை.

(௧௦) ஆதார யோகத்தால் அதன் பயனுகிய பஞ்சாக்கரப் பொருளுணர்வர்.

(௧௧) நிராதர யோகநிலை.

(௧௨) நிராதார யோகநிலையில் கொண்டுவந்த தன்னுசிரியரைப் புகழ்வர்.

(௧௩) ஆதார நிராதாரங்களைக் கடந்த மீதானம்—ஆன்மாவே.

(௧௪) அம் மீதானத்தையே சிவன் இடமாகக் கொண்டிருக்கு முறை.

(௧௫) அம்முறையினும் போதம் எழுமாகலின் அப்போதப்பற்றை அறுப் பதாகிய அருட்பற்றைப் பற்றல் வேண்டும். அதனைப் பற்ருெ தொழியின் சிவ பாவனை யொழியும்.

(௧௬) அருளைப்பற்றிச் சிவபாவனையில் நிற்கும் சிவயோகிகள் தற்போதந் தோன்றற்குரிய செயல்களைச் சாராது தாழ்மணி நாவேபோல்நிற்பர்.

(௧௭) அவ்வாறு நின்றவிடத்து திருச்சிலம் போசை கேட்கும். அவ்வோசை வழியே சென்று நின்று நிருத்தனைக்கண்டு கும்பிடுவர்.

(௧௮) அவ்வாறு கும்பிடப்பெறினும் அவ்வளவில் மகிழாது அவனருளை மறவாதிருப்பர்.

(கக) அருளைமறவா திருக்கவே நிருத்தன் அங்ஙனமே நில்லாது உள்ள முருக அவருள்ளத்தில் விரைந்து செல்வன்.

(உ0) இறைவன் குடிபுகுந்தபின் அறிவேயாய்விளங்கும் அருளாலும், அவ்வருளேயாய்விளங்குஞ் சிவத்தாலும் விளையும்பேரின்பவிலக்கணம்.

(உக) பேரின்ப விளைவில்-சிரவணஞ்செய்யுங் காலத்தில் தனக்கு வேறாகவும், சிந்தனைசெய்யுங் காலத்தில் தனக்குள்ளாகவும், கண்டதுபோல் அல்லாமல் சிவம்தானேயாய் நின்றருளும் சிவநிலை.

(உஉ) அச்சிவநிலையில் மனமும் பிராணவாயும் அடங்கி நிற்க முயலுதல் வன்மையன்று; அது துன்பம். அந்நிலையில் உணரும் தன்னறிவு அடங்கி யிருக்கச் செய்தல் வன்மையுள் வன்மை; அது இன்பம்.

(உங) தன்னுள்ளங் கவர்வானாகிய அச்சிவனிடத்தில் தற்போத முதலிய கரணங்களோடு கலந்து விடின் அக்கள்வனால் கூடத்தக்க முத்தியாகிய வீடு மிக எளிதாம்.

(உச) நிலநீர் முதலிய எட்டினையும் இறைவன் வீடாகக்கொண்டு அவற்றினுள் இருத்தலால் அவ்விறைவனோடு கலந்த இவர் முன்போல் உலகினைக் கலவாது உலகினுள்ளாயிருக்கின்ற இறைவனையே கலந்து நிற்கும் நிலையினராவர்.

(உரு) சீவன்தான் சிவாகாரமாகும் போது கரண முதலியவைகளும் சிவாகாரமாம் என்பது ஒவ்வாது என்பது ஒவ்வாது, யாவும் சிவாகாரமாம் என்பதே ஒவ்வும்.

(உசு) ஆன்மாவோடு யாவும் சிவாகாரமாகும்பொழுது சிவானந்தம்மொள்ளா அமுதாய்ப் பெருகும்; அப்பெருக்கால் பந்தம் முளையாது.

(உஎ) அப்பெருக்கில் அன்பு தோன்றும், அவ்வன்பினால் பந்தக்கட்டு அவிழும், கட்டு அவிழவே பந்தம் முளைப்பதற்கின்றிப் போம்; அந்த அன்பன்றிப் பந்தம் அவிழாது.

(உஅ) பந்தக் கட்டினை யறுப்பது மெய்ஞ்ஞனமென் றெண்ணி அந்தஞானம் பிரகாசித்த பின்னர் அன்பு விளையும் வகையை எண்ணுதொழிவாராயின் அவர்கள் பித்தேறினார்கள்போல் பெறவேண்டிய ஆனந்தத்தைப்பெறு தொழிவர்.

(உகூ) ஞானத்தில் முளைக்கும் சிவத்துக்கு எல்லையா யுள்ள இடம் அன்பேயன்றி ஏனையோராற் கூறப்படும் இடங்களன்று. இவ்வாறு ஆன்ஞேர் ஏனைய இடங்களை ஒழித்ததற்கு நாம் என்செயலாம்.

(ங0) சிவானந்தானுபவத்தை விளைவிப்பதாகிய அன்பினை வெளிப்படுத்தற்குரிய உடம்பினைப்பெற்றும் அவ்வுடம்பில் அவ்வன்பாகிய வாளைச் சாத்தப்பெறுதவர் துறவறத்தைப் பெற்றுலும்,அன்றியில்லறத்தைப் பெற்றுலும் பயனில்லை.

(ஙக) அன்பிலார்க்கு இருவகையறமும் பயனில்லை என்றதுபோல் சைவ சமயமொழிந்த ஏனைச்சமயங்களும் பயன்படுவனவல்ல. அவையெல்லாம் சாவிபோன சமயங்கள். அச்சமயவுரைகளைக் கேட்கத் தலைப்படின் நெல்லை வேண்டினேன் நெற்பதரை விசாரிப்பதனேடொக்கும்; ஆகலின் அவைகளைக் கேட்டலாகா.

(ஙஉ) அன்பினையுடைய மெய்ஞ்ஞானிகளே துறவிகள். அவர்கள்தான் துரியங்கடந்த தொண்டர்கள். அவர்களிடத்தில் தான் துரியப்

பொருளாகிய சிவனது செயலெல்லாம் நிகழும். சிவச்செயலன்றி அவர்களிடத்தில் வேறு செயல்கள் நிகழ்வதில்லை.

(௩௩) தமக்கென்று ஓர் செயலும் இலராய்ச் சிவன்செயலே செய்யும் இவர்—உடம்புடையராயினும், அவ்வுடம்பால் அநுபவிக்கும் இன்பம் பேரின்பமே; சிற்றின்பமன்று. அதனால் மாயை முளையாது.

(௩௪) சிற்றின்பம் பேரின்பமாதற்கும் மாயை முளையாமைக்குங் காரணம்-பேரின்பமான பிரமக்கிழத்தியோனாகிய இறைவனால் இவர்கள் ஆளப்பட்டமையே யாம்.

(௩௫) இச்சிறப்பரச்செல்வர்கள் இறைவனால் ஆளப்படுமுறைமை---பெண்டீர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போல.

(௩௬) இங்ஙனம் அன்பரை ஆளும் அவ்விறைவன் வாழும் இடம்—துவாத சாந்த ஸ்தானமாகிய அவ்விடம்.

(௩௭) துவாத சாந்தவாசியாகிய இறைவனது செந்நெறியே எங்கும் நிற்றலால் பேதம் அபேதம் பேதாபேதம் என்றெண்ணுஞ் செயலொழிக.

(௩௮) அங்ஙனம் ஒழியாது அச்செயல் செய்தால்-பொற்கொழுக்கொண்டு வரகுக்கு உழுவதுபோலாம்.

(௩௯) வேதாந்த மஹாவாக்கியங்களாகிய நான்கிற்கும் சித்தாந்தத் தெளிவாகிய உண்மைப்பொருள் விளக்கம்.

(௪0) ஆன்மா சிவமாவது சிவனருளால். சிவனருளைவிட்டு ஆன்மா சிவமாவதில்லை. ஆன்மா-என்றும் ஆன்மாவே.

(௪௧) சிவனருளால் ஆன்மாசிவமாதல் என்னும் அவ்வுண்மையிற் பற்றுதலொழிந்து ஆன்மாவே சிவம் என்னும் அந்த ஆன்ம ஞானத்தைப் பற்றின் அது முத்தி முதலைக் கெடுக்கும் மோகக்கொடியாம். ஆகலான் அந்த ஆன்மஞானத்தைக் கொள்ளாது ஒழிக்கவேண்டும்.

(௪௨) ஆன்மஞானத்தினால் யான் எல்லாம் ஆயினேன் என்று சிவமாகிய செல்வத்தை யிழந்துபோதலொழிந்து எல்லாமாயிருக்கும் சிவத்தைப் பெற்று குறைவற்ற செல்வராயிருத்தல் வேண்டும்.

(௪௩) உடம்புடையரா யிருக்கும் ஆன்மஞானிகள் சோஹம்பாவனையால் சிவமாகிய மெய்ஞ்ஞானத்தேனையுண்ணாது அகம்பிரமமெனும் மாயக்கள்ளுண்பவராதலால் அவர்கள் வரட்டுப்பசுக்களோடு ஒப்பாவர்.

(௪௪) ஆன்மஞானிகளாகிய அவ்வரட்டுப்பசுக்களோடு யானும் ஒருவனாய்ப் போகாமல் என் சிந்தையிலும் என் சென்னியிலும் வந்தவனாகிய இறைவன்-அருளாகிய அம்மையோடு வாழக்கடவன்.

(௪௫) இங்ஙனம் உய்யவந்த உரையை உணராதவர் ஆன்மாவையும் உணர்ந்தவரல்லர், பிரமத்தையும் உணர்ந்தவரல்லர், அவர்கள் பிறப்பிறப்பினின்றும் நீங்கி உய்ந்தவருமல்லர். சத்திநிபாதத்து உத்தமரெல்லாம் உய்யும் வண்ணம் உரைத்தருளிய இந்தவுரையை உணர்ந்தவரே வேதாகம வுண்மையை உணர்ந்தவருமாவர், உய்ந்தவருமாவர்.

திருச்சிற்றம்பலம்.

திருவுந்தியார் சூர்ணிகை முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

## 1. திருவுந்தியார் எனும்

# சொற்பொருள் நிற்குநிலை.

திருவுந்தியார் என்பது பாவமுறு தீமையற அரன்சீர் பாடலேயாம். இது அருட் சக்தி சாமர்த்தியத்தினால் உண்டாவதாகலின் ஞானவெற்றி எனப்படும். எனவே இந்நூல் அருட்சக்தி இது வெனவும் அதன் சாமர்த்தியம் இத்திற மெனவும், ஞான வெற்றி இத்துணைத்தா மெனவும் விளக்குவதென்க.

க-வது உந்தியில் - தானாகத் தந்தது என்றதும், உ-ல் - ஒரு பொருள் என்றதும், **அருட்சக்தி** இது என்பதையும், ச-ல் - எங்ஙனிருந்தது என்றெடுத்து அறியும் அறிவ தன்று என்று முடித்ததும், ரு-ல் - இறைவன் - ஏகனுமாகி அநேகனுமானவன் பின் நாதனுமாகி நம்மையாளச் செய்த தென்றதும், சு-ல் நஞ்செயலறச் செய்த தென்றதும், பின் இறைவன் தன்செயல் ஆனது என்றதும், தன்னையே தந்தான் என்றதும், **அருட் சத்தியின்சாமர்த்தியம்** இத்திறத்தது என்பதையும், எ-ல் உள்ளமுருகி உடனுவர் அல்லது தெள்ள அரியர் என்றதும், சிற்பரச் செல்வர் என்றதும் **ஞானவெற்றி** இத் துணைத்து என்பதையும் விளக்கியவாறுமென்க.

இனி முடிந்தது முடித்தல் என்னும் உந்தியாலும் மாட்டெறிந் தொழுக லென்னும் உந்தியாலும் மேற்கூறிய மூன்றினையும் ஏனைய (ரு அ) உந்தியாரானும் விளக்கியுள்ளன. எங்ஙனமெனின்:—ஆதார நிராதார யோகங்களைக் கூறும் உந்திகளில் க0-ல் துய்ய பொருள் இது என்றதும், கரு-ல் பற்றை யறுப்பதோர் பற்றென்றதும், கஅ-ல் அதுவே இங்குள்ள தென்றதும் **அருள்**.

கசு-ல் கருதுவதன் முன் கருத்தழியப் பாயும் என்றதும், உஉ-ல் காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள் ஆற்றுவது ஆற்றல் என்றதும், உங-ல் வீடும் எளிதாம் என்றதும், உச-ல் வீடேவீடாகும் என்றதும், உரு-ல் சித்தமும் தீய கரணமும் சித்திலே ஒத்ததே ஒத்தது என்றதும், உசு-ல் மொள்ளா அமுதாம் முளையாது பந்தம் என்றதும், உஎ-ல் அவிழ விருக்கும் இவ்வல்லல் என்றதும் ஙஅ-ல் பொற்கொழு என்றதும் ச0-ல் அவ னிவனானது அவனருளால் என்றதும் **அருட்சத்தியின் சாமர்த்தியம்**.

உஅ-ல் வித்தினைத்தேடி முளையைக் கைவிட்டவர் பித்தேறினர் என்றதும், உகூ-ல் என்றால் நாம் என்செய்கோம் என்றதும், ங0-ல் வீட்டிலிருக்கிலென் * * கூடப்படாதது என்றதும், ஙக ல்-சாவிபோம் மற்றச்சமயங்கள் என்றதும், அவைகளில் புக்கு நின்று ஆவி யறாதே என்றதும், ஙஉ-ல் தொண்டர்க்குச் சாக்கிரம் துரியமாய் நின்றது என்றதும், அவர்களைத் துறந்தவர் என்றதும் ஙங-ல் முளையாது மாயை என்றதும், ஙச-ல்இறைவன் பேரின்பமான பிரமகிழ்த்தியோடு உன்னை யாண்டான் என்றதும், ஙரு-ல் பெண்டிர் பிடி போல ஆண்மக்கள் பேய்போலக் கண்டார் என்றதும், சஉ-ல் குறைவற்ற செல்வம் என்ற தும், சங-ல் காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்டல் என்றதும், சச-ல் சிந்தையினுள் ளும் என் சென்னியிலும் சேரவந்தவர் என்றதும் **ஞானவெற்றி**.

அல்லதூஉம் திருவுந்தியார் என்பது பெரியோர் தும்பி முதலியவற்றை முன் னிலையாகக் கூறுதல் போல் தன்னிலையினின்று உயர்வதற்கு விருப்பமுடைய ஒருசீவனைப் பார்த்துச் சொல்லப்பட்டது என்று கொள்ளலு மொன்று. அங்ஙனங் கொள்ளுங்கால் நல்லபொருள்களிருக்கவும் இழிந்தவற்றைக்காமுறுதல் ஈக்கு இயல்பாதல்போல் ஆன் மாவும் அவ்வியல்புடைத்தாகலின் ஆன்மாவை நோக்கி ஈண்டுக் கூறியதுமாம்.

இதுபற்றி நூல் இறுதியினுங் காண்க.

---

## 2. திருவுந்தியாரும் ஏனைய சித்தாந்த சாஸ்திரங்களுங் கொண்ட

## பொருள் நிலை.

சிவஞானபோதம்—பன்னிரண்டு சூத்திர ரூபமாகவும் பொது-உண்மை என்னும் இரண்டதிகாரம் உடையதாகவும், பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என நான்கு பாதங்களையுடையதாகவும் உள்ளது.

பாடொழிந்துச் சுகம் விரும்பும் அதிகாரிகளுக்குத் துன்பந்தரும் பாட்டை ஆராய்ச்சி வழியான் உணர்த்தினாலன்றி அத்துன்பந்தரும் பாடொழியாது. ஆகலான் ஆராய்ச்சியைப் பொது என்றும், சுகத்தை அநுபூதி-(அநுபவ) வழியாற் காட்டினாலன்றிச் சுகத்தை யடையார் ஆகலான் அநுபூதியை உண்மை என்றும் இரண்டதிகாரமாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

ஆன்மாக்கள்—அருந்துயர்க்குரம்பையான் அனவரதமும் துன்பங்களை அநுபவிப்பரேயன்றித் துன்பம் வருதற்குக் காரணம் என்னையென்று அக்காரணத்தை அறியார். ஆகவே, அக்காரணத்தை அநுமானம், ஆகமம் என்னும் இருவகைப் பிரமாணங்களால் விளக்கிப் பின்னர் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் காட்டி அதன் பின்னர் ஆராய்ச்சி வழியான் உணர்த்தவேண்டுதலின் முன்னர்-**அநுமானத்**தால் சிறிது அறிவிலே துன்பங்கட்குக் காரணம் இதுவென்று தோன்றவும், அதன் பின்னர் - **ஆகமப்** பிரமாணத்தால் தோன்றச்செய்த அக்காரணம் சித்தத்தில் நிலைபெறவும், அதன் பின்னர் - **பிரத்தியக்ஷப்** பிரமாணத்தால் - துன்பத்துக்குக் காரணமாயிருப்பது இதுவென்று தெளியவும் செய்தலாகிய பிரமாண வியலையும், அங்ஙனம் தெளிந்த பின்னர் - துன்பங்கட்குக் காரணம் இதுவென்றறியவந்த - **பாச விலக்கணமும்,** அத்துன்பங்களை **அநுபவிக்கின்றவனிலக்கணமும்,** தானறியாதனவா யிருக்கின்றதுன்பங்கள் தன்மாட்டு வரும் அச்செயலும், அவற்றை நீக்கும் வகையறியவொட்டாது யநுபவிக்கச்செய்கின்ற அச்செயலும், செய்வோனையின்றி அமையாவாகலான் **சேய்வோனிலக்கணமும்** உணரும்வகை செய்தல் இன்றியமையாத செயலாகலின் இலக்கணவியலையும் பொதுவில் வகுக்கப்பட்டுள்ளது.

இங்ஙனம் துன்பங்களைத் தருதற்குக் காரணமாயுள்ள மலத்தினிலக்கணமும் அம்மலத்துக்குள்ளாய்த் துன்பத்தை அநுபவிக்கும் ஆன்ம இலக்கணமும் துன்பங்களை அநுபவிக்கச் செய்வோனாகிய பதி யிலக்கணமும் உணர்ந்த பின்னர் அவன் துன்பங்களினின்றும் நீங்கி துன்பங்களை அநுபவிக்கச் செய்த அப்பதியினிடத்தில் சுகானுபவத்தை யடைய விரும்புவானாகலின் முன்னர் துன்பங்களினின்றும் நீங்குவதற்கான சாதனங்களைச் செய்ய **சாதன வியலையுஞ்** அச்சாதனம் கைவந்தபின்னர் சுகப்பயனை விளைவிக்கப் **பயனியலையும்** உண்மையில் வகுக்கப்பட்டுள்ளது.

இம்முறைமையே கொண்டுள்ளன - சிவஞானசித்தியும், சிவப்பிரகாசமும் என்க. **சங்கற்ப நிராகரணம்** ஆராய்ச்சி யுணர்வுக் குரியது. ஏனைய இருபா இருபஃது முதலிய பத்து நூல்களும் அநுபூதி உணர்விற்குரியன. அவற்றுள் திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் சூத்திரமும் பாடியமும்போல சிவஞானபோதம் உண்மையதிகாரத்திற் கூறப்படும் அநுபூதி விஷயத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு துன்பந்தருவதாகிய பாசத்தை உந்தும் வகையினையும், இன்பந்தருவதாகிய சிவானுபவத்தைப் படிமுறையாக அநுபவிக்கும் வகையினையும் **திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும்** மிக எளிமையாய் உணர்த்த வல்ல சிறப்பினையுடையன.

3. திருவுந்தியாரில்

## சிவஞான போதம் நிற்குநிலே.

சிவஞானபோதம் பொதுவில் ஆறு சூத்திரம் போக உண்மை யதிகாரத்தில் சூத்திரம் - ஆறு. அவ்வாறனுள் முன்மூன்றும் **சாதனவியல்**, பின் மூன்றும் **பயனியல்**. சாதனவியலில் அனுபூதியாகிய பயன் பெறுதற்பொருட்டு அப்பயனைச் சாதித்தற்குரிய **அதிகாரியினியல்பை** ஏழாஞ் சூத்திரத்தானும், **சாதனத்தை** எட்டாஞ்சூத்திரத்தானும், **சாதிக்கும் முறைமையை** ஒன்பதாஞ் சூத்திரத்தானும் கூறியுள்ளது. பயனியலில் **பாசநீக்கத்தை** பத்தாஞ்சூத்திரத்தானும், **சிவத்தை யடைதலை** பதினொன்ருஞ் சூத்திரத்தானும், **சிவப்பே**றடைந்த பின்னர் உடலூழ் இருக்குமளவும் வந்து அடுப்பதாகிய **பிரார்த்த வாசனை தாக்காதிருத்தலைப்** பன்னிரண்டாஞ் சூத்திரத்தானும் கூறியுள்ளது.

இங்ஙனம் ஆறு சூத்திரங்களால் கூறப்பட்ட சாதன வியலின் பொருளையும் பயனியலின் பொருளையும் முதல் **ஏழு** உந்தியார்வரையில் கூறியுள்ளார்.

இந்த ஏழனுள் சாதனவியலில் ஏழாஞ்சூத்திரத்தில் எடுத்துக்கொண்டது-**அதிகாரி**யினியல்பு. எனவே அனுபூதிப் பயன் பெறுதற்குரியான் ஆன்மா. அவ்வான்மா சத்தும் அல்ல அசத்தும் அல்ல சதசத்து என்பதேயாம். இதனைப் **"பழக்கந் தவிரப் பழகுவதன்றி"** என்னும் உந்தியாராற் கூறியுள்ளார். எங்ஙனமெனின் பழக்கம் என்ருல்-ஆணவாதி மலப்பழக்கம். அவைகளோ அசத்து; அவ்வசத்தின் பழக்கத்தை யுடையவன் ஆன்மா என்ருயிற்று. தவிர என்றதனுல் - அப்பழக்கத்தை விடவேண்டுமென்ருயிற்று. ஆகவே ஆன்மா அவ்வசத்துமல்ல என்று வெளிப்பட்டது. பழகுவது - என்ருல் சத்துப் பழக்கம். அச்சத்தோ - சிவசத்து. அச்சிவசத்தின் பழக்கம் இல்லாதவன் - ஆன்மா என்ருயிற்று. அன்றி **உழப்புவது** என்-என்றதனுல் ஆன்மா அப்பழக்கத்தைச் செய்யாதிருத்தலைச் செய்யவேண்டும் என்ருயிற்று. ஆகவே ஆன்மா அச்சிவசத்துமல்ல என்று வெளிப்பட்டது.

இதனுல், ஆன்மா அசத்தின் பழக்கத்தினையே யுள்ளவன் ஆதலால் அசத்தாகவே கிடந்தான். அப்பழக்கத்தை விட்டு சத்துப் பழக்கத்தைச் செய்யின் சத்தாவான் - ஆகவே ஆன்மா பழக்க விசேடத்தான் அசத்தும் சத்தும் ஆவனேயன்றி இவன் அசத்தினிலக்கணம் உடையவனு மல்லன். சத்தினிலக்கணம் உடையவனுமல்லன். அந்தந்தப் பழக்கத்தால் அது அதுவாவதனுல் சதசத்தென்னும் பெயருடையவன் என்று ஆன்மாவாகிய அதிகாரியினிலக்கணங் கூறப்பட்டது.

எட்டாஞ்சூத்திரத்தில் எடுத்துக்கொண்டது-சாதனம். அவ்வதிகாரியினுல் செய்யப்படும் சாதனத்துக்கு ஓர் பொருள் வேண்டுமாகலான் அதனை "ஓர் பொருள்" என்ருர். அப்பொருளை அளிக்கும் ஆற்றலுடையான் தமது முதலாகிய இறைவனே யாகலான் அவ்விறைவனை **"அகளமாயாரும் அறிவரிதப் பொருள்"** என்றும் "அப்பொருளே சகளமாய் (குருவாய்) **வந்தது"**—என்றும் அவன் தந்த பொருள்தான் **தானுகத்தந்தது** என்றும் கூறினுர். மேலே ஒரு பொருளென்று சொல்லியதும் அது.

ஒன்பதாஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்டது—சாதிக்கு முறைமை. அம்முறைமை—மேற்கூறிய ஒரு பொருளைக் கொண்டு சாதிப்பதாகும். அதனை " **கண்டத்தைக்கொண்டு கரும முடித்தவர்"**—என்று கூ**றினுர்.**

இனிப்பயனியலில் பத்தாஞ்சூத்திரத்தில் எடுத்துக்கொண்டது—ஒரு பொருளாகிய உபதேசத்தால் அடையப்படும்பயன் மூன்று. அதனுள் முதலா

வது பாசநீக்கம். அதனை "பிண்டத்தில்வாரார்" என்றும் "பிறப்பிறப்பு இல்லை" என்றும், "எங்ஙன் இருந்ததென்று எவ்வண்ணம் சொல்லுகேன்" என்றுங் கூறினர். எனவே "அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினையின்றே" என்பது சூத்திரம். இதனுள் மலமாயை தன்னொடு வல்வினையின்றே - என்றதனை - பிண்டத்தில் வாரார் - என்றும், பிறப்பிறப்பில்லை - என்றும், அவனே தானே * * * இறைபணி நிற்க என்றதனை - எங்ஙனிருந்தது அங்ஙனிருந்ததென்றுங் கூறினர்.

பதினோராஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்டது - இரண்டாவது பயன் - சிவப்பேறு. அஃதாவது - சிவத்தையடைதல். அதனை-"ஏகனுமாகி அனேகனுமானவன் நாதனும் ஆனான் நம்மையேயாண்டான்" என்றும், "நஞ்செயலற்று இந்த நானற்றபின் நாதன் தன் செயல்தானே" என்றுங் கூறினர்.

எனவே "காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல், காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின் அயரா அன்பின் அரன்கழல் செலுமே" என்பது சூத்திரம். இதனுள்-காணுங்கண்ணுக்கு கண்டு காட்டலின்-என்றதனை-"ஏகனுமாகி நாதனும் ஆனான்" என்றும், "நம்மையே யாண்டான்" என்றும், "அயரா அன்பின் அரன்கழல் செலுமே" என்றதனை, நஞ்செயலற்று இந்த நானற்றபின் நாதன் தன் செயல் தானே என்றும், "தன்னையே தந்தான்" என்றுங் கூறினர்.

பன்னிரண்டாஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்டது-மூன்றாவது பயன்—பிராரத்தவினை தாக்காதிருத்தல். அஃதாவது:—பிராரத்தவினை தாக்குதற் குரியன இச்சாஞானக் கிரியை. இம்மூன்றனுள் ஞானம் மலங்கழுவுவதிலும் இச்சை அன்பரொடு மருவுவதிலும் கிரியை ஆலயத்தையும் திருவேடத்தைத் தொழுவதிலும் அன்பினால் உருகி அயராது செல்லத்தலைப்படுமாயின் பிராரத்தவினை தாக்காவாம். இதனை "உள்ளம் உருகி உடனாவரல்லது தெள்ள அரியர்" என்றும், "சிற்பரச்செல்வர்" என்றுங் கூறினர்.

இவ்வாறு சிவஞான போதம் உண்மை யதிகாரம் ஆறு சூத்திரப் பொருளும் ஏழு உந்தியாரில் அடங்கியுள்ளன.

## 4. திருவுந்தியார்

## நிற்கு நிலை.

"கண்டத்தைக்கொண்டு கருமம் முடித்தவர் பிண்டத்தில் வாரார் என்றுந்தீபற, பிறப்பிறப்பில்லை என்றுந்தீபற" என்ற உந்தியில் சித்தாந்தப் பொருளும் இந்நூற்பொருளும் அடங்கியுள்ளன.

சித்தாந்தப் பொருள் என்றது என்னை யெனின்:—"காணுங் கண்ணுக்கு என்ற சிவஞானபோதம் (கக)-ம் சூத்திரத்திற் கூறிப் போந்த பொருளேயாம்.

என்னை யெனின்.—காணுங் கண்ணுக்கு—காட்டக் காணுந்தன்மையுடைய கண்—உருவத்தைக் காணும்படி அக்கண்ணோடு உயிர் வேறின்றிக் கலந்து நின்று காட்டி அவ்வுருவத்தை அறிகின்ற ஆன்மாப்போல அறிவிக்க அறியும் இயல்புடைய ஆன்மா விடயத்தை அறியும்படி முதல்வன் அவ்வான்மாவோடு ஒருங்கியைந்து நின்று அறிவித்து அறிந்துவருதலான் அவ்வத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தானுபூதியைத் தலைப்படும் என்பதேயாம்.

இதனை—வார்த்திக வுரையானுந் தெளிக. அஃதாவது வார்த்திகவுரை யாகிய அதிகரணம்—(உ) அவற்றுள்:—(க) இவ்வான்மாக்கள் அவனை யின்றி யமைந்து ஒன்றையும் விடயியாவாகலான் அவனும் அவற்றது விடயத்தை யுண ரும் என்றது. அஃதாவது-கண்-சடமாகலானும் காணுதலாகிய பயன் உயிர்க்கே யாகலானும், கண் - காணுங்கால் உயிரும் உடனின்று காண்டல் பெறப்படும். எனவே - விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண்ணொளியோடுகூட உரு வத்தினுங் கலந்தாலன்றி அவ்வுருவத்தைக் காணுதல் இல்லையாமாறு போல அறிவிக்க அறியும் இயல்பினவாகிய உயிர்களோடு முதல்வனது உணர்வு கலந்து பின் விடயத்தினுங் கலந்து நின்றால் அவ்விடயத்தையறியும் அறிவு விளங்கி அதனை யறியு மன்றித் தனித்தறியவுமாட்டா; தனித்து ஒன்றனை விடயிக்கவுமாட்டா. ஆகலான் அறிவு விளங்குதல் மாத்திரைக்கேயன்றி விட யத்தைப் பற்றுதற்கண்ணும் முதல்வன் உடனின்றறிதல் ஒருதலையான் வேண் டப்படுதலான் இறைவனும் ஆன்மாக்களது விடயத்தையுணரும் என மேற் கோள் கூறிற்று.

(உ) அவன் (முதல்வன்) அந்நியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான் பத்தியினுன் மறவாதேத்த அவனது சீபாதத்தை யணை யும் என்றது. அஃதாவது - அம்முதல்வன் வேறு நில்லாது செய்வோர் செய்வன வற்றை அறிந்து அவ்வச்செய்திக்குத் தக்க பயனை அவ்வப்பொழுதே விளைவித் தும் அன்றிக் காலாந்தரத்தில் விளைவித்தும் உடனாய்நிற்பனுகலான் இனிப் பத்தியினுல் மறவாதேத்தவே அம்முதல்வன் சீபாதத்தை அணையுமென மேற்கோள் கூறிற்று.

இதனுற்போந்த தொகைப்பொருளாவது.—ஞானிக்கு வருகின்ற விடயங் களை அரனே அனுபவிப்பன் என்பதும், அரனை மறவாமல் அன்பிருந்தால் அவ்வரனிடத்திலே ஐக்கியமாய்ப் போவன் என்பதுமாம்.

இனி இந்நூற்பொருளென்றது என்னை யெனின், ஞானியானவன் அவனே தானே யாகிய அந்நெறி யுணர்ந்து அஃதாவது இறைவன் ஆன்மா வாகிய தானே யாய் நிற்கும் அந்த அத்வைத நிலையைக் காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் என்ற உவமான உவமேயப் பொருள்களால் உணர்ந்து அம்முதல்வனிடத்து ஏகனுகி நிற்பன். அங்ஙனம் நிற்பவே அவனுக்கு வரு கின்ற விடயங்களை முதல்வனே அனுபவிப்பானுயினுன் என்பதே யாம்.

இப்பொருளைத்தான் திருவுந்தியாரில் கண்டது என்முர். அங்ஙனம் அரன் அனுபவிக்கவே உடலூழாய் வரும் பிராரத்தவினை தாக்கி வருத் தும் அச்செயலொழிந்தது. அது வொழிய முதல்வனோடு ஏகனுகி நின்ற ஞானி அம்முதல்வனிடத்து விளையும் ஆனந்தத்தை அபரா அன்பினுல் கழல்சென்று அனுபவிப்பானுயினுன். அங்ஙனம் அனுபவிப்பதே ஏகனுகி நின்றவிடத்துச் செய்து முடிக்க வேண்டிய செயல். இப்பொருள் தோன்றவே உந்தியாரில் **கண்டத்தைக்கொண்டு கரும முடித்தவர்** என்முர்.

இங்ஙனமான கருமத்தை முடித்துக்கொண்ட அந்த ஞானிகள்பால் பிண்டத்தில் புகுவதற்கும், பிறப்பிறப்பில் அலைவதற்குங் காரணமாகிய மலம், மாயை வல்வினை என்னும் அம்மூன்றும் இல்லையாய் ஒழியும். இப்பொருள் தோன்றவே—உந்தியாரில் **பிண்டத்தில் வாரார்,** பிற' பிறப்பில்லை என்முர்.

இனி,—முன் எடுத்துக்கொண்ட ஏழனுள்—கண்டத்தை என்ற உந்தி யொன்றே இந்நூற்பொருளும் சித்தாந்தப் பொருளுமாயின் ஏனைய ஆறும் என்னையோ வென ஐய நிகழுமாகலின் அதனை முன்னர் ஒழிப்பாம்.

கண்டதாகிய அப்பொருள் ஆசிரியனையன்றி உணர்வதில்லை யாகலான் அவ்வாசிரியரைப் பற்றி அகளமாய், பழக்கந்தவிர என (உ) உந்தியும், அயரா அன்பினால் கருமமுடித்தலைப் பற்றி ஏகனுமாகி, நஞ்செயலற்று என (உ) உந்தியும், அரன்கழலில் சென்ற நிலையைப்பற்றி எங்ஙனிருந்தது, உள்ள முருகி என (உ) உந்தியும் எழுந்தன. இதனால் ஆறுந்தியும் ஒருந்தியிலடங்கினமை காண்க.

இனி, (௩அ) உந்தியும் நிற்குநிலையைக் கூறுவாம்:—கருமம் அஃதாவது அயரா அன்பு. எனவே அயரா அன்பின் செயல்கள் இவையாமென—ஆதார யோகம் என்ற (அ-வது)உந்தியார் முதல் அவிழ விருக்கும் என்ற (உஎ-வது) உந்தியார் வரையினும், இந்நிலை யுணராதாரது சிறுமையும், ஏனைய நிலைகளின் இழிவையும், அந்நிலைகளைக் கொள்ளாமையும்—(உஅ-வது) முதல் (௩க-வது) உந்தியார் வரையினும் கூறியவாறுமென்க.

அயரா அன்பாகிய கருமத்தைச் செய்யவல்ல தொண்டர்களாகிய சீவன் முத்தர்களிடத்து சிவனது கலப்பும், அவனது கலப்பினால் அச்சீவன் முத்தர்கள் சிவ துரிய நிலையுடையாராய்ப் பெற்ற சிற்றின்பமே பேரின்பமாகப் பெற்றதும், பெற்ற அந்நிலையில் அச்சீவன் முத்தர்களைச் சிவன் பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போல ஆளும் முறைமையும்—(௩உ-வது)துரியங் கடந்த என்ற உந்தியார் முதல் (௩ரு-வது) பெண்டிர் பிடி என்ற உந்தியார் வரையிலும், அங்ஙனம் ஆளுகின்ற முதல்வனது இடத்தை—(௩சு-வது) நாலாய என்ற உந்தியாரிலும் கூறியவாறுமென்க.

(௩கூ-வது) அது விது என்றதும் (௪0-வது) அவனிவனனது என்றதும் கண்டதை என்ற அதன் பொருளிலக்கணத்தைக் கூறியவாறுமென்க.

(௩எ-வது)சென்ற நெறி—என்றதும், (௩அ-வது)பொற்கொழு என்றதும், (௪க-வது)முத்தி முதலுக்கே என்றதும், (௪உ-வது)அண்டமுதலாய் என்றதும்-கண்டத்தை என்ற அதன் சித்தாந்தப் பொருளை யுணராது வேதாந்த மயக்கப் பொருள்கொண்டு இடர்ப்படுவாரது கொள்கையைக் கொள்ளா தொழிய வேண்டுமென்பதையும், அப்பொருள் முத்தி முதலில் படர்ந்த மோகக்கொடி என்பதையும், (௪௩-வது) காயத்துள் என்றது—அது மாயக்கள் என்பதையும், ஆகலான் மோகக் கொடியறுத்து மெய்ஞ்ஞானக் கள்ளுண்டு வாழவேண்டு மென்பதையும் கூறியவாறுமென்க.

(௪௪-வது) சிந்தையினுள்ளும் என்ற உந்தியாரால் பிண்டத்தில் வாரா வண்ணம் சிந்தையினுள்ளும், பிறப் பிறப்பில்லாமற் போதற்கு சென்னியிலும் சேர வந்தவர் என்று நன்றிமறவாமையும் (௪ரு-வது) வையம் முழுதும் என்றவுந் தியாரால் நூற்சிறப்புங் கூறியவாறுமென்க.

இவ்வாறு, முன் எழு உந்தியாரினுள் ஒருந்தியில் சித்தாந்தப் பொருளும் இந்நூற் பொருளும் அடங்கியும், அவ்வோருந்தியில் கண்டதாகிய அப்பொருளைப்பற்றி உ-உந்தியும் கருமமுடித்தலைப்பற்றி உ-உந்தியும் பிண்டத்தில் வாராது அரன்கழலில் செல்லு நிலையைப் பற்றி உ-உந்தியும் ஆக கூ-உந்தியார் அடங்கியும், அவ்வுந்தியிலேயே கண்டத்தைக்கொண்டு கண்ட கருமத்தைப்பற்றி உச-உந்தியும், அதைச்செய்யவல்லவரிடத்துச் சிவனது கலப்பும் அதனால் சிவ துரிய நிலையினராதலும் அந்நிலையில் சிவனால் ஆளப்படுதலும்பற்றி சு-உந்தியும், ஆளும் முதல்வனது இடத்தைப்பற்றி ஒரு உந்தியும், ஆசிரியனால் கண்டத்தின் பொருளிலக்கணத்தைப் பற்றி உ-உந்தியும் இப்பொருளுக்கு மாறுபட்டாரது கொள்கையைக் கொள்ளா தொழுகவேண்டு மென்பதைப்பற்றி ரு-உந்தியும், பிண்டத்தில் வாராது பிறப் பிறப்பொழித்தலைப்பற்றி ஒருந்தியும் நூற் சிறப்பைப்பற்றி ஒருந்தியும் ஆக ௩அ-உந்தியார் அடங்கியும் உள்ளன.

---

## 5. திருவுந்தியாருக்குத் திருக்களிற்றுப்படியார் நிற்கு நிலை.

| | திருவுந்தியார். | | திருக்களிற்றுப்படியார். | |
|---|---|---|---|---|
| ——— | ——— | க. | அம்மையப்பரே | |
| ——— | ——— | உ. | தம்மிற்றலைப்பட்டார் | |
| ——— | ——— | ங. | என்னறிவு | |
| க. | அகளமாய் | ச. | அகளமயமாய் | |
| | | ரு. | ஆகமங்களெங்கே | (2) |
| உ. | பழக்கந்தவிர | சு. | சாத்திரத்தை | |
| | | எ. | இன்றுபசுவின் | (2) |
| ங. | கண்டத்தை | அ. | கண்டத்தை | (1) |
| ச. | எங்ஙனிருந்தது | கூ. | அன்றுமுதல் | |
| | | கO. | ஒன்றுங்குறியே | (2) |
| ரு. | ஏகனுமாகி | கக. | ஆற்றால் | (1) |
| சு. | நஞ்செயலற்று | கஉ. | பாலைநெய்தல் | |
| | | கங. | தூங்கினரை | (2) |
| எ. | உள்ளமுருகி | கச. | உள்ளமுதலனைத்தும் | |
| | | கரு. | நல்லசிவதன்மத்தால் | |
| | | கசு. | மெல்வினையே | |
| | | கஎ. | ஆதியையர்ச்சித்தற்கு | |
| | | கஅ. | வரங்கள்தரும் | |
| | | ககூ. | பாதகமென்றும் | |
| | | உO. | செய்யிலுகுத்த | |
| | | உக. | செய்யுஞ்செயலே | (8) |
| அ. | ஆகாரத்தாலே | உஉ. | ஆதாரயோக நிராதாரயோகமென | (1) |
| கூ. | ஆக்கிலங்கே | உங. | ஆக்கியொருபொருளை | |
| | | உச. | கொண்டதொரு | (2) |
| கO. | அஞ்சேயஞ்சாக | உரு. | அஞ்செழுத்துமே | (1) |
| கக. | தாக்கியேதாக்காது | உசு. | ஆக்கப்படாத | (1) |
| கஉ. | மூலையிருந்தாரை | உஎ. | காண்கின்றதோர்பொருளை | |
| | | உஅ. | பேசாமைபெற்றதனில் | (2) |
| கங. | ஓட்டற்று | உகூ. | ஓட்டற்று | (1) |
| கச. | கிடந்தகிழவியை | ஙO. | உணராதே | (1) |
| கரு. | பற்றையறுப்பதோர் | ஙக. | பற்றினுட்பற்றை | (1) |
| கசு. | உழவாதுணர்கின்ற | ஙஉ. | அறிவறிவாய் | (1) |
| கஎ. | திருச்சிலம்போசை | ஙங. | ஓசையெலாமற்றால் | (1) |
| கஅ. | மருளுந்தெருளும் | ஙச. | சார்புணர்ந்து | (1) |
| ககூ. | கருதுவதன்முன் | ஙரு. | அன்றிவரும் | (1) |
| உO. | இரவுபகலில்லா | ஙசு. | உண்டெனில் | |
| | | ஙஎ. | தூலவுடம்பாய் | (2) |
| உக. | சொல்லும்பொருள்களும் | ஙஅ. | எத்தனையோ | |
| | | ஙகூ. | சாம்பொழுதும் | |
| | | சO. | வேண்டுங்கால் | (3) |
| உஉ. | காற்றினைமாற்றி | சக. | அரணவுணர்வு | (1) |
| உங. | கள்ளரோடு | சஉ. | இன்றிங்கசேதனமாம் | |
| | | சங. | அநாதிசிவனுடைமை | (2) |
| உச. | எட்டுக்கொண்டார் | சச. | தம்மிற்சிவலிங்கம் | |
| | | சரு. | தன்னைப்பெறுவதன்மேல் | (2) |
| உரு. | சித்தமும்தீயகரணமும் | சசு. | துன்பமாமெல்லாம் | |
| | | சஎ. | செத்தாரேகெட்டார் | |
| | | சஅ. | கண்ணுங்கருத்தும் | |
| | | சகூ. | வானகமும்மண்ணகமும் | |
| | | ருO. | கல்லிற்கமரில் | (5) |

| | | | | |
|---|---|---|---|---|
| ௨௬. | உள்ளும்புறம்பும் | ௫௧. | உள்ளும்புறம்பும் | |
| | | ௫௨. | கண்ணப்பனொப்பதோர் | (2) |
| ௨௭. | அவிழவிருக்கும் | ௫௩. | அவிழ்ந்ததுணியில் | |
| | | ௫௪. | சுரந்ததிருமுலைக்கே | |
| | | ௫௫. | அன்பேயென்னன்பே | |
| | | ௫௬. | எல்லாரறிவுகளின் | (4) |
| ௨௮. | வித்தினைத்தேடி | ௫௭. | வித்துமதனங்குரமும் | (1) |
| ௨௯. | சொல்லுமிடமன்று | ௫௮. | ஒன்றன்றிரண்டன்று | |
| | | ௫௯. | செய்யாச்செயலை | |
| | | ௬௦. | ஏதேனுங்காலமுமாம் | |
| | | ௬௧. | செய்தற்கரியசெயல் | |
| | | ௬௨. | இப்பொருள்கள் | (5) |
| ௩௦. | வீட்டிலிருக்கிலென் | ௬௩. | வீட்டிலேசென்று | |
| | | ௬௪. | சிவன்முதலேயன்றி | (2) |
| ௩௧. | சாவிபோமற்றை | ௬௫. | இன்றிச்சமயத்தில் | |
| | | ௬௬. | விரிந்தும்குவிந்தும் | |
| | | ௬௭. | ஆதனமுமாதனியும் | |
| | | ௬௮. | தாமடங்க | (௪) |
| ௩௨. | துரியங்கடந்த | ௬௯. | துரியங்கடந்த | |
| | | ௭௦. | ஓடஞ்சிவிகை | |
| | | ௭௧. | கொல்கரியினீற்றரை | |
| | | ௭௨. | மோகமறுத்திடின் | |
| | | ௭௩. | பாய்பரியோன்ற | |
| | | ௭௪. | அம்மையிலும் இம்மையிலும் | |
| | | ௭௫. | மன்னனருள் | (7) |
| ௩௩. | பெற்றசிற்றின்பமே | ௭௬. | உடம்புடைய | (1) |
| ௩௪. | பேரின்பமான | ௭௭. | பேரின்பமான | (1) |
| ௩௫. | பெண்டிர்பிடிபோல | ௭௮. | நங்கையினால் | |
| | | ௭௯. | பொன்னிறங்கட்டியினும் | (2) |
| ௩௬. | நாலாயபூதமும் | ௮௦. | தாரத்தோடொன்றுவர் | |
| | | ௮௧. | ஒன்றுரைத்த | (2) |
| ௩௭. | சென்றநெறி | ௮௨. | யாதேனுங்காரணத்தால் | |
| | | ௮௩. | நின்றபடி நின்றவர்கட்கன்றி | (2) |
| ௩௮. | பொற்கொழு | ௮௪. | சிவமேசிவமாக | (1) |
| ௩௯. | அதுவிதுவென்ன | ௮௫. | அதுவிதுவென்றும் | |
| | | ௮௬. | ஈறாகியங்கே | |
| | | ௮௭. | உன்னுதரத்தே | |
| | | ௮௮. | அவனேயவனி | |
| | | ௮௯. | இன்றுதானீயென்னை | |
| | | ௯௦. | கடலலைத்தே | |
| | | ௯௧. | சிவனெனவே | (7) |
| ௪௦. | அவனிவனை | ௯௨. | அவனிவனாய்நின்ற | (1) |
| ௪௧. | முத்திமுதலுக்கே | ௯௩. | முத்திமுதற்கொடிக்கே | |
| | | ௯௪. | அகளத்தில் | (2) |
| ௪௨. | அண்டமுதலா | ௯௫. | குற்றமறுத்து | |
| | | ௯௬. | ஆளுடையான் | (2) |
| ௪௩. | காயத்துள் | ௯௭. | தூலத்தடுத்த | |
| | | ௯௮. | இக்கணமே | |
| | | ௯௯. | என்னையுடையவன் | (3) |
| ௪௪. | சிந்தையிலும் | ௧௦௦. | சிந்தையிலும் | (1) |
| ௪௫. | வையமுழுதும் | | | |

இவ்வாறு உந்தியாரில் திருக்களிற்றுப்படியார் அடங்கியுள்ளன,

## திருவுந்தியார் அட்டவணை.



## திருக்களிற்றுப்படியார் அட்டவணை.



* இம்மூன்று பாடலையும் நூன்முதலிற் காண்க.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவுந்தியார் வரலாறு.

தவயோக முதலிய நன்மைகளுக்கெல்லாம் சாதனமாய்விளங்கும் உத்தர பூமியில், ஞானசூரியனு யெழுந்தருளியிருந்த உய்யவந்த தேவநாயனுர் தக்ஷண பூமியிலுள்ள, ஆன்மகோடிகள் உய்யுநிமித்தங் கிருபைகூர்ந்து, சேதுபரியந்தஞ் சென்றருளி மீண்டு காவேரிதீரத்தில் எழுந்தருளியிருக்குநாளில், திருவிசலூரில் ஆளுடைய தேவநாயனுர், அம்மூர்த்திகளைத்தரிசித்து அத்தரிசன விசேஷத்தால், கன்மத்தில் உபேக்ஷையும் ஞானத்தில் அபேக்ஷையும் பிறந்து அவரை வணங்கி அநாதிதொடங்கி யின்றளவுஞ் சனனமரணமாகிய துக்கசாகரத்தில் அழுந்தித் தடுமாறிக் கரைகாணுது உழல்கின்ற அடியேனை தேவரீரது காருணியத்தால் அதினின்றும் எடுத்துத் திருவடிகளாகிய கரையிற் சேர்த்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க அப்பெரியாரும் இவரது பரிபக்குவத்தை நோக்குற்றுத் திருவுளங்கூர்ந்து திருக்கண்சாத்தித் திருவடியுஞ் சூட்டியருளிப் பழையவாதனை தீரும்படிப் பரமநிட்டையும் அனுக்கிரகித்து அந்நிலைதிரிந்தால் மீண்டுங் கூடும்படி ஒரு சாத்திரமும் இவருக்கு வேண்டுமெனத் திருவுளங் கொண்டு திருவாய்மலர்ந்தருளியது இத்திருவுந்தியாரென்க.

---

# திருக்களிற்றுப்படியார் வரலாறு.

திருவுந்தியாரைத் திருவாய்மலர்ந்தருளிய உய்யவந்த தேவநாயனுர் அனுக்கிரகத்தைப் பெற்றவர் திருவிசலூர் ஆளுடைய தேவநாயனுர். அவருடைய திருவடியையடைந்தவர் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனுர்.

இத்தேவர் பெரும்பற்றப்புலியூரில் எழுந்தருளியிருக்கும் நாளில் பன்னுள் தமது திருவடிச்சேவை பண்ணிவந்த ஓர் அதிபக்குவர்க்குத் தாம்பெற்ற பரமோபதேசத்தை உபதேசித்துத் திருவுந்தியாரை உள்ளுறையாகவுடைய இத் திருக்களிற்றுப்படியாரையுந் திருவாய்மலர்ந்தருளி அவருக்கு அனுக்கிரகித்தனர்.

ஆயின் இந்நூற்குத் திருக்களிற்றுப்படியாரெனத் திருநாமம் வந்த வரலாறியாதெனின், இவ்வுய்யவந்த தேவநாயனுர் இதின்மகிமையை யாவரும் உணர்ந்துய்ய தில்லையில் நடேசர்சந்நிதியிற்சென்று அவரைத்தரிசித்து இந்நூலைத்திருக்களிற்றுப்படியில் வைக்க அத்திருக்களிற்றுக்கை நிமிர்ந்து கருணைநிதியாகிய நடேசரது குஞ்சிதபாதத்தில் வைத்தமையால் அதனைக்கண்ட அத்திருப்படைவீட்டிலுள்ள எழுநூறு திருமடத்து முதலிகளும் தில்லைவாழந்தணர் மூவாயிரவரும் மகேசுரர் நாற்பத்தெண்ணுயிரவரும் திருக்கோயிற்றிருத்தொண்டு செய்யும் திருப்பேர் ஏழாயிரத்துத் தொளாயிரவரும் பிறரும் அதிசயித்து இந்நூற்குத்திருக்களிற்றுப்படியாரெனத் திருநாமந் தரித்தனரென்க.

---

திருச்சிற்றம்பலம்.

# திருக்களிற்றுப்படியார்.

## *ஆசிரியர் வாழ்த்து.

அம்மையப்பரே உலகுக் கம்மை அப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்—அம்மையப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
அல்லார்போல் நிற்பார் அவர்.

(எ - து) எல்லா வுலகத்தையுங் கடந்து வேருயிருப்பவரு மல்லர், எல்லாவுலகாயும் ஒன்ருயிருப்பவரு மல்லர், இவ்விரண்டுதன்மையுஞ் சொல்லக்கூடாமல் உடனுய் விடாது நிற்பவருமல்லர். இவ்வாறிருப்பவர் யாவரெனின் பராசக்தி யுக்தனுகிய பரசிவ ஞர். இச்சொரூப வடிவினராகிய பரசிவனுரே பஞ்சமூர்த்திகளாய் இவ்வுலகினை ஆக்கி யும் காத்தும் அழித்தும் மறைத்தும் அநுக்கிரகித்தும் வருகின்ருராகையால் அவரே உலகினுக்குத் தாய் தந்தையரென்று அறியக்கடவாய். இவ்வாறு பஞ்சமூர்த்தி களாய் பஞ்சகிருத்தியங்களைச் செய்வதுபோல் ஆசிரியத்திருமேனி கொண்டுவந்து ஞாஞ னுக்கிரகமுஞ் செய்து சிவமாந் தன்மைப் பெருவாழ்வளிப்பர் என்பதாம்.

எல்லாவுலகுக்கும் அப்புறத்தார் (அல்லார்போல் நிற்பார்) இப்புறத்தும் (அல்லார்போல் நிற்பார், அப்புறத்தார் இப்புறத்தும்) அல்லார்போல் (உடனுக) நிற்பார் (அல்லர் ஆகிய) அவர் (தாம்) அம்மையப்பர். அந்த அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் என்று கொண்டுகூட்டுக.

அம்மை - என்பது - ஞானக் கிரியாவடிவமாயிருக்கின்ற பராசத்தியாம். எனவே அறியவேண்டிய விஷயங்களை அறிவதாகிய ஞானரூபமாயும், செய்யவேண்டிய விஷயங் களைச் செய்வதாகிய கிரியாரூபமாயும் உள்ளதென்பதாம்.

அப்பர்-என்பது-அந்த ஞானக்கிரியாரூபமாயுள்ள பராசத்தியினுல் அறியவேண்டிய வற்றை அறிந்து செய்யவேண்டியவற்றைச் செய்யும் தலைவராம் எனவே - சுதந்திரர் எனப்படும் சர்வகர்த்தர், அவ்யயர் - (நாசமில்லாதவர்) சகலவித் (சர்வஜ்ஞர்) சுயம்பிர காசர் அசலர் (அசைவற்றவர்) அமேயர் (அளவிடக் கூடாதவர்) பிரஹ்மபரர் (வேதாந்த சாத்திரங்களால் பிரஹ்மமென்று சொல்லப்படும் சொல்லுக்கு மேம்பட்ட பொருளாயுள்ள வர்) அதுலர் (ஒப்பற்றவர்) வியாபகர் என்பதாம்.

உலகுக்கு-என்பது-விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் என்று சொல்லப்படும் ஆன்மவர்க்கங்களுக்கு என்பதாம்.

அம்மையப்பர் என்றறிக - என்பது - அந்த மூவகை ஆன்மாக்களுக்கும் ஒரு மலம் இருமலம் மும்மலம் எனப்படும் பாசபேதங்களைக் கழுவும் தாயாகியும் சிவப்பே றளிக்கும் தந்தையாகியும் உள்ளாரென்பதை சிவாகமங்களிற் கூறப்படும் சித்தாந்த வச னங்களால் அறிவாயாக என்பதாம்.

---

* "பரப்பிரம்மம் இவனென்றும் பரசிவன்ருனென்றும் பரஞானம் இவனென்றும் பராபரன்ருன் என்றும் அரன்றருஞ் சீர் நிலையெல்லாம் இவனே என்றும் அருட்குருவை வழிபட" என்ற சித்தாந்த வசனத்தால் இத்திருப்பாடல் ஆசிரியர் வாழ்த்தாயிற்று.

எனவே—மேலே சொல்லிய ஆன்மவர்க்கங்களெல்லாம் சுதந்தரமில்லாதவராயும், பிரளயங்கள்தோறும் நாசத்தையடைகின்றவராயும், சிற்றறிவினையுடையவராயும், அப்பிரகாசராயும், இன்பத்துன்பங்களால் மொத்துண்டு அலைகின்றவராயும், ஒருமலமுடையவர், இருமலமுடையவர், மும்மலமுடையவர் என்று அளவிடப்பட்டவராயும், சீவர்கள் என்றும், பசுக்களென்றும் இழித்துச்சொல்லப்பட்டவராயும், வியாபகத் தன்மையற்று ஏகதேசப்படுந்தன்மையுடையவராயும், இருப்பவராதலால், சர்வகர்த்தர் என்றுதொடுத்து, வியாபகத்தன்மை யீறாகக் கூறிய நாமார்த்த சொரூபவடிவினராகிய பரசிவனார்—அருவமாகிய சிவமாகியும், அருவுருவமாகிய சதாசிவமாகியும், உருவமாகிய மஹேஸ்வரமூர்த்தியாயும் விளங்கும் தடத்தவடிவினராய், லய போக அதிகாரம் என்னும் மூன்றுநிலையில் நின்று முறையே சத்தியும் உத்தியோகமும் பிரவிர்த்தியும் என்னும் தொழில்களைப்பற்றி அவ்வான்மாக்களுக்குப் பாசநீக்கமும் சிவப்பேறும் அளிப்பரென்பதை ஆகமசித்தாந்த நூல்களைக்கொண்டு அறியத்தலைப்படுவாயாக என்பதாம்.

அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்—என்பது—அங்ஙனம் அறியத்தலைப்பட்டவர்க்கு—மேலே சொல்லியவாறு சொரூபவடிவினராயும், தடத்தவடிவினராயும் உள்ள பரசிவனார் அவ்விரண்டு வடிவத்தோடு எண்ணப்படாத ஆசிரியவடிவினராய்வந்து உண்டியுறக்கம் பயம் இன்பம் ஒத்தொழுகி ஞானசொரூபமாகிய அருளைத்தந்து சிவமாந்தன்மைப் பெரு வாழ்வளிப்பர் என்பதாம்.

எனவே "உருநாம் அறிய வோர் அந்தணனாய்" என்ற திருவாசகப்படி மானுடனாய் வந்து, "பிறவிக்கருவேரறுத்து, உருக்கும்பணிகொண்டு, நவமாய செஞ்சுடராகிய பரஞ்சோதியைத்தந்து, நாமென்பதையொழித்து உளம்புகுந்து பூவார் அடிச்சுவடு தலைமேல்வைத்து, கறங்கோலை போல்வதோர் காயப்பிறப்போடு இறப்பென்னும், அறம்பாவம் என்று இரண்டச்சந் தவிர்த்து, கன்னார் உரித்தென்ன தன் கருணையினால், பொன்னார் கழல்பணித்து, தாயிற்பெரிதும் தயாவுடையனாய் வல்வினையின் வாயிற் பொடியட்டி, வணங்கத்தலைவைத்து, வார்கழல் வாய் வாழ்த்தவைத்து, இணங்கத் தன்சீர் அடியார் கூட்டமும்வைத்து, முறிசெய்து முழுதுடற்றும் பழவினையைக் கிறிசெய்து, பாலும் அமுதமும் தேனுடனும் பராபரமாய் உள்ளங் குளிர்வித்து, சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கி" அம்மையப்பனாய் அன்பினில் விளைந்த ஆராவமுதா யிருந்தருளும் அப்பரிசைத் தந்தருளுவன் என்பதாம்.

இங்ஙனம் கூறிவந்த அரும்பொருளைத் திருவாசகம்—திருத்தெள்ளேணத்தினும், திருப்பூவல்லியினும் அருளியவாற்றானறிக.

அம்மையப்பர் எல்லாவுலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும் அல்லார்போல் நிற்பார் அவர் என்பது-"சிவன் உரு அருவும் அல்லன் சித்தினோடு அசித்தும் அல்லன், பவமுதல் தொழில்கள் ஒன்றும் பண்ணிடுவானும் அல்லன், தவமுதல் யோகபோகம் தரிப்பவனல்லன்தானே, இவைபெற யியைந்தும் ஒன்றும் இயைந்திடா இயல்பினனே" என்ற சித்தாந்த வசனப்படி நின்றருளும் சிவனது—அத்துவிதநிலை என்பதாம். (க)

## நூற் சிறப்பும் நூற்சருத்தும்.

உ. தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்
தம்மில் தலைப்படுதல் தாமுணரில்—தம்மில்
நிலைப்படுவர் ஓரிருவர் நீக்கி நிலை ஆக்கித்
தலைப்படுவர் தாம் அத் தலை.

**(எ-து)** அம்மையப்பர் நம்மைப்போலும் எளிய வுருவங்கொள்ளும் பொருட்டு தலைப்பட்டு வருதலினால் அவ்வருளாளரிடத்தில் நாமும் தலைப்பட்டு, அம்மையப்பர் ஆசிரியராய் வந்து உபதேசிப்பதே யல்லாமல் அங்ஙனம் உபதேசித்த பொருளை நமது அறிவினுள்

அறிவாய் நின்று அறியுமாறு செய்யத் தலைப்பட்டிருப்பதையும் உணரப்பெற்றால் ஆன்மாக்களாகிய நம்மிடத்தில் ஒப்பற்ற அம்மையப்பராகிய அச்சத்தி சிவங்கள் வேறாகாது நம்முள் நிலைத்திருப்பர். அங்ஙனம் நிலைபெற்றிருக்கும் அந்நிலையில் நமதுதற்போதத்தை நீக்கித் தமது ஞானக்கிரியைகளுள் நமது ஞானக்கிரியைகளை நிலையாக நிற்கும்படிச்செய்து நம்மை முனைத்து நிற்கச்செய்யாது தாமே முனைத்து நிற்கத்தலைப்படுவர் என்பதாம்.

ஓரிருவர் தம்மில் தலைப்படுவர் நீக்கி நிலையாக்கி அத்தலை தாம் தலைப்படுவர் எனக் கூட்டுக.

தம்மில் தலைப்பட்டார் - என்பது அருளாளராகிய ஆசிரியரை. தம்மில் தலைப்படுதல் என்பது—அறிவினுள் அறியுமாறு செய்யத்தலைப்பட்டிருத்தலை. ஓரிருவர் என்பது-அம்மையப்பரை. நீக்கி என்பது-தற்போதத்தை விலக்குதலை. நிலையாக்கி-என்பது ஓரிருவருடைய ஞானக்கிரியைகளுள் மாணவகனுடைய ஞானக்கிரியைகளை நிலையாக நிற்கும்படிச் செய்தலை. தாம் என்பது-அம்மையப்பரை. அத்தலை என்பது-நம்மை முனைத்து நிற்கச் செய்யாதிருத்தலை. (௨)

## அதிகாரியும் வந்த வழியும்.

௩ என்னறிவு சென்றளவில் யான்நின் றறிந்தபடி
என்னறிவிலார் அறிக என்றொருவன் சொன்னபடி
சொல்லக்கேள் என்றொருவன் சொன்னான்
சொல்லக்கேள் நான் உனக்கச் சொல்.

(எ - து.) எனது பசுஞானம் போன அளவிலேயே நான் பதிஞானத்திலே நின்று அறிந்த முறையை என்னைப்போலும் பசுஞானம் இல்லாதவர்களாகிய அதிகாரிகள் அறியக் கடவார்கள் என்று ஒப்பற்ற எனது ஆசிரியர் சொல்லியருளியபடி சொல்லக் கேள் என்று எனக்காசிரியராயிருந்த ஒருவர் எனக்கு அவ்வரிய பொருளைச் சொல்லியிருக்கின்றார். நான் உனக்கு அச்சொல்லைச் சொல்லுகின்றேன். மாணவகனே! கேட்பாயாக என்பதாம்.

என்றொருவன் எனக்கு அதனைச் சொன்னான் நான் உனக்கு அச்சொல்சொல்லக் கேள் எனக்கூட்டுக.

என் அறிவு என்பது - பசுஞானம். இப்பொருளை ஈரிடத்துக் கொள்க.

என்றொருவன் சொன்னபடி என்றதில் ஒருவன் என்றது-திருவியலூர் ஆளுடைய தேவநாயனாருடைய ஆசிரியராகிய உய்யவந்த தேவர். ஒருவன் சொன்னான்—என்பதில் ஒருவன் என்றது திருவியலூர் ஆளுடைய தேவநாயனார். எனக்கு என்றதும் நான் என்றதும்-இத்திருக்களிற்றுப்படியார் அருளிய திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார். உனக்கு என்றது-தமது மாணவகனுக்கு. அச்சொல் என்றது - உய்யவந்தானுரை உண்மையுணர்ந்தார் என்றிறுதியில் கூறியிருக்கும் திருவுந்தியாரின் பொருள்கொண்ட இந்நூல்.

இம்மூன்று திருப்பாட்டினுள் அப்புறத்தார் * * அல்லார்போல் நிற்பாரவர் * * அப்பரிசே வந்தளிப்பர் என்றதனால் அகளமாயாரும் அறிவரிதப்பொருள் சகளமாய் வந்தது என்னும் திருவுந்தியின் பொருள் நிலையைக் கொண்டதெனவும், தம்மிற்றலைப்பட்டார் பாலே தலைப்பட்டு என்றதனால் பழக்கந்தவிரப் பழகுவது என்னுந் திருவுந்தியின் பொருள் நிலையைக் கொண்டதெனவும், ஒருவன் சொன்னபடி சொல்லக்கேள் என்றொருவன் சொன்னான் அதனைச் சொல்லக்கேள் நான் உனக்கச்சொல் என்றதனால்-கண்டத்தைக் கொண்டு கருமமுடித்தவர் * * பிண்டத்தில்வாரார் என்னும் திருவுந்தியின் பொருள் நிலையையுங் கொண்டதெனவும் உய்த்துணர்ந்து கொள்ளலுமாம். (௩)

---

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்ட தேசிகேந்திராய நமஃ

# சித்தாந்தபோதரத்நாகரம்.

## திருவுந்தியார்.



கலித்தாழிசை.

அகளமா யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற.

என்பது உந்தியார் என்சொல்லிய வாறோவெனின் - யாவரானும் அறிதற்கரிய பரம்பொருள் யான்அறியவந்து யான் தானாக அருளைக் கொடுத்ததென்று சொல்லிற்று.

(இதன்பொருள்.) யாவரானும் அறிதற்கரிய ஞானசொரூபமாகிய பரசிவம், ஞானாசாரியனென இம்மண்ணுலகில் எழுந்தருளிவந்தது; (வந்த அத்திருவுருவம்) யான் சிவமேயாக அருள்செய்தது என்க.

யாரும் அரிவரிது அகளமாய் அப்பொருள் எனக்கூட்டுக.

அகளம் எனவே ஞானசொரூபம். அஃதாவது எங்குங் கலந்துநிற்கும் பெரியவுருவம். யாரும் எனவே பிரமன்முதல் நாதாந்தம்வரை யுள்ளவர். அறிவரிது எனவே சுட்டறிவால் அறியப்படாதது. அப்பொருள் எனவே பதிப்பொருளாகிய பரசிவம். சகளமாயவந்தது எனவே ஆசிரியராய்வந்த வடிவம். தானாக எனவே சீவத்தன்மைகெட்டுச் சிவத்தன்மையை யடைய. தந்தது எனவே அருளைக்கொடுத்தது. அஃதாவது அநந்நியமாயிருத்தலாகிய அத்வைதானுபவத்தைத் தந்தது.

சீவன் சிவாகாரமாதற்குச் சிவமன்றி வேறொருவர் வரின் சிவமாதல் கூடாதாகலின் அகளமா யாரும் அறிவரிதப்பொருள் சகளமாய் வந்தது என்றும், தான் சகளமாய்வந்ததற்கு அருள் காரணமானதுபோல், சீவன் சிவமாதற்கும் அருளன்றிக் கூடாதாகலின் தானாகத்தந்தது அருளென்றுங் கூறினார்.

ஞானசொரூபம் என்றதை †"ஆதிநடு வந்தமிலா அளவில்சோதி அருண்ஞானமூர்த்தியாய்" என்றதனானும், பிரமன்முதல் நாதாந்தம்வரை அறிவரிது என்றதை * "பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன் மா மன்னுசோதி மணிமார்பன் நாமன்னும் வேதம் வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன் நாத நாதாந்த நடுவே தம்போதத்தால் ஆமளவும் தேட அளவிறந்த அப்பாலை" என்றதனானும், பெரியவுருவம் என்றதை "ஆயிரங்கமலம் ஞாயிறு ஆயிரம் முக்கண் முக கரசரணத்தோன்" எனவும், எண்ணில் பல்கோடி சேவடி முடிகள் எண்ணில் பல்கோடி திண்டோள்கள், எண்ணில் பல்கோடி திருவுருநாமம் ஏர்கொள் முக்கண் முகம் இயல்பும், எண்ணில் பல்கோடி எல்லைக்கப்பாலாய் நின்று ஐஞ்ஞூற் றந்தணர் ஏத்தும், எண்ணில் பல்கோடி குணத்தரோர் வீழியிவர்நம்மை யாளுடையாரே" என்ற திருவிசைப்பாவானும் அறிக.

† சிவஞானசித்தியார் பரபக்கம். செ - ள். (2) * போற்றிப்பஃறொடை.

யா - வினு எஞ்சாமைப்பொருளது. யாரும் - உம்மைமுற்று. அப்பொருள் உலகறிச் சுட்டு. உந்து ஈ - உயர்கின்ற ஈப்பறவை. வினைத்தொகை. ஈ விளி. பற - அகரவீற்றுவியங் கோள். இப்பாட்டான் இறைவனே ஆசிரியனுய்வந்து தானுகும் அருள்கொடுத்தல் கூறப் பட்டது.

## திருக்களிற்றுப்படியார்.

### நேரிசை வெண்பா.

(௪) அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போல்உலகில் தங்கி-நிகளமாம்
ஆணவ மூல மலம்அகல ஆண்டனன்காண்
மாணவக என்னுடனுய் வந்து. (1)

(௫) ஆகமங்கள் எங்கே அறுசமயம் தான்எங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே-பாகத்
தருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யார் அறிவார் பேசு. (2)

என்பது மாணவகனே! திருவம்பலத்தின்கண்ணே, பஞ்சகிருத்திய தாண்டவம் செய்தருளும் ஞானமயமாய்ப் பிரகாசியாநின்ற எமதுநடராஜவள்ளல், இவ்வுலகின்கண் உருவமயமா யிருப்பவன்போல், என்னுடைய ஆசிரியவுருவமாய்வந்து, என்னுடனுய்ப் பிரியாது பொருந்தியிருந்து, எனக்கு விலங்காய் அநாதியா யமைந்துள்ள மூலமலமாகிய ஆணவமலம் என்னைவிட்டு வேறும்படி, என்னை அடிமைகொண்டனன். (1) (அகள மயனுகிய எம்மிறைவன்) தன் அருட்சத்தியானது வாமபாகத்தில் சிவகாமிஎன நின் றருளும் திருவுருவமாகவும், தான் நடனஞ்செய்தருளும் திருவுருவமாகவும் கொண்டு நின்று பின்னர் எனது ஆசிரியத் திருவுருக்கொண்டுவந்து, என்னை அடிமையாக ஆளாதொழிவானுயின், வேதமுதலியவற்றால் இத்தன்மைத்தென்று கூறவொண்ணுத சொரூபவடிவமாயும், அருளினல் ஆகமத்தே யறியநின்ற தடத்தவடிவமாயும் நின்றரு ளும், தத்சிவமாகிய அந்தப்பெரியதோர் வடிவத்தை யாவர் அறியவல்லவர். அவனன்றி ஆகமத்திற்கூறப்படும் பொருள்களும், அறுசமயக் கொள்கைகளும், யோகமுறைகளும், ஞானநெறிகளும் தாமே உணர்த்தவல்லனவாகுமோ நீசொல்வாயாக (2) என்பதாம்.

மாணவக அம்பலத்து அகளமயமாய் நின்ற எங்கூத்தன் உலகில் சகளமயம்போல் (என்னுடனுய்வந்து) தங்கி நிகளமாம் ஆணவமூலமகல ஆண்டனன் (1) எனவும், பாகத் தருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் ஆகமங்களெங்கே அறுசமயந்தானெங்கே யோகங்களெங்கே உணர்வெங்கே அந்தப்பெருவடிவை யார்அறிவார்பேசு (2) எனவும் கூட்டுக.

இவ்விரண்டு பாட்டானும், உந்தியுள் கூறப்பட்ட பெருவடிவாகிய அகளவடிவம் இத்துணைத்தாமென்றும், அது சகளமாய் வருவதனுல் உண்டாகும் உபகாரம் இத்துணைத் தாமென்றும் விதந்துகூறப்பட்டது.

எங்ஙனமெனின்,—இவ்வாசிரியர் அகளம் என்றதை அகளமயமாய்நின்ற அம்பலம் எனவும், சகளம் என்றதை கூத்தன் எனவும், யாரும் அறிவரிதப்பொருள் என்றதை பாகத்தருள் வடிவும்தானுமாகிய அந்தப்பெருவடிவை எனவும், தூனுக என்றதை பேருல கிற்றங்கி என்னுடனுய்வந்து எனவும், நந்தது என்றதை நிகளமாம் ஆணவமூலமலமகல ஆண்டனன் எனவும், பதிஞானத்தால் அகன்றெழியவேண்டிய ஆணவமலம், பாசஞான பசுஞானங்களை யுணர்த்தும் ஆகமங்களானும் அறுசமயங்களானும் யோகங்களானும், உணர்வுகளானும் ஒழியா என்னும் உண்மைதோன்ற ஆகமங்களெங்கே அறுசமயந்தா னெங்கே யோகங் களெங்கே யுணர்வெங்கே எனவுங்கூறினர்.

அம்பலக்கூத்தன் - சிவபேதங்களை யெல்லாங்கடந்து நாத நாதாந்தப் பொருளாய்ச் சேமவொளியாய்ச் சிற்பர வியோமப்பொருளாய் விளங்கும் பரசிவசொரூப அருளுருவென்பார் அகளமயமாய்நின்ற அம்பலத்தெங்கூத்தன் சகளம் எனவும், அவ்வரிய அருளுருவத்தினின்றும்வந்த பேரருளுருவம் தான்வழிபடும் குருவடிவென்பார் உலகில் என்னுடனுய்வந்துதந்தி எனவும், நடராஜமூர்த்தியாய்வந்த திருவுருவம் சர்வான்மாக்களுக்கும் கன்மமலமும் மாயாமலமும் அகலவும், என் ஆசிரியனாய்வந்தஅப்பெருமானது திருவுருவம் கன்மம் மாயைஎன்னும் அவ்விருமலங்கட்கும் மூலமலமாயுள்ள அம்மலம் எனக்ககலவும், அம்மூலமாகிய ஆணவம்அகன்றபின்னர் நான்தன்னருளின்வழிநிற்கவும், என்னையாண்டு கொண்டனன் என்பார் ஆணவமூலமகல ஆண்டனன் எனவும், இறைவன் ஆசிரியனாய் வந்து என்னை ஆண்டு எனக்கு உணர்த்துவனவற்றை யானுணர, என்னுள் தன்னருளை நிறுத்தி யானுணரும் வண்ணம்செய்து, ஒழிக்கத்தக்க மலத்தை,—பாசநீக்கத்தையும் முத்திப்பேற்றையும் கரதலாமலகம்போல் எடுத்துக்காட்டவல்ல ஆகமங்களும், பாசநீக்கமும் சிவப்பேறும் சித்தியாம்வண்ணம் தியானுதி பேதங்களையும் உபாசனுதி கிரமங்களையும் உடைய அறுசமயங்களும், தியானுதிபேதங்களானும், உபாசனுதி கிரமங்களானும் கூட வேண்டிய சிவபாவனையை வருவிக்கவல்ல ஆதாரயோக நிராதாரயோகங்களும், சிவபாவனையால் சிவமாந்தன்மையைக் கூட்டும் உணர்வாகிய ஞானமும், ஒழித்து என்னையாட்கொள்ளுந்தன்மையை உடையனவாமோ? ஆகா. எனெனின், யான் உணரச்செய்யவல்ல அருட்டன்மையும், எனக்கு உணர்த்தவல்ல ஆசிரியத்தன்மையும் ஆகமாதிகளாகிய அவை உடையனவாகா என்பார் ஆகமங்கள் எங்கே அறுசமயந்தான் எங்கே யோகங்கள் எங்கே உணர்வுஎங்கே எனவும், உண்ணின்று உணரச்செய்யும் அருள்வடிவும் வெளியேநின்று உணர்த்தும் குருவடிவும் என்னை உணரும் வண்ணம் செய்யும் வகையினும் உணர்த்தும் வண்ணம் செய்யும் வகையினும் ஆளாதொழியின் சத்திசிவமாய் (மாதாளும் பாகத்தனாய்) விளங்கும் அப்பெரிய வடிவத்தைத் தமதுபோதமாகிய அறிவால் எவ்வகை யான் எடுத்துப்பேச வல்லுனராவர். இதனையாராய்ந்து நீசொல்வாயென்பார் அந்தப் பெருவடிவை யாரறிவார் பேசு எனவுங்கூறினர். (௧)

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பெண்ணே உந்தீபற
ஒருபொரு ளாலேயென் றுந்தீபற.

எ-து உ-ர் என்சொல்லிய வாறேவெனின்-மும்மலப்பழக்கம் ஆசிரியவசனத்தாலன்றிச் சாத்திரப்பழக்கத்தால் நீங்காதென்றுசொல்லிற்று.

(இ - ள்.) மேற்கூறிய (ஆசிரியர்கூறும்) அந்த வொருபொருளாலே, பிரபஞ்ச விவகாரப் பழக்கம் நீங்கப் பழகுவதல்லாமல், நூல்வழியில் உழலுவதனால் யாதுபயன் உண்டாம் என்க.

ஒருபொருளாலே பழக்கந்தவிரப் பழகுவதன்றி எனக்கூட்டுக. பெண்ணேஎன்றது விளி. ஈண்டுப்பெண்ணென்றது நெஞ்சத்தை. பொருளால் என்பது மூன்றும் வேற்றுமைக்கருவிப்பொருள். இப்பொருளுக்குப் பழக்கம் தவிர அன்றி உழப்புவது என் என்றும், பழகுவதன்றி உழப்புவதென் என்றும் தனித்தனிகூட்டிமுடிக்க.

ஒருபொருள் என்றது ஆசிரியனாற்கூறப்படும் உபதேசப்பொருள் சாத்திரங்களிற் கூறப்படும் பலமொழிக்கும் இடங்கொடுப்பதாகலின் அச்சொற்பொருளை. பழகுவது என்றது அவ்வுபதேசப்பொருளைச் சிரவணஞ் செய்தவாறே சிந்தித்தலை. பழக்கந்தவிர என்றது சிந்தனைசெய்தவாறே தெளிந்து மும்மலப்பழக்கத்தை விட்டொழித்தலை: உழப்புவது என்றது உபதேசப்பொருளைச் சிந்தித்துத் தெளிதலாகிய உழப்பைவிட்டு நூல்களைச்சிரவணமாத்திரஞ்செய்யும் உழப்பின்வழிநிற்றலை. என் என்றது அவ்வுழப்பு வீட்டைகூடுதலாகிய பயனைக்கொடாதென்பதை.

ளுடும் உன்னிடையே எழுந்தருளும்—என்றார். இந்நிலை – சுருதி குரு சுவானுபவம் என்னும் அம்மூன்றினுலன்றித் தெளிதல் கூடாதென்னும் அம்முறைமைதோன்ற—தெள்ளி அறிந்து—என்றார். அங்ஙனம் சுருதி முதலிய மூன்றானுந் தெளிந்தஞானம் திருவருள் ஞானமாகலின் அவ்வருள்ஞானமே தற்போதத்தையும் கரணங்களையும் தன்வசப்படுத்தும் ஆற்றலுடைத்தாகலின் அத்துணிபுதோன்ற—ஒழிவாய் ஒழிவாய்—என்றார். தற்போதமும் கரணங்களும் அருள்ஞான வசப்பட்டு தத்தம் செயலற்று ஒழிந்து நிற்பவே நினைப்பானது அருளிச்சையின் வழியே நின்று அன்புடையையாயிருத்தல் இயல்பென்னும் அவ்வியல்புதோன்ற—அன்புடையையாயின்—என்றார். நினைப்பு அன்பினியலைப்பெற்று நிற்கவரவே கிரியைக்குரிய கரணுதிகள் சரியை கிரியைகளினும், தற்போதம் ஆதார நிராதார யோகங்களினும் சென்று சென்று தேய்ந்து தேய்ந்து கரணங்களும் தற்போதமும் அன்பேயாய், ஆரேனுங் காணு அரனுகிய இறைவன் தலைப்படுமாறு நோக்கி நிற்கும் ஞானச் செயலுடைத்தாய், அச்செயலால் சிவமேயாய்ச் சிவானந்த முற்றிருக்கும் அவ்வானந்தத்தின் செயல்தோன்ற—ஏதேனும் செய்—என்றார்.

இதனுல், உள்ளென்பது –தற்போதமெனவும், புறம்பென்பது – சித்த முதலிய கரணங்களெனவும், தற்போதத்தை உள்ளெனச் சொல்ல வந்தது—ஆன்ம அறிவினுள் இருக்கும் நிலையைக் குறித்துச் சொல்லவந்த தெனவும், கரணங்களைப் புறம்பெனச் சொல்ல வந்தது—புறம்பேயிருக்கின்ற ஐம்புல விஷயங்களை நுகர்தற்குக் கருவிகளாயிருக்கும் நிலையைக் குறித்துச்சொல்ல வந்ததெனவும், நினைப்பென்பது—தற்போதத்தினிடத்தும், கரணங்களிடத்தும் மாறிமாறிச் செல்லும் இயல்புடைய ஆன்ம அறிவின் சங்கற்ப ரூபமெனவும், நினைப்பு ஒழியின் என்பது—ஆன்ம அறிவின் சங்கற்பரூபமாகிய நினைவு தற்போத வசப்பட்டு அதன் செயலாகிய சங்கற்ப விகற்பங்களை முளைக்கச் செய்தலாகிய செயலினின்றும், அங்ஙனம் முளைத்தவழியே புறக் கருவியாகிய கரணங்களோடுகூடி வேண்டுதல் வேண்டாமையாகிய செயல்களின் வசப்பட்டு இருவினையீட்டும் செயலில் நின்றும் நீங்கும் செயலைக் குறித்த தெனவும், உன்னிடையே வள்ளல் மாதிஞெடும் எழுந்தருளும் என்பது—ஆன்மாவின் இச்சா ஞானக்கிரியைகளிடையில்—இறைவன் தனது இச்சா ஞானக் கிரியைகளைக் கலப்பித்துத் தான் ஆன்ம நடுவினுள் கலந்தருளுந் தன்மையைக்குறித்தெனவும்,—தெள்ளி அறிந்து—என்பது---ஆன்மாவினது இச்சாஞானக்கிரியைகளில் இறைவனது இச்சாஞானக் கிரியைகளும், ஆன்மாவினிடத்தில் இறைவனும் கலத்தலாகிய அவ்வத்துவிதக் கலப்பை—ஆகமப் பிரமாணத்தானும், ஆசிரியர் உபதேச மொழியானும், அவ்விரண்டிற்கும் மாறுபாடின்றித் தன்கண்ணிகழும் அனுபவ நிகழ்ச்சியானும், கண்டுணர்ந்து அருளினல் ஆகமப்பிரமாணத்தை ஆய்ந்து ஆய்ந்து உபதேச மொழியைச் சிந்தித்துச் சிந்தித்துத் தெளியும் தெளிவே தெள்ளிய ஞானமென்று அறிவின்தெளிவைக் குறித்ததெனவும், ஒழிவாய் ஒழிவாய் என்பது—அருள் துணையாகக்கொண்டு ஆகமத்தை ஆய்ந்து, உபதேசமொழியைச் சிந்திக்கவரும் ஞானமே அருள்ஞானமெனப்படும் பதிஞானமாம் ஆகலின் அப்பதிஞானம்,—பசுஞான மெனப்படும் தற்போத ஞானத்தையும், பாசஞானமெனப்படும் கரணங்களின் உணர்வால் (ஞானத்திஞல்) நிகழும் செயல்களையும், அப்பிரகாசப்படுத்தும் ஆற்றலுடைத்தாகலின் அவ்வருள் ஞானத்தைக்கொண்டு பசுஞான பாசஞானச்செயல்களை ஒழிக்கும் வகையைக் குறித்ததெனவும், அன்புடைமையாயின் என்றது—அவ்வருள்ஞானம் அன்புண்டானல் உண்டாமன்றி அன்பில்லையாயின் அது உண்டாமாறில்லை ஆகலின், சிவஞானம் வேண்டுவோர் அன்புடைமையை வேண்டவேண்டும் என்பதைக் குறித்ததெனவும், செறிந்து ஏதேனும் செய் என்பது—இங்ஙனம் இறுதியாகக்கூறிய அன்பு ஒன்று இல்லையாயின் அருள் ஞானம் உண்டாகா எனவும், அது உண்டாகாதாகவே தற்போதச்சேட்டையும் கரணச்

சேட்டையும் அடங்கி யொழியா எனவும், அவை யொழியாவாகவே உன்னிடையே மேலே சொல்லியவாறு மாதினெடும் வள்ளல் எழுந்தருளுமாறும் இல்லை எனவும், அவ் வன்பினைப் பொருந்துமாறு இறைவன் விதித்திருக்கும் சரியை கிரியைகளெனப்படும் சிவதன்மத்தை வல்வினையினலாவது, மெல்வினையினலாவது, சிவயோகத்தை ஆதார நிராதார யோகமெனப்படும் இருவகை நெறியினலாவது இயற்ற வேண்டுமென்பதைக் குறித்ததெனவும் விதந்துகூறப்பட்டன.

ருஉ. கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்
கண்ணப்பன் ஒப்பதோர் அன்பதனைக்—கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யார்அறிதல் அல்லதுமற்
றாரறியும் அன்பன் றது. (2)

(எ - து) கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்று மணிவாசகமூர்த்திகள் அருளிச் செய்தபடியால், கண்ணப்பதேவர் தாம் ஒப்ப இயற்றிய பேரன்பாகிய அதனை, கண்ணப்பதேவர் தாம் அறிதல்வேண்டும், காளத்தியப்பர் தாம் அறிதல்வேண்டும், அவ் விருவரன்றி மற்றெவராலும் அவ்வன்பு அறியத் தக்கதன்று என்பதாம்.

கண்ணப்பதேவருக்கு ஒப்பானது—அன்பும், அன்பினுக்கு ஒப்பானவர்—கண்ணப்ப தேவருமேயன்றி கண்ணப்ப தேவருக்காவது, அன்புக்காவது வேருருவமானப் பொருள் இல்லை என்னும் அவ்வருமைதோன்ற—கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை—என்ருர். அவ்வுண்மையையறிந்து கூறிய பெருமானுர் சிவஞானபோத வள்ளலாகிய மணிவாசகமூர்த்திகளாகலான்—அம்மூர்த்திகளது பேரன்புதோன்ற—என்றமையால்—என்ருர். கண்ணப்பதேவருக்கு உருவம் அன்பாகவும், அன்புக்கு உருவம் கண்ணப்பதேவராகவும் நிச்சயிக்க வேண்டியதேயன்றி, கண்ணப்பதேவருக்கு வேருருருவமும், அன்புக்கு வேருருருவமும் எவ்வுருவமும் ஒப்பின்மையான், கண்ணப்பதேவருக்கு ஒப்பாகிய உருவம் அன்பே, அன்புக்கு ஒப்பாகிய உருவம் கண்ணப்பதேவரே என்னும் அவ்வருமையையே வலியுறுத்த—கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு—என்ருர். கண்ணப்பதேவரை விட்டு அன்பினையும், அன்பினைவிட்டு கண்ணப்ப தேவரையும் அறியக் கூடாமைபோல் கண்ணப்பதேவர் அறிந்த அன்புருவம் காளத்திநாதனுருடைய திருவுருவமாகவும், காளத்திநாதர் அறிந்த அன்புருவம் கண்ணப்பதேவருடைய திருவுருவமாகவும் காணப்பட்டனவாக வெளிப்பட்டதேயன்றி, கண்ணப்ப தேவர் தம்மன்பைச் சிவத்தைவிட்டு வேருகவும், காளத்திநாதர்—தம்மன்பை—கண்ணப்பதேவரைவிட்டு வேருகவும் கண்டனரில்லை என்றும், இருவரன்பின் ஒற்றுமை தோன்ற—கண்ணப்பர் தாமறிதல் காளத்தியார் அறிதல்—என்ருர். அவ்விருவரன்றி மற்றெவரும் தமது அன்புக்கு வேருகச் சிவத்தை அறிவார், அவ்வாறு அவரறிகின்ற போது சிவமும் தமது அன்புக்கு வேருக அவரை அறிவார். ஆகவே கண்ணப்பதேவரும் சிவத்தை அன்புருவமாகவே அறிவாராயினர். காளத்திநாதரும் கண்ணப்பதேவரை அன்புருவமாகவே அறிவாராயினர். இருவரன்பும் இவ்வாருக இவர்களது அன்பின் திறத்தை அறியவல்லவர் யாவருள்ளார் ; இல்லையென்பதே திண்ணம் என்பதுதோன்ற—மற்ருர்றியும் அன்பன்றது—என்ருர்.

இதனல் அன்பு நிலை இத்துணைத்தென்று விதந்து கூறப்பட்டது.

அஃதாவது—கண்ணப்பதேவர் கண்ணப்பரன்று சிவமே, மஹாதேவரும் சிவமென்னுந் தெய்வமன்று அன்பே—என்ருயிற்று. ஆகவே அன்பும் சிவமும் இரண்டென்று அறிகின்ற அறிவுடையவர் எவராயினும் அவரெல்லாம் அந்நிலையை அறியா அறிவிலாராகலான்—மற்ருரறியும் அன்பன்றது என்ருர். இதனையே “ அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவமாவது யாரும் அறிந்திலார் ” என்று திருமந்திரங் கூறிற்று. அன்பே சிவமாகவும், அன்பே கண்ணப்பதேவராகவுங் கண்ட பெரி

யார் சிவ ஞானபோதத்துட்பட்ட பேரறிவாளராய் நின்ற மணிவாசக மூர்த்தி களேயாவர். எங்ஙனமெனின், அப்பெரியார் நமக்குச் சிவபெருமான் ஞானகுருவாய் வந்து சிவஞான போதத்தையோதி நம்மை ஞானமயமாக்கிச் சிவ நிலையில் நிறுத்தினரே யன்றி அன்பு நிலையையோதி அன்பு மயமாக்கிச் சிவமாக்கினரில்லை என்றெண்ணித் தமது மணிவாக்கால் திருவாசகமோதி அன்பினையே வேண்டி வேண்டி அன்பே உரு வாய்ச் சிவமாயினரென்க.

எங்ஙனமெனின், சிவபுராணம்—விலங்கு மனத்தால் விமலா வுனக்குக், கலந்த அன்பாகிக் கசிந்துள்ளுருகும், நலந்தான் இலாத சிறியேன் என்றும், திருச்சதகம்—(௫) தவமே புரிந்திலன் தண்மலர் இட்டு முட்டாது இறைஞ்சேன், அவமே பிறந்த அரு வினையேன் உனக்கு அன்பருள்ளாம் சிவமே பெறும் திருவெய்திற்றிலேன்—என்றும், (ஷை - ௬) நின்றன் வார்கழற்கு அன்பு எனக்கு நிரந்தரமா யருளாய்—என்றும், (ஷை-௧௦) உனக்கன்பருள் யான் புகவேதகேன் என்றும், (ஷை - ௧௧) உனக்கு இடையறா அன்பு என்னுடகத்தே நின்றுருகத் தந்தருள்—என்றும், (ஷை - ௩௧) ஆடுகின்றிலை கூத்துடை யான் கழற்கு அன்பிலை என்றும், (ஷை - ௩௬) என்னையாண்டவன் கழற்கு அன்பு *** இன்றெனின் மற்றிதற்கு என்செய்கேன் வினையேனே என்றும்,(ஷை-௪௫) போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்து நின்று, ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன்—என்றும், (ஷை-௫௪) உனைக்காண்பான் அலவாநிற்கும் அன்பிலேன்—என்றும், (ஷை-௬௦) நாணம் இல்லா நாயினேன் நெகும் அன்பில்லை—என்றும்,(ஷை-௭௩)நின்கழற்கணே, மெய் கலந்த அன்பர் அன்பு எனக்கும் ஆகிவேண்டுமே—என்றும், (ஷை-௮௬) மெய்யன்பு பெற வேவல்லேன் அல்லாவண்ணம் பெற்றேன் என்றும், (ஷை-௮௭) அடியேற்கு உன் தாளிணையன்பு தாராய், * * * உன்தாளிணை அன்புக்கு ஆராஅடியேன் அயலே மயல் கொண்டு அழிகேனே—என்றும், (ஷை - ௯௦) யானேபொய் என்னெஞ்சும்பொய் என் னன்பும் பொய்யானல் வினையேன் அழுதால் உன்னைப்பெறலாமே, *** அடியேன் உனை வந்துறுமாறே—அருளாய் என்றும், (ஷை - ௯௪) நின்கழற்கு அன்பு என்கணேயில்லை—என்றும், (ஷை - ௯௯) எம்பிரான் வருக, என்னெனைப் பெய்கழற்கண் அன்பாய் என்னு வினைற் பன்ன எம்பிரான்வரும்—என்றும், (நீத்தல் விண்ணப்பம்-உ௩) பெற்றதுகொண்டு பிழையே பெருக்கிச் சுருக்கும் அன்பில் வெற்றடியேன்—என்றும், (பிரார்த்தனைப் பத்து. ௩)உடையாய், இங்கு எனைக்கண்டார் வெருளாவண்ணம் மெய்யன்பை நான் பெற வேண்டும். (ஷை-௪) தொண்டனேற்கும் உண்டாங்கொல், வேண்டாது ஒன்றும் வேண் டாது மிக்க அன்பே மேவுதலே—என்றும், (ஷை - ௬) அறவேபெற்றார் நின்னன்பர் அந்தமின்றி அகநெகவும், புறமேகிடந்து புலைநாயேன் புலம்புகின்றேன் உடையானே, பெறவேவேண்டும் மெய்யன்பு என்றும், (ஷை - அ) துணியா உருகா அருள்பெருகத் தோன்றும் தொண்டரிடைப்புகுந்து, திணியார் மூங்கிற் சிந்தையேன் சிவனே நின்று தேய்கின்றேன், அணியார் அடியார் உனக்குள்ள அன்புந்தாராய்—என்றும், (அச்சப் பத்து-௩) அன்பிலாதவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே—என்றும், எண்ணப்பதி கம்—செ. க - பாருருவாய பிறப்பறவேண்டும் பத்திமையும் பெறவேண்டும் சீருருவாய சிவபெருமானே செங்கமல மலர்போல், ஆருருவாய என்னாமுதே உன்னடியவர் தொகை நடுவே, ஓருருவாய நின்திருவருள்காட்டி என்னையும் உய்யக்கொண்டருளே, இவ்வாறு பன்முறையும் வேண்டிப் பின்னர் இறைவன்பால் தாம் வேண்டியபடியே அன்பினைப்பெற்றுச் சிவமாய் அருளால் ஓதுவாராயினர். சென்னிப்பத்து—செ-௬— சித்தமேபுகுந்து எம்மையாட்கொண்டு தீவினைகெடுத்து உய்யலாம், பத்திதந்து தன் பொற்கழற்கணே பன்மலர்கொய்து சேர்த்தலும், முத்திதந்து இந்தமூவுலகுக்கும் அப் புறத்து எமை வைத்திடும்—என்றும் (அச்சோப்பதிகம்-க) முத்திநெறி யறியாத மூர்க்க ரொடு முயல்வேனைப், பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்,சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட, அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார்—

என்றும், (ஸெ-ச) மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை, எண்ணமிலா அன்பருளி எனையாண்டிட்டு என்னையுந் தன், சுண்ண வெண்ணீ றணிவித்துத் தூய் நெறியே சேரும்வண்ணம், அண்ணல் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே —என்றும் ஓதியருளினவையேயாம்.

இம்மணிவாசகத்தாற் போந்தபொருள் என்னையோவெனின், இறைவனுக்கு ஞான வுருவம் ஒருருவமென்றும், அன்புருவம் ஒருருவமென்றும் அறிதல்வேண்டும். பெத்த நெறியில் நின்றும் நீங்கி முத்திநெறி நாடி அந்நெறி காட்டுவாரை யறியாது மூர்க்கரொடு முயலுங்காலத்து, இறைவன் அவர்களை அம்மூர்க்கரில் நின்றும் நீக்கி முத்திநெறி இது வென அவர்களுக்கு உபதேசிக்கவரும் ஆசிரியவுருவமே ஞானவுருவ மெனப்படும். அந்த மெய்ஞ்ஞான வுருவினராகிய அவ்வாசிரியர் ஒன்றாய் வேறாய் உடனாயிருக்கும் அத்வைதார்த்தப்பொருளாகிய பரசிவத்தையும்,அப்பொருளைத் தேர்தலாகிய ஞானத்தையும், தேர்ந்தவண்ணந் தன்னகத்துக் காண்டலென்னும் தெளிதலையும் உபதேசித்துப் பின் தெளிந்த அந்நிலை கைகூடுமாறு பத்திநெறி அறிவித்து அந்நெறியானே பழவினைகள் பாறும்வண்ணம் சித்தமலம் அறுவித்துச் சிவமாக்குவன். அஃதாவது—நின்மல சொரூப மாய்ப் பிரகாசிக்கச்செய்வன். அங்ஙனம் செய்தபின்னர் அவர்கள் ஆளும்வண்ணம் அவ ருள்ளத்துட்புகுந்து தன்னைவேறென்றெண்ணும் எண்ணம் இல்லாவண்ணம் செய்யவல்ல அன்பருளி அவ்வன்புருவாக்கித் தான் அவ்வன்பினுள்ளாய் அவ்வன்பேயாய், அவர்களைப் பாசக்ஷயம் செய்யவல்ல தன் சுண்ணவெண்ணீ றணிவித்து, தூய்நெறியே (அருள்செல் லும் நெறியே) சேரும்வண்ணம் செய்தலே அன்புருவ மெனப்படும்.

இதனால் மலசொரூபிகளாகிய ஆன்மாக்களை நின்மல சொரூபிகளாக்க புறத்தேவரும் குருவடிவம் ஞானவுருவமென்றும், அகத்தே அன்பினுள்ளாய்வரும் வடிவம் அன் புருவமென்றும் அறியக் கிடக்கின்றமை காண்க.

இவ்வுண்மை நன்கு விளங்கவே முதலிற் றொடங்கிய சிவபுராணத்துள்—விமலா வுனக்கு, விலங்குமனத்தால் கலந்த அன்பாகிக் கசிந்துள்ளுருகும், நலந்தானிலாத சிறி யேன்—என்று அன்பினைவேண்ட, வேண்டியபடியே மனம் அன்புடன்கலந்து உள்ளம் உருகும்வண்ணம், பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனாய், நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி, தாயிற்சிறந்த தயாவான தத்துவனாய், நேசவருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெட, நீராயுருக்கி ஆருயிராய்நின்று—என்றும், பத்தர்களும் சித்தர்களும் சூழப் பராபரன் பாரில் பார்ப்பானென எத்தனாகிவந்து சித்தமேபுகுந்து, அன்பு வடிவமாக்கின மையும் ஆகிய அதிசயத்தை முத்திநெறி யறியாத என்னும் திருப்பாசுரத்தானும், மண் ணதனில், என்னும் திருப்பாசுரத்தானும் முடித்துக் கூறியவாற்றா னறிக.

இவ்விரண்டு திருப்பாட்டானும் உந்தியாரில் "உள்ளும் புறம்பும் நினைப்பறில்" என்றதை—உள்ளும் புறம்பும் நினைப்பொழியில் என்றும், "நின்னுளே" என்றதை— உன்னிடையே என்றும், "மொள்ளா அமுதாம்" என்றதை —வள்ளல் எழுந்தருளும் மாதி னொடும் என்றும், "முளையாது பந்தம்" என்றதை —தெள்ளி அறிந்து அன்புடையாய்ச் செறிந்து (இருப்பையாயின்) ஒழிவாய் ஒழிவாய் என்றுங் கூறினர். இதனுண்மை நன்குவிளங்க பந்தத்தை முளையாவண்ணஞ் செய்வது அன்பு என்றும், அவ்வன்பின் செயலைச்செய்து பந்தத்தை முளையாவண்ணம் செய்யவேண்டுமென்பதை ஏதேனுஞ் செய் என்றும் கூறினர். அதன்பின்னர் உள்ளும் புறம்பும் நினைப்பறுக்குஞ் செயலைச் செய்வது அன்பாகலான் அவ்வன்பின் செயலைச்செய்யும் முறையும் அம்முறையே செய் யின் மொள்ளா அமுதம் உண்டாமுறையும் அது உண்டாயின் பந்தம்முளையாது போம் வகையும் அனுபவ முகத்தாற் கண்டுதெளிய – கண்ணப்பனொப்பதோர் என்னுந் திருப் பாட்டைக் கூறினரென்க.

இதனால், அன்பினாற்செய்யும்செயல் சிவானந்தப்பெருக்கைப் பெருக்கித் துன்பப் பெருக்கை யோட்டும் வகையைக் கூறியவாறா மென்க.

இத்திருப்பாட்டில் மற்றூறறியும் அன்பன்றது—என்றது என்னை யெனின், "அருளினல் ஆகமத்தே அறியலாம் அளவினலும், தெருளலாம் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே, மருளெலாம் நீங்கக்கண்டு வாழலாம் பிறவிமாயா, இருளெலாம் இரிக்க லாகும் அடியரோ டிருக்கலாமே" என்ற சித்தாந்த வசனப்படி அருளைக் கண்ணுகக் கொண்டு ஆகமத்தில் ஆசிரிய ருபதேச மொழியால் முப்பொருளைக் கேட்டு அளவையினல் சிந்தித்துத் தன்னறிவின்கண்ணே சிவஞானத்தான் மாசறத் தெளிந்து, பிறவி மாயாமைக்கு ஏதுவாகிய பாசக்ஷயமும் பண்ணி அடியரோ டிருக்கலாம் என்று ஆசைப் படும் அறிவுடையார் அன்பின்திறத்தை அறிவரேயன்றி அருளைவிட்டு தற்போதத்தைக் கொண்டு, வேதங்களையும், பதினெண்புராணங்களையும், இதிகாசங்களையும், ஸ்மிருதி களையும், கருமகாண்ட ஞானகாண்டங்களையும், தருக்க நூல்களையும் ஆராயும் ஆராய்ச்சியில் வல்ல அறிவினல் பாசக்ஷயம்பண்ணிப் பிரமமாயிருக்க எண்ணும் பிரமஞானிகளும், வேதமுதல் தருக்கம் ஈருகக்கூறிய ஒவ்வொன்றில் நின்று அதையதை யறியவல்ல அறிவிற் சிறந்தவர்களும் அன்பின் திறத்தைச் சிறிதேனும் அறியார் என்னும் உண்மையை அறிவுறுத்தியவாறுமென்க. (உசு)

உஎ. அவிழ இருக்கும் அறிவுடன் நின்றவர்க்
கவிழும் இவ்வல்லல்என் றுந்தீபற
அன்றி அவிழாதென் றுந்தீபற.

(எ-து - உ-யார்-என் - எனின்) அவிழ்க்கப்படாத பந்தம் அன்பினலன்றி அவிழ்க்க முடியாது என்று கூறிற்று.

(இ-ள்.) கட்டென்று சொல்லப்படும் பந்தத்தை அவிழ்க்கவிருக்கும் அறிவுடன் அன்போடு கலந்து நின்றவர்கட்கு அவாவினல் விளைந்த பாசகாரியமாகிய இத்துன்பங்களெல்லாம் ஒழிந்துபோம். அன்பின் கலப்பன்றி ஏனையவற்றல் நீங்காதென்க.

பந்தப்பட்டிருக்கும் ஆன்ம அறிவின் பந்தத்தை அவிழ்ப்பது பதியறிவாகலான் அவ்வறிவை—அவிழவிருக்கும் அறிவு எனவும், அவ்வறிவுடன் கலந்து நிற்பவர்க்கு அப்பதியறிவின்கணுள்ள வரம்பி லின்பம் அநாதிபந்தத்தால் விளைந்த அல்லல் தோன்றுவண்ணம் செய்யுஞ் செயலைச் செய்து ஒழிக்குமாகலான்—அவிழும் இவ்வல்லல் எனவும், கலக்குஞ் சாதனங்களன்றி ஏனைய சாதனங்களால் நீங்காதாகலான்—அன்றியவிழாது எனவும் கூறினர்.

பதி அறிவுடன் கலக்கும் சாதனம்—அன்புடைமை; ஏனைய சாதனம்—அன்பன்றிச் செய்யும் தீர்த்தயாத்திரை தியானுதிகள் சிவார்ச்சனை முதலாயின.

பதியின் குணம் அருளும், பசுவின் குணம் அன்பும், பாசத்தின்குணம் அவாவுமாம். அருளின்குணம்-தன்னைப்பற்றிய பொருளை அலையவிடாது இன்பத்தில் இருத்துவது. அவாவின் குணம் - தன்னைப்பற்றிய பொருளை அலையவிட்டுத் துன்பத்தில் ஆழ்த்துவது. அன்பின்குணம்-தன்னை யடுத்த பொருளைப் பற்றுதலும், பற்றிய அப்பொருளின் வசமாய் வேறுபடாது நிற்றலும், நின்று அப்பொருளான்வரும் இன்பத்துன்பங்களை அனுபவிப்பதுமாம். ஆகவே, அவிழவேண்டிய பற்றினைப் பற்றியிருக்கும் ஆன்மாவினது அன்பு அவிழ்க்க இருக்கும் அறிவுடன் கலக்கப்பெற்றாலன்றி அவிழவேண்டிய பற்றினல் உண்டாகிய அவாவெல்லாம் அவிழாவாகலான் அறிவுடன் நின்றவர்க்கு என்றவிடத்து அறிவுடன் அன்பு கலந்து என்றாம்.

இதனல், அன்பின் குணமுடைய பசுவாகிய ஆன்மா தனது அன்பை துன்பத்திலாழ்த்தும் அவாவில் கலக்கச்செய்யாது இன்பத்திலிருத்தும் பதியின் குணத்தில் கலக்கச்செய்யின் அல்லல் அவிழுமென்று கூறப்பட்டது.

திருக்களிற்றுப்படியார்

(நரு.) அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க—அவிழ்ந்தசடை
வேந்தனுர்க் கின்னமுதம் ஆயிற்றே மெய்யன்பில்
சேந்தனுர் செய்த செயல். (1)

(எ-து) (கண்ணப்பதேவர் மெய்யன்பிஞற் செய்த செயல் யாவரானும் அறிதற் கரிய அன்பின் செயலாயிருந்தது.) சேந்தனுராகிய பெரியார் மெய்யன்பிஞற் செய்த செயல் எத்திறத்ததோ எனின், விரிந்த சடையினையுடைய சிவபெருமான் உண்டருளு தற்கு, பாசக்கட்டுவிட்ட தம் மனத்தால் கிழிபட்டிருக்கும் வஸ்திரத்தில் ஊறிப் பதமாய்க் கிடக்கும் அவிழை அவிழ்த்து உண்ணும்படிக் காட்ட அவ்வவிழ் அவர் உண்ணும் நல்ல உணவாயிற்று என்பதாம்.

சேந்தனுர் மெய்யன்பிற் செய்த செயல், அவிழ்ந்த சடைவேந்தனுர்க்கு, அவிழ்ந்த மனத்தால் அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை அவிழ்க்க (அது) இன்னமுதம் ஆயிற்று என்று கொண்டு கூட்டுக.

பாசக்கூட்டத்தின் கட்டினை அவிழ்த்து இரிக்க (போக்கடிக்க) வல்லவன் சிவனே என்பது தோன்ற—அவிழ்ந்த சடைவேந்தன் என்றும், அங்ஙனமான அவிழ்ந்த சடை யானை "அப்பனே எனக்கு அமுதனே ஆனந்தனே அகம்நெக உள்ளூறுதேன், ஒப்பனே உனக்குரிய அன்பரில் உரியனுய் உனைப்பருக நின்றதோர், துப்பனே சுடர்முடியனே துணையாளனே தொழும்பாளர் எய்ப்பினில், வைப்பனே எங்கள் மன்னனே! எனை வையகத்து நையவைப்பதோ சொலாய்." (அங்ஙனம் என்னை வைப்பது உன் திரு வருளுக் கழகன்று; ஆகலின்) "நான் பாடவேண்டும், நான் நின்னையே பாடி நைந்து நைந் துருகி நெக்கு நெக்கு ஆடவேண்டும், நாயினேனுகிய நான் அம்பலத்தாடும் நின்கழற் போது கூடவேண்டும், நான் இப்புழுக்கூடு நீக்கிப் பொய்யெலாம் வீடவேண்டும், மெய் யர் மெய்யனே நின் வீடுதந்தருள்" என்று பாசக்கட்டினை அவிழ்க்கவல்ல மெய்யன்பிற் றலைப்பட்டு அவிழ்ந்திருக்கும் மனமுடையவரென்பது தோன்ற—அவிழ்ந்த மனத்தா லென்றும், அப்பெரியார் தமது மனத்திற் பொதிந்து கிடக்கும் பாசக்கட்டினை தவ விரத தியானுதிகளால் அவிழ்க்கத் தலைப்படாது மேலே சொல்லிப்போந்த அன்பின் செயலாலேயே அவிழ்த்த மனத்தைப்போலும் துணியும் அவிழ்ந்தது, அதிலுள்ள உண வும் அவிழ்ந்தி (பதமாயி) ருந்தது, அதனை அவிழ்ந்தமனத்தால் அவிழ்த்த அவ்வரிய நிலைதோன்ற - அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க என்றும், இயல்பாகவே பாசம் அவிழ்ந்திருக்கும் இறைவனுக்கு, இயல்பாக ஆன்மா வுக்கு இருக்கவேண்டிய அன்பு வரப்பெற்று அவ்வன்புடன் கொடுக்கும் உணவு எவ் வுணவாயினும் அதில் அன்பு நிறைந்திருத்தலின் அமுதம்போலும் இனிக்குமென்னும் அவ்விறைவனது அன்பு தோன்ற - அவிழ்ந்தசடை வேந்தனுர்க்கு இன்னமுதமாயிற்றே என்றுங் கூறினுர்.

(நச) சுரந்த திருமுலைக்கே துய்யசிவ ஞானம்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்ல - சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையாள் அன்பிருந்த ஆறு (2)

(எ - து.) (சேந்தனுர் செய்த அன்பு அவிழ்ந்த அன்பா யிருந்தது) உருகும் உள்ள முடைய பாண்டிமாதேவியாரது அன்பிருந்த வழி (எவ்வாறிருந்ததெனின்,) உமாதேவி யார் தனது தனத்தினின்றும் அருள்மயமாகிய சிவஞானப் பாலைப் பொழிய (அதனை)

ஆளுடைய பிள்ளையார் உண்டருளினர் என்று சொல்லக்கேட்ட அளவிலே பால் பொழிகின்ற தனமுடையவராயினர் என்பதாம்.

தாய்ப்பசுவானது—தன் கன்றன்றி வேறொரு கன்றை நினைத்தலும், அக்கன்றுக்குத் தான் தன் பாலை யூட்டுதலும் இல்லை யென்பதும், தன் கன்றையே தான் மறவாது நினைந்திருத்தலும், அது அம்மா வென்றழைத்த காலத்தும் பரிந்தோடி அதற்கே தன் பாலை யூட்டுதலும் இயல்பென்பதும் உலகம் ஒருதலையான் அறிந்திருக்கும் விஷயம். அஃதேபோல்—உமாதேவியார் தனது மகனராகிய ஞானசம்பந்தரை நினைந்து கொங்கையில் பால் சுரந்திருந்ததும், அப்பாலை "அம்மே யப்பா" என்று அழுதருளி உண்டதும் இயல்பேயாயிற்று என்னும் அவ்வுண்மை தோன்ற சுரந்த திருமுலைக்கே துய்ய சிவ ஞானம் சுரந்துண்டார் என்றார். இவ்வுண்மையைக் கேட்ட மங்கையர்க்கரசியார் - மகனர் அழுத ஞானத்தின் அருமைக்கும் அம்மையார் பாலூட்டி யருளிய அருட்பெருக்குக்கும் பயனாய் நின்றுருகும் அன்பினையுடைய உள்ளமுடையவர் என்னும் அவரது அன்பின் செயல்தோன்ற சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்ல சுரந்த தனமுடையாள் தென் பாண்டிமாதேவி தாழ்ந்த மனமுடையாள் அன்பிருந்தவாறு என்றார்.

அம்மூவரிடத்தும் சுரந்திருந்த அருளும், அன்பும், திருஞானமும், அநாதியே யுள்ளனவென்று அறியக்கிடக்கின்றன. ஏனெனின், சிவசத்திக்கு அருளுடைமை இடையே வந்ததென்று அறிவுடையார் கூறார். அஃதேபோல் ஆன்மாவுக்கும் அன்புடைமை இடையே வந்ததென்று கூறார். இங்ஙனம் சிவசத்திக்கு அருளும் ஆன்மாவுக்கு அன்பும் அநாதியே உள்ளனவென்று அறிந்த அறிவிற்பெரியார் ஞானசம்பந்தமூர்த்திக்கு இடையே ஞானம் வந்ததென்று கூறார். ஆகலின் உமாதேவியாரை (அருள்) சுரந்த திருமுலையார் என்றும், மங்கையர்க்கரசியாரை (அன்பு) சுரந்த தனமுடையார் என்றும், ஆளுடைய பிள்ளையாரை ஞானம் சுரந்துண்டார் பிள்ளை என்றும் கூறினர்.

இவ்வுண்மை தோன்றவே,—(திருஞான சம்பந்தசுவாமிகள் புராணத்தில் ௬௩) "மெய்ம்மேல் கண்துளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார், தம் மேலைச்சார்புணர்ந்தோ சாரும் பிள்ளைமைதானே, செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம் பார்த்து, அம்மே யப்பா என்று அழைத்தருளி அழுதருள" (எனவே திருஞான சம்பந்தமூர்த்திகள் தாம் சுப்பிரமணிய மூர்த்தியாகலின், தாம் எப்பொழுதும் உமாதேவியாருக்கும், உமாநாதனுக்கும் இடையில் நின்றருளும் இயல்புடையாராகலின் அந்த இருவருடைய சார்பினையும் இப்பொழுது பிரிந்திருக்கும் அதனையும் திருவுளத்தெண்ணி அவ்வாற்றாமையான் அம்மே அப்பா என்று அழைத்து அழுதருளினரோ! அதுவேயுமன்றி-அங்கு என்றும் இருக்கும் பிள்ளைமைப் பருவத்தைப்போல் இங்கும் அப்பிள்ளைமைப் பருவமாகவேயிருக்கும் அக்காரணத்தால் அப்பிள்ளைமைப் பருவத்தைச் சார்ந்திருக்குந் தன்மைக்கேற்றவாறு அம்மே யப்பா என்று அழைத்துப் பால் வேண்டி அழுதருளினரோ! இவ்விரண்டு காரணத்துள் ஒன்றைக்கருதியோ, அன்றி இரண்டினையுங் கருதியோ அழுதது, அதனை நாம் அறியும் தரமுடையோமல்லோம். அஃதங்ஙனமிருக்க, தந்தைதாய் அறியாதானைத் தந்தைதாயாக என்றும் பெற்றுடைய சுப்பிரமணிய மூர்த்தியாகிய திருஞான சம்பந்த மூர்த்திகள் தமக்கு அநாதியாக அம்மையப்பராகவே யுள்ள பார்வதி பரமேஸ்வரர்களை எண்ணித் திருமேனியெல்லாம் நனைய கண்ணீரைச் சிந்தி, செம்மேனி வெண்ணீற்றனாகிய நமது அப்பன் நமது அம்மையுடன் எப்பக்கம் வருகின்றானென்று அழுதுகொண்டே சுற்றிப்பார்த்து வரும்போது திருத்தோணியப்பருடைய சிகரத்தின்மேல் அம்மையப்பர் வந்திருக்கக் கண்டு ஆராமை மேலிட்டு அவ்வம்மையப்பருடைய தோடுடைய செவியில் புகுமாறு அம்மே அப்பா என்று ஓவென்றலறியழ), என்றும் (ஷை-௬௪) "அந்நிலையில் திருத்தோணி வீற்றிருந்தார் அருள் நோக்கால், * முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னி" (எனவே

* "பாலனாயதொண்டு செய்து பண்டும் இன்றும் உன்னையே" எனுந்தேவாரத்தானறிக.

பிள்ளையார் முன்னிலையைத் தாம் நினைத்ததுபோலும், இறைவனும் தமக்கும் தம்மை யுடையாளுக்கும் இடையே நின்று தம்மிருவர்க்கும் இனிய முகமும் இனிய புன்னகை யும் இனிய மழலைச்சொல்லும் இடைவிடாது வழங்கிவந்த அத்திருத்தொண்டினை நாடி திருவுளமிரங்கி அக்கணமே) என்றும் "அவர்க்கு அருள்புரிவான் பொன்மலை வல்லியுந் தாமும் பொருவிடைமேல் எழுந்தருளி, சென்னியிளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார்" என்றும், அங்ஙனம் வந்தவர்,(ஷை சூ௫)"திருமறைநூல் வேதியர்க்கும் தேவியர்க்கும் தாம்கொடுத்த, பெருகும்வரம் நினைந்தோதான்" (எனவே—சிவபாத இரு தயர்க்கும் அவரது தேவியாராகிய பகவதியாருக்கும் முன் தாம் கொடுத்த சிவ ஞானம் பெருகும் வரத்தைத் திருவுளத்தி லெண்ணித் தானே அஃதாவது ஷை கஅ "ஏதமில்சீர்ச்சிவபாத இருதயர்தாம் மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்ம் மிகுத்தே, ஆதி யருமறைவழக்கம் அருகி அரனடியார்பால், பூதிசாதன விளக்கம் போற் றல் பெறாது ஒழியக்கண்டு, இடருழந்தார்" ஆகி கக "மனையறத்தில் இன்பமுறு மகப் பெறுவான் விருப்புறுவார், அனையநிலை தலைநின்றே ஆடிய சேவடிக் கமலம், நினைவுற முன்பரசமயம் நிராகரித்து நீறாக்கும், புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றுந் தவம் புரிந்தார்" அங்ஙனம் அவர் தவம்புரிந்தபடியே, தான் தன் மகனாகிய முருகனையே அவரது அரிய மகனாகத் தந்து அவர் வேண்டுகோளின்படியே "பரசமய நிராகரணஞ் செய்யவும், அடியார் பால் பூதிசாதனம் விளங்கவும், ஆதி அருமறை வழக்கம் அருகாது தழைத்தோங் கவும், மிகுசைவத்துறை விளங்கவும், பூதபரம்பரை பொலியவும் வேண்டுமாகலான், ஷை சூ௫) "தம்பெருமைக் கழல்பேணும், ஒருநெறியில் வருஞானம் கொடுப்பதனுக்கு உடனிருந்த, அருமறையாளுடையவளை,—பார்த்தருளித் துணை முலைகள், பொழிகின்ற பால் அடிசில் பொன் வள்ளத்து ஊட்டென்ன" அருளினரென்றும், அங்ஙனம் அரு ளியபோது இறைவன் திருவுள்ளக்குறிப்புணர்ந்து, உமையம்மை சென்றணைந்து வார் இணங்கு திருமுலைப்பால் (பொன் வள்ளத்துக்) கறந்தருளி" (சூஅ) எண்ணரிய சிவ ஞானத்து இன்ன முதங் குழைத்தருளி, அடிசில் உண்ணு என்று எதிர்நோக்கும் கண் மலர் நீர் துடைத்தருளிக் கையிற் பொற்கிண்ணம் அளித்து அண்ணலை (தனது பிள் ளையை) அங்கு அழுகைதீர்த்து அங்கணனர் அருள்புரிந்தார்" என்றும், அங்ஙனம் பாலுண்ட அப்பிள்ளையார் அப்பாலில் குழைத்து உண்ணுவாய் உண்ணுவா யென்று மனமுறுகி ஊட்டி யருளிய அப்பாலில் "அந்நிலையில் (அக்கணத்திலேயே) சிவன டியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானத்தையும், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானத்தையும், உவமையிலாக் கலைஞானத்தையும், உணர்வரிய மெய்ஞ்ஞானத் தையும் உணர்ந்தார்" என்றும், அஃதாவது முன்னர் தேவர்களுக்கிரங்கி சூரசங்காரத் தின்பொருட்டு ஏகாதச உருத்திரர்களை தோமர முதலாகச் சொல்லப்பட்ட படைகளாக வும், ஞானசத்தியை வேற்படையாகவும் கொடுத்துச் செல்லவிட்டதுபோல், சமண்சாக் கியர் முதலாகச் சொல்லப்பட்ட புறச்சமய அசுரக் களைகளைக் களைந்தெறிய சிவபாத இருதயர் வேண்டியபடியே அருட்பாலிலே ஞானங்களெல்லாம் சர்க்கரையைப்போற் கலந்து ஊட்டியருள தேவியாருக்குக் கட்டளை யிட்டருளி அஃதாவது—உமையம்மை யார் தாம் பிள்ளையாருக்கு ஊட்டக் கறந்த பாலில் எண்ணரிய சிவஞானத்தைக் குழைத் துக்கொடுத்தாரென்றும், அக்கணமே சிவஞானமுதலிய ஞானங்களை யுணர்ந்தாரென்றுங் கூறிய கருத்தின் நோக்கம் இதுவென உணர்த்தியவாறும்.

எனவே, பகவதியாகிய உமாதேவியார் அருளாதலால் அவர்பால் சுரக்கும் பாலும் அருளேயாகும், அவ்வருட்பாலையே முன்னுண்டிருந்தவர் குகனேயாம். அவர் இம்மண் ணுலகில் பகவதியார்பால் வந்தது சைவசமயிகளுக்குள் சத்தினி பாதர்க்கெல்லாம் ஞான சம்பந்தம் உண்டாகச் சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானமும், சத் தினிபாதம் வரப்பெறாதார்க்கெல்லாம் அது வருமாறு பவமதனையற மாற்றும் பாங்கி னில் ஓங்கிய ஞானமும், இவ்விரு ஞானமும் ஞானசிரியர் முகமாய் அருணூலைக் கேட்

டுச் சிந்தித்தாலன்றி விளங்காதாகலான் அது விளங்குமாறு உவமையிலாக் கலைஞானமும், அங்ஙனங் கேட்டுச் சிந்தித்த பின்னர் தெளிந்துக் கூடுவதாகிய நிட்டையின்கண் உணர்தற்கரியது அநுபவஞானமாகலான் அது வருமாறு உணர்வரிய மெய்ஞ்ஞானமும் வழங்க உணர்ந்தருளினரென்க.

இதனால் பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப்பத்தி பண்ணும் தொண்டர்க்கு சிவனடியே சிந்திக்கும் சிவஞானமும் பிறவியை மாற்றும் பாங்கினையுடைய திருவருள் ஞானமும், நாலோதி வீடுகாதலிக்கும் சன்மார்க்கருக்குக் கலைஞானமும் அனுபவ ஞானமாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானமும் அநுக்கிரகிக்க இறைவன் எண்ணி அதனை ஆளுடைய பிள்ளையாருக் குணர்த்த உமாதேவியாருக்குக் கட்டளையிட்டாரென்றும், அதன்படி தேவியும் பிள்ளையாருக்கு அதனை யுணர்த்துவாராய் அந்த ஞானங்களைப் பால்ரூபமா யூட்டினாரென்றும், பிள்ளையாரும் அதனைத் தமதுள்ளத்துள் கொள்வது போல் உண்டாரென்றும் அறிவுடையார் அறியக்கிடக்கின்றமை காண்க.

௫௫. அன்பேஎன் அன்பேஎன் றன்பால் அழுதரற்றி
அன்பேயன் பாக அறிவழியும்—அன்பன்றித்
தீர்த்தந்தி யானம் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான். (3)

௫௬. எல்லார் அறிவுகளின் தாற்பரியம் என்னறிவு
செல்லும் இடத்தளவும் சென்றறிந்தேன்—வல்லபடி
வாதனையை மாற்றும் வகைஇதுவே மற்றவற்றுள்
ஏதமறக் கண்ட விதம். (4)

(எ-து) (பாண்டிமாதேவியாரது அன்பு—சுரந்த அன்பாயிருந்தது. இங்ஙனங் கூறி வந்த கண்ணப்பதேவரிடத்தும், சேந்தனரிடத்தும், பாண்டிமா தேவியாரிடத்தும் அன்பே வெளிப்பட்டு அழியவேண்டிய அறிவை யழித்து, தலைப்படவேண்டிய அறிவைத் தலைப்படுத்தியதாகத் தெரியவருகின்றபடியால், அஃதேபோல்) யாவராயினும் அழியவேண்டிய நான் என்னும் அறிவு அழியவேண்டுமாயின் அன்பே என்றும் என்னன்பே என்றும் அன்பு மீதூர்ந்து அழுது வாயாற் கதறப்பெறின் அழியும். தலைப் படவேண்டிய அறிவு தலைப்படவேண்டுமாயின் அழுதரற்றும் செய்கையையே செய்யக் கடவர். இவ்வகையான அன்பினைக் கொள்ளாது தீர்த்தயாத்திரைகளேனும் தியானாதிகளேனும் சிவார்ச்சனைகளேனும் யாவர் செய்யப்பெறினும் அவை வேதசிவாகமங்களால் சொல்லப்படும் பயன்களைத் தருவன அன்று. (3) எல்லாச் சமயவழியினும் எல்லா நூல் வழியினும் சென்ற அறிவினையுடைய அறிவாளிகளால் நிச்சயித்துரைக்கப்பட்ட தாற்பரியங்கள் எவ்வளவோ அவ்வளவினும், என்னறிவானது எவ்வளவுசெல்லவேண்டுமோ அந்த இடத்தளவும் சென்றது. யானும் அவ்வறிவுடன் சென்று அவற்றின் உண்மைகளைத் தெளிவாயறிந்தேன். (அங்ஙனம் அறிந்தவற்றுள்) ஐயவிபரீதங்கட் கிடனின்றிக் முடிந்தவிதமாய்க் கண்டது அன்பொன்றேயாம். ஆகலின், தற்போதத்தால் விளையுந் துன்பத்தை மாற்றவேண்டுமாயின் அவ்வன்மையுடைய அன்பன்றி வேறொன்றில்லை. (4) என்பதாம்.

அன்பே என்னன்பே என்று அன்பால் அழுதரற்றி(னால்) அறிவழியும் அன்பே அன்பாக (ஆகும்) (3) எனவும், என்னறிவு செல்லும் இடத்தளவும் சென்றறிந்தேன், மற்றவற்றுள் ஏதமறக் கண்டவிதம், வாதனையை மாற்றும்வகை (யில்)வல்லபடி இதுவே (4) எனவுங் கொண்டு கூட்டுக.

முன்னர் "உள்ளும்புறம்பு நினைப்பறின் நின்னுளே, மொள்ளா அமுதாமென் றுந்தீபற, முளையாது பந்தம் என்றுந்தீபற" என்றும், "அவிழவிருக்கும் அறிவுடன் நின்ற

வர்க் கவிழும் இவ்வல்லல் என்றுந்தீபற, அன்றியவிழாதென் றுந்தீபற'' என்றும் முடித்துக் கூறிய அப்பொருள்களுக்குக் "கண்ணப்பனெப்பதோர்" என்னும் திருவெண்பா முதல், "அன்பே" என்னும் இத்திருவெண்பா வரை முடிவிடங் கூறியதென்க.

அஃதாவது "உட்கருவியாயிருக்கும் தற்போதத்தினுள்ளும், புறக்கருவியாயுள்ள மனமுதலிய கரணங்களுள்ளும் இதுபோதம், இவை கரணம் என்னும் நினைவற்றுப் போமாயின் அறிவாகிய நின்னுள்ளே நின்ற சிவத்தினது ஆனந்தம் பெருகும்; அது பெருகவே, முன் உள்ளும் புறம்பும் பரவியிருந்த பந்தம் முளையாது என்றும், கட்டென்று சொல்லப்படும் பந்தத்தை அவிழ்க்க இருக்கும் அறிவுடன் நின்றவர்க்கு அவாவினல் விளைந்த பாசகாரியமாகிய துன்பங்களெல்லாம் ஒழிந்துபோம்; அது அன்பின் கலப்பன்றி ஏனையவற்ருல் நீங்காது என்று கூறப்பட்டனவேயாம். இவற்றின் விரிவை முன்னர் அவ்வவ்வுந்தியாரினும், திருவெண்பாக்களினும் கூறியுள்ளோமாகலின் ஆண்டுணர்க.

அங்ஙனமாயினும் ஈண்டு எடுத்துக்காட்டலென்னும் உத்தியான், முடித்துக்கூறிய அதனையும் முடிவிடம் கூறல் என்ற இதனையும் எடுத்துச் சில காட்டுவாம்:—

இனி முடித்துக் கூறியது என்னை யெனின், உள்ளும் புறம்பும் நினைப்பு அற வேண்டுமென்றும், அது அறுமாயின் மொள்ளா அமுதாமென்றும், அவ்வமுதம் மேலிடுமாயின் பந்தம் முளையாது என்றும், பந்த முளையாதொழியினும், அதன் காரியமாகிய துன்பக்கட்டுகள் அவிழாவென்றும், அவை அவிழவேண்டுமாயின் அறிவுடன் நிற்க வேண்டுமென்றும் கூறிவந்தனவேயாம்.

இனி முடிவிடங்கூறியது என்னையெனின்,—அன்பே முடிவிடம் என்றும், அவ்வன்புக்கிடம்—கண்ணப்ப தேவரும், சேந்தனரும், பாண்டிமாதேவியாரும் என்று திருவுந்திக்குரையாகிய திருவெண்பாக்களில் கூறிவந்தனவேயாம்.

எனவே பந்தம் முளையாமைக்கும், அதன் காரியமாகிய துன்பக்கட்டு அவிழ்தற்கும் இடம் அன்பே என்றும் அதுவன்றி வேறென்றில்லை என்றும், அவ்வனுபவத்தைக் கண்ணப்பர் முதலிய மூவரும் செய்த விதத்தாற் காணலாமென்றுங் கூறியவாறுமென்க.

அஃதாவது—பிரகாசச் செயலால் சூரியன் என்னும் உருவத்தையும், சுடுஞ் செயலால் அக்னி என்னும் உருவத்தையுங் காணக் கிடத்தல்போல் அன்பினை அறியவேண்டுமாயின் அதன் செயலைக்கொண்டே அறியக்கிடத்தலின், அச்செயலை விளக்கிய அம்மூவரையும் ஈண்டு முறையே எடுத்துக் கூறினரென்க.

இங்ஙனங் கூறிய மூவருள் கண்ணப்பதேவரது அரிய செயலை பின்வரும் ஆசிரியர் சேக்கிழார் அருளிய அருட்பாக்களால் தெள்ளிதின் அறியக்கிடக்கின்றமை காண்க:—

கண்ணப்பர் புராணம் (௧௫௯) சிவகோசரியரிடத்து இறைவன் கனவின்கண் சென்று அவரை நோக்கி, "வன்றிறல் வேடுவன் என்று மற்றவனை நீ நினையேல், நன்றவன்றன் செயல்தன்னை நாமுரைப்பக் கேளென்று" (௧௬௭) "அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும், அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும், அவனுடைய செயலெல்லாம் நமக்கு இனியவாம் என்றும், அவனுடைய நிலை இவ்வாறு அறி நீ என்றருள் செய்வார்" (௧௬௮) "பொருப்பினில் வந்து அவன்செய்யும் பூசனைக்கு முன்பு என்மேல், அருப்புறும் மென்மலர் முன்னை அவைநீக்கும் ஆதரவால், விருப்புறும் அன்பெனும் வெள்ளக்கால் பெருகிற்று எனவீழ்ந்த, செருப்படி அவ்விளம் பருவச் சேவடியிற் சிறப்புடைத்தால்'' (௧௬௯) "உருகிய அன்பு ஒழிவின்றி நிறைந்த அவன் உருவென்னும், பெருகியகொள் கலமுகத்தில் பிறங்கி யினிதொழுகுதலால், ஒரு முனிவன் செவியுமிழும் உயர்கங்கை முதற்றீர்த்தம், பொருபுனலின் எனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம்'' (௧௭0) "இம்மலைவந்து எனையடைந்த கானவன்றன் இயல்பாலே, மெய்ம்மலரும் அன்புமேல் விரிந்தனபோல் விழுதலால், செம்மலர்மேல் அயன் நெடுமால் முதற்றேவர் வந்துபுனை, எம்மலரும் அவன்தலையால் இடுமலர்போல் எனக்கொவ்வா" (௧௭௧) "வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ எனும் அன்பால், நையு

மனத்தினிமையினில் நையமிக மென்றிடலால், செய்யுமறை வேள்வியோர் முன்புதரும் திருந்தவியில், எய்யும்வரிச் சிலையவன்றன் இட்டவூன் எனக்கினிய'' (கக௨) ''மன்பெருமா மறைமொழிகள் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கும், இன்பமொழித் தோத்திரங்கள் மந்திரங்கள் யாவையினும், முன்பிருந்து மற்றவன்றன் முகமலர அகநெகிழ்ந்த, அன்பில் நினைந்து எனையல்லால் அறிவுறு மொழிநல்ல.'' எனவரும் இவ்வேழு திருப்பாக்களானும் முடித்துக்கூறிய முடிபுரையின் பொருளை அனுபவ முகத்தால் உய்த்துணர்ந்து தெளியக்கிடக்கின்றமை காண்க.

அஃதாவது கண்ணப்பதேவருக்கு உள்ளும் புறம்பும் நினைப்பற்றமையும், பந்தம் முளையாதொழிந்தமையும், பாசகாரியமாகிய கட்டுகள் அவிழ்ந்தமையும், அறிவு அன்புடன் கலந்து நின்றமையும், அறிவு அன்புடன் கலந்து அன்பாகாரமா யிருந்ததுபோல் சிவம் அருட்சத்தியோடு கூடி அவருள்ளத்தில் மொள்ளா அமுதாய் நின்றமையுமேயாம்.

இங்ஙனங் கூறிவந்தவற்றுள் அன்பினால் கட்டவிழ்க்கு முறைமையை விதந்து கூறுவானெண்ணி சேந்தனர் அன்பினால் கட்டவிழ்த்த செயலையும், அஃதேபோல், அறிவு அன்புடன் கலந்து நின்ற காலத்து அவ்வறிவினிடத்து அன்பு சுரக்கும் அதிசயத்தை விதந்து கூறுவானெண்ணி பாண்டிமாதேவியார், துய்ய சிவஞானம் சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லிய அவ்வளவில் அன்பினால் சுரந்த தனமுடையராயும் அன்பிற்றாழ்ந்த மனமுடையராயும் இருந்த அரிய செயல்களையுங் கூறினமைகாண்க.

இன்னும் விரிப்பின் அடங்கா; முன்னே கூறியுள்ள உரைமுகத்துக்காண்க.

அங்ஙனங் கூறியனவேயன்றி, அவர்களுடைய அன்பின் செயல்கள் சரியையாதி நான்கின் வழியில் நின்றனவேயன்றி அவ்வழிவிட்டு வேறு வழியில் நில்லாமையாகிய சன்மார்க்கத் திறத்தை விதந்து கூறுவானெண்ணி, ''அன்புடையையாயின் செறிந்தொழிவாய் ஏதேனும் செய்'' என்றார்.

அஃதாவது புறம்பே இந்திரியங்களின் வழி உழலும் நினைப்பினை யொழிப்பது—சரியை, அகத்தே கரணங்களின் வழியுழலும் நினைப்பை யொழிப்பது—கிரியை, அவ்விருவழியினும் உழலும் நினைவின் வழியேசெல்லும் போதத்தையொழிப்பது—யோகம், அப்போதத்தின் வழி அலமரும் ஆன்ம அறிவை அலமர (சுழல) வொட்டாது தன்னிலையில் நிற்கச் செய்வது—ஞானம், அங்ஙனம் நின்ற ஆன்ம அறிவின் கண் உதிப்பது—அன்பு. ஆகலின் அவ்வன்பினை ''உள்ளும் புறம்பும் நினைப்பறின் நின்னுள்ளே மொள்ளா அமுதாம்'' என்றார். ஞானத்தின்கண் தோன்றிய அன்பு—சரியையின் வழியாய் இந்திரியங்களிடத்தும், கிரியையின் வழியாய்க் கரணங்களிடத்தும், யோகத்தின் வழியாய்த் தற்போதத்தினிடத்தும், ஞானத்தின் வழியாய் ஆன்ம அறிவினிடத்தும் கலந்து முதிரப்பெறின் அனாதி ஆணவபந்தமும், தொல்லையிரும் பிறவியின்வழி வந்தணுகும் வாதனைகளும் ஒருங்கே யொழியுமாகலின்—முளையாது பந்தம்—என்றார்.

சரியை கிரியா யோகஞானங்களின்வழியாய் அன்பு மொள்ளப்படுவதேயன்றி, இந்திரியங்கள், கரணங்கள், போதம், ஆன்ம அறிவு ஆகிய இவைகளிற்றின் செயல்களால் முகக்கப்படுவதன்றாகலான்—நின்னுளே மொள்ளா—என்றார். இந்திரிய முதல் ஆன்ம அறிவு வரை—சரியை யாதி நான்கும் கலக்கப்பெறின் அவை அழிவெய்தலின்றி அன்பின் வசப்படுதலின்—அமுதாம்—என்றார்.

இவ்வுண்மை தோன்றவே ''உள்ளும் புறம்பும் நினைப்பொழியின் நின்னுளே, வள்ளல் எழுந்தருளும் மாதினொடும்—தெள்ளி, அறிந்தொழிவாய் அன்றியே, அன்புடையையாயின், செறிந்தொழிவாய் ஏதேனும் செய்'' என்றார் பாட்டுரையார். (திருக்களிற்றுப்படியார்) அஃதாவது அன்பினை யிழந்து ஞானத்தையே பயனாக விரும்பினவர்—சரியை கிரியா யோகங்களைச் சாதன வியலாக்கொண்டு சிவஞானத்தைப்பெற்று, முத்திநெறியறியாத பாசஞான பசுஞானிகளைப்போல் மூர்க்கராய்ச் சிவபோகத்தை எய்தப்பெறாது வாதனைகளால் தாக்குண்டு அல்லற்பட்டொழிவாராகலின்—இதனைத் தெள்ளி

யறிந்தொழிவாய் என்றும், ஞானத்தின் பயனுக அன்பு கைவரப்பெற்றவர்—சரியை கிரியா யோகங்களின் வழியாய் பத்திநெறியைக் கைப்பற்றி பழவினையாகிய ஆணவ பந்தத்தினின்றும் விடுபட்டு சித்தமலமாகிய வாதனைகளை யறுத்து, சிவமாய் சிவபோகிகளாய் சிவ ஞானிகளாய் சரியை கிரியா யோகஞானங்களைப் பயனியலாகக்கொண்டு தமதுள்ளத்தில் மாதிஞெடும் வள்ளல் எழுந்தருளப்பெற்று சரியையினுலாவது கிரியையினுலாவது யோகத்தினுலாவது ஞானத்தினுலாவது அடிமைத்திற மியற்றிச் சிற்பரச் செல்வராய் வாழ்வாராகலின் "அன்புடையையாயின் செறிந்தொழிவாய் ஏதேனுஞ் செய்" என்றுங் கூறினுர்.

இனி "எல்லார் அறிவுகளின் தாற்பரியம் என்ற திருவெண்பா பிறர்தம் மதமேற் கொண்டு களைவென்னும் மதத்தையும் தானுட்டித்தனுது நிறுத்தல் என்னும் மதத்தையுங் கொண்டெழுந்த தென்க.

அஃதாவது, எல்லார் அறிவுகளின் தாற்பரியம் என்னறிவு செல்லு மிடத்தளவும் வல்லபடி சென்றறிந்தேன் மற்றவற்றுள் ஏதமறக்கண்டவிதம்—என்றது பிறர்தம்மதம் மேற்கொண்டு களைவு எனவும், வாதனையை மாற்றும் வகையிதுவே—என்றது தானுட்டித் தனுது நிறுத்தல் எனவுங்கொள்க.

எல்லார் அறிவுகளின் தாற்பரியம்—என்றது ஆன்மஞான சிவஞானங்களைப்பற்றியும், சீவன் முத்தி பர முத்திகளைப்பற்றியும், அபரஞான பரஞானங்களைப்பற்றியும், பாசஞான பசுஞானங்களைப்பற்றியும், சரியையாதிகளைப்பற்றியும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்பவைகளைப்பற்றியும், இவைபோலும் பிறவற்றையும் தத்தம் அறிவுக்கேற்றவாறு கொண்டு அவை யிற்றைத் தத்தம் மதம்பட ஆராயும் அறிவுடையார் எடுத்துக்கூறும் தாத்பரியங்கள் என்க.

என்னறிவு - என்றது சிவன்றன் திருக்கடைக்கண் சேர்ந்துள்ளதும், அவன்றன் அடிக்கீழ் அடங்கியுள்ளதும், இதுவாகும் இதுவல்லது எனும் பிணக்கதின்றி நீதியினுல் இவையெல்லாம் ஓரிடத்தே காண நிற்பதுமாகிய சித்தாந்த நூலிற் சென்ற அறிவு என்க.

செல்லுமிடத்தளவும் சென்றறிந்தேன்—என்றது புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என வகுக்கப்பட்ட சமயிகளால் வகுத்துக் கூறப்படும் பிரமாணம் பிரமேயம் பிரமாதா பிரமிதி என்று கூறும் அந்நான்கினிடத்துஞ் சென்று சித்தாந்த நூலுணர்ச்சியைக் கொண்டு அவரவர்கள் மதங்களைத் தெளிந்தறிந்த துணிபுரை என்க.

வல்லபடி வாதனை - என்றது ஞானிகள் பரமேஸ்வரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனுகி நின்று அவனருளால் அல்லது தான் ஒன்றுஞ் செய்யாமையை யுணர்ந்து அவனருளின் வழி நிற்க வருங்காலத்தும் இங்குளிவாங்குங் கலம்போல முன்னுள்ள பயிற்சி வயத்தால் ஒரோ வழியானே அங்கு அகங்காரங் கொண்டு நிற்பவரைப்போலவரும் நான் என்னும் உள்ளமும், அதுபற்றி அனுபவிக்க வரும் பிரார்த்த வினையும், அதற்கு வாயிலாகிய உடம்பு முதலிய மாயேயமு மென்க.

மற்றவற்றுள் ஏதமறக்கண்டவிதம் இதுவே—என்றது பரமேஸ்வரனுேடு ஏகமாய் நின்றவிடத்தும் அவனருள்வழி நின்றவிடத்தும் வந்து கூடும் வன்மையுடைய உள்ளமும் பிரார்த்தவினையும் உடம்பும் ஆகிய இக்குற்றங்கள் தன்னை வருத்தாது நீங்கக்கண்ட விதம் அன்பொன்றே என்க.

இந்நான்கு திருப்பாட்டானும் சரியை கிரியா யோகங்களின் திறமும், அம்மூன்றின் திறமாகிய ஞானத்தின் திறமும், அந்த ஞானத்தின் திறமாகிய அன்பின்திறமும், அவ்வன்பின் திறம்—எல்லார் அறிவுகளின் தாற்பரியங்களைப் புறப்புறமாகவும் புறமாகவும் அகப்புறமாகவும் அகமாகவும் ஆங்காங்கு நிறுத்தி பந்தமுளையாகிய வாதனையை வல்லபடி மாற்றும் வகையுடைத்தாய்ச் சித்தாந்தத்தால் நாட்டப்படும் தனிமுதலாய் நிற்குந்திறமும் விதந்து கூறப்பட்டன.

இந்நான்கு திருப்பாட்டானும் உந்தியாரில், "அவிழ விருக்கும் அறிவுடன் (அன் போடு) நின்றவர்" என்றதை--அவிழ்ந்த துணியில் என்னும் வெண்பாவில் சேர்தனுரை யும், சுரந்த திருமுலைக்கே என்னும் வெண்பாவில் பாண்டிமாதேவி யாரையும் குறித்து, அங்ஙனம் அவர் நின்றது அன்போடு நின்ற நிலை என்று குறித்தற்கு--மெய்யன்பில் அவிழ்ந்த மனத்தால் (நின்றவர்) என்றும், தாழ்ந்த மனமுடையாள் அன்பிருந்தவாறு என்றும், "அவிழு மிவ்வல்லல்" என்றதை-அன்பே என் அன்பே என்றன்பால் அழுதாற் றினல்அறிவழியும் அன்பே அன்பாக (ஆகும்.) என்றும், "அன்றி அவிழாது" என்றதை- அன்பன்றித் தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யுமவை சாற்றும் பழமன்றேதான் என்றும், எல்லார் அறிவுகளின் * * * ஏதமறக்கண்ட விதம் என்றுங் கூறினர். (உஎ)

உஅ. வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னார்களென் றுந்தீபற
பெறுவதங் கென்பெண்ணே யுந்தீபற.

(எ-து. உ-ர் என்-எனின்) அன்பினை யுதிப்பிக்கும் சிவஞானத்தி னுண்மையினை யும் உயர்வையும் உணர்த்தி அன்பிழந்தாரை இழித்துக் கூறிற்று.

(இ-ள்.) பெண்ணே! முளைக்கும் வித்தினைத் தேடி, தேடிய அவ்வித்து முளைக் கும் அப்பருவத்தில் அவ்வித்தினைக் கைவிடுவாராயின், அவர்கள் பித்து மிகுந்தவர்க ளன்றோ? அவர்கள் பெறும்பயன் யாதுளது? இல்லையென்க.

வித்து - சிவஞானம். முளை - அன்பு. பித்து - தற்போதஞானம். வித்தினின் றும் வெளிப்பட்ட முளையைக் கண்டவர், இது வித்தினின்றுந் தோன்றியமுளையாமென் றுணராமல் அம்முளையைக் கைவிடுவாராயின் அவர் பித்தனேடொப்பர்.

வித்தானது முன் அங்குரித்து நாளேற நாளேறப் பருவத்திற்கீடாக அவ்வக்காலங் களில் தளிர் இலை அரும்பு மலர் பிஞ்சாக வெளிப்பட்டுப் பின் பழமாகிய பலன் வெளிப் படுமேயன்றி அங்குரிக்கும்பொழுதே அதற்குரிய முடிந்த பலன் வெளிப்படுவதில்லை. இவ்வியல்பை யுணரப் பெருத ஒருவன் வித்தினின்றும் முளை தோன்றியவுடன் அத னைக்கண்டு, இவ்வித்தில் நாம் நினைத்த பலம் இல்லைபோலும் என்று அம்முளையை அவ் வித்தின் பலனாகக் கருதாமல் கைவிடுவானாயின், அவனை உலகினர் பித்தனென்று கூறுவர். அவன் வருந்தித் தேடிய வித்தினால் பெற்ற பயன் தான் யாது. அதுபோலும் சிவ ஞானமாகிய வித்தினைப் பெற்றவர் அச்சிவஞானத்தில் வெளிப்படுவதாகிய அன்பி னால் சரியை கிரியா யோகநெறிகளைக் காணுமிடத்து இவை பிரமசித்தியைக் கொடுக்கும் பிரமஞானம் ஆமா என்று கைவிடுவர். அந்தோ அவர் அப்பிரமஞான வியல்பினை அறிந் தவராவரோ? இவரைத் தான் வித்தினைத் தேடி முளையைக் கைவிட்ட பித்துடையார் என்று சிவஞானிகள் நகையாடா நிற்பர்.

சிவஞானமாவது சரியையாதிகளைக் காட்டி அவற்றிற்குரிய பலன்களைக் கூட்டிப் பின் ஞானத்தை விளக்கி அவ்விளக்கத்தால் சீவனையும் சிவத்தையும் தெரிசிப்பித்து, சீவனைச் சிவமாக்கி அச்சிவானந்தத்தில் மூழ்கச்செய்யும் இயல்பினையுடையது. இவ்வியல் பறியாப் பித்தர், பிரமஞானத்தால் தன்னைக்கண்டு தானே பிரமமாய் நிற்றல் என்னும் பித்துரையைக்கூறி யாதொரு பயனும் பெருது, பித்தர்போல் தம்மறிவையே ஞான மென மகிழ்ந்து உலவா நிற்பர். இவரைக்கண்டு மகிழ்வா ரொருவருமில்லை என்க.

இனிச் சிவத்தைப் பெறுதல் சிவஞானத்தால் (அருளால்) அச்சிவஞானம் பெறுதல் யோகக் கிரியா சரியைகளால், இவை யாவும் பெறுதல் அன்பால். ஆகவே இம்முறை யில் ஒன்றேனும் பெற்றாரல்லர். அவர் பிரமஞானப் பித்தர் என்னும் இவ்வுண்மை தோன்ற—பித்தேறினார்கள் பெறுவது அங்கு என்—என்றுங் கூறினர்.

அங்கு என்ற சுட்டு—சரியை கிரியா யோகங்களை யிழந்து பிரமஞானத்தால் பிரம மாயினேமென்று கூறும் அவ்விடத்தைக் குறித்ததென்க. ஆகவே அவ்விடத்தில் பிரமத்

தைத் தான் பெற்றனரா? அன்றி ஆன்மாவைத் தான் பெற்றனரா? என்றால் பெற்றது ஒன்றுமில்லை; சூன்யந்தான். என்னை? பிரமம் வேறில்லை. ஆன்மாதான் என்றபோது பிரமமேது? சீவனை முன்னமே சிதாபாசனென்று ஒழித்திருப்பதால் ஆன்மாதான் ஏது?

இதனால் ஞானமென்னும் வித்தினின்று தோன்றும் அன்பினியல்பை யறியாத ஆன்மஞானிகளது அஞ்ஞான வியல்பு கூறப்பட்டது.

திருக்களிற்றுப்படியார்.

நிஎ. வித்தும் அதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்
வித்தும் அதன் அங்குரமும் மெய்யுணரில் - வித்ததனில்
காணாமையால் அதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேணாமை யால் அற்றார் பேறு. (1)

(எ-நு.) வித்தையும் அதனின்றுந் தோன்றும் அங்குரத்தையும் மெய்யாக உணரப் பெற்றால் அவர் (அஃதேபோல்) அன்பும் மெய்ஞ்ஞானமும், வித்தும் அதனினின்றும் தோன்றும் அங்குரமும்போல இருக்குமென் றறிவார். வித்தினிடத்தில் அங்குரந் தோன்றக் காணாமல், வித்தை மாத்திரங்கண்டவர் வித்தினிடத்தில் அங்குரந்தோன்றக் காண்பாராயின் அவர்கள் அதனை வித்தல்லவென்று கை விடுவார்கள். அஃதேபோல் வித்தினிடத்தில் அங்குரத்தைக் கண்டவர்களும் அவ்வங்குரத்தைக் காவாதொழிவாராயின், அதனால் அவரும் அவ்வித்தினால் பெறவேண்டிய பிரயோசனத்தை அற்றவராயினார் என்பதாம்.

வித்தும் அதன் அங்குரமும் மெய்யுணரில் மெய்ஞ்ஞானமும் (அன்பும்) வித்தும் அதன் அங்குரமும் போன்றிருக்கும், வித்ததனில் அங்குரத்தைக் காணாமையால் அதனைக் கைவிடுவர். கண்டவர்கள் அதனைப் பேணாமையால் பேறு அற்றார் எனக் கொண்டு கூட்டுக.

அங்குரந்தோன்றும் வித்தே வித்தாகுமன்றி அங்குரந் தோன்றாத வித்து வித்தாகுமோ. அது பதராம். அஃதேபோல் "எல்லார் அறிவுகளின் தாற்பரியம் என்னறிவு செல்லுமிடத்தளவும் சென்றறிந்தேன் என்றும், வல்லபடி வாதனையை மாற்றும் வகை யிதுவேயென்றும் வலியுறுத்திக் கூறிய அன்பு அங்குரிக்கும் ஞானமே மெய்ஞ்ஞானமன்றி அன்பு அங்குரியாத ஞானங்கள் பாசஞான பசு ஞானங்களாகிய பதர் ஞானங்களென்றும் அங்ஙனமான ஞானவேற்றுமை யுணர்த்தும் சிவஞானிகளாகிய ஆசிரியரை யடையப் பெறாது போலி வேதாந்திகளாகிய ஞானிகளிடத்துப் பயின்றவர் சிவன்பால் அங்குரிக்கவேண்டிய அன்போடு கூடிய ஞானத்தை யறியாராகலான் அவர்கள் வித்தும் அதன் அங்குரமும் போன்றிருக்கும் சிவஞானத்தைச் சொல்லக் கேட்பாராயின் அதனை மெய்ஞ்ஞானமாகக் கருதாது இழந்துவிடுவார் என்றும், அவர்களைப்போலவே வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்த ஞானத்தை யுணரப்பெறாத சைவசமயிகளும் அன்பு--சரியை கிரியைகளில் அங்குரிக்க வேண்டுவதேயன்றி ஞானத்தில் அங்குரிக்க வேண்டுவதன்றென்று அதனைப் போற்றாதொழிந்து சிவப்பேறு மற்று சிவபோகத்தைப் பெறாதொழிவரென்றும் உய்த்துணர வைப்பென்னும் உத்தியால் உய்த்துணரக் கிடக்கின்றமை காண்க.

அல்லதூஉம் அன்பு தோன்றும் ஞானமே மெய்ஞ்ஞானமென்றும், அந்த ஞானமே தன்னைப் பெற்றவர்க்குச் சிவப்பேற்றையும் சிவபோகத்தையும் தருமென்றும், அன்பினைக் கைவிட்டவர் பெறும் ஞானம் பாசஞான பசு ஞானங்களென்றும், அவை அவர்களுக்குப் பந்தத்தையும் நானென்னும் அகங்காரத்தையும் அது பற்றி வரும் பிராரத்த வினையையும் அதன் வாயிலாக உடம்பு முதலிய மாயேயங்களையும் விடாது தருமென்றும் பிறநூற் குற்றங்காட்டல், எனைப்பிரிதொடு படான் தன்மதங்கொளல் என்னும் மதம் படக் கூறினாரெனவுங் கொள்க.

இத்திருப்பாட்டான் உந்தியாரில் "வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர் பித்தேறினர்கள்" என்றும், "அவர்கள் அங்கு பெறுவது என்" என்றுங் கூறியவற்றுள் வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர் என்ற வுவமானத்தில் அடங்கிக் கிடக்கும் உவமேயப் பொருளை - வித்தும் அதனங்குரமும் மெய்யுணரில் வித்தும் அதனங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம் என வுணர்வர். (வித்தும் அதனங்குரமும் மெய்யாக வுணராதவர்) வித்ததனில் (அங்குரம்) காணாமையால் அதனைக் கைவிடுவர்-என விதந்தும், கைவிடுவோர் இருவகையினரா யிருத்தலின் அது தோன்ற—வித்ததனில் காணாமையால் அதனைக் கைவிடுவர்—என்று கூறியதேயல்லாமல்,—கண்டவர்கள் பேணாமையால் அற்றார்பேறு—என்று அவரையும் உடன் றழுவிக் கூறினர். இவருள் போலி வேதாந்திகள் ஞானத்தில் தங்களைக்கண்டு நானே பிரமமெனத் தடித்து நின்று அன்பை யொழிப்பாராதலால் அவ்வகம் பிரமஞானிகளை வித்ததனில் காணாமையால் அதனைக் கைவிடுவர் என்றும், சைவத்திறத்தை யடையப்பெறாத சைவர்களும் மெய்ஞ்ஞானத்தில் அங்குரிப்பது அன்பென்று அதனருமை யறியாது அன்பை வித்தாகவும் மெய்ஞ்ஞானத்தை அதில் அங்குரிக்கும் அங்குரமாகவும் எண்ணி மெய்ஞ்ஞானத்தையே கொண்டு அன்பினைப் போற்றாது கைவிடுவாராகலின் கண்டவர்கள் பேணாமையால் அற்றார் பேறு என்று அவர்களையும் உடனெண்ணிக் கூறினர். பித்தேறினர்கள் என்றதை—அற்றார் பேறு என்று அதன் பொருளை விதந்து கூறினர். அஃதாவது பித்தேறினவர்கள்—பேறு இன்னதென்றும் அதனைத் தாங்கள் பெறவேண்டுமென்றும் எண்ணி அதனைப் பெறுவதொழிந்து பெற்றார் போன்று வாயில் வந்தபடி பிதற்றி மகிழ்ந்து உலவாநிற்பர். அவர் அங்ஙனம் திரியினும் அவரைக் கண்டார் பேறிழந்தவர் என்றெண்ணுவரேயன்றி பெற்றவரென்று எண்ணாமைபோல் போலி வேதாந்திகளும், சைவத்திறத்தை யுணரப்பெறாத சைவர்களும் ஞானத்தைப் பேசினும் அதனில் விளையும் பயனைப் பெறாதவரென்று ஒழிக என்பதாம். (உஅ)

உகூ. சொல்லும் இடம்அன்று சொல்லப் புகும்இடம்
எல்லை சிவனுக்கென் றுந்தீபற
என்றால் நாம் என்செய்கோம் உந்தீபற.

(எ-நு. உ - ர் என் - எனின்) இறைவனுக்கு இடம் அன்பேயன்றி ஏனையோரால் சொல்லப்படும் இடங்களெல்லாம் இடம் அன்றென்று கூறிற்று.

(இ - ள்.) ஞானத்தில் முளைக்கும் சிவத்துக்கு இடமாகச் சொல்லத் துணியுமிடம் ஏனைய இடங்கள்போல் எளிதாகச் சொல்லத்தக்கதன்று என்று அவ்விடத்தைச் சொல்லப்பட்டிருக்குமானால் நாம் என் செய்யலாம் என்க.

சிவனுக்கு எல்லை என்று சொல்லப்புகும் இடம், சொல்லும் இடமன்று, என்றால் நாம் என்செய்கோம் எனக்கொண்டு கூட்டுக.

உள்ளும் புறம்பும் நினைப்பற்று அவிழவிருக்கும் அறிவினைக் கூடுங்காலத்து அவ்வறிவாகிய சிவத்தைக் கூட்டவந்த அன்பினைக்கண்டு வித்தினைத்தேடி முளையைக் கைவிட்டவர் போல், அன்பினைக் கைவிடாது சிவத்தைக்கூட்டிய இவ்வன்பு சிவமா, சிவம் அன்பா என்று அன்புக்கு எல்லை சிவமாகவும், சிவத்துக்கு எல்லை அன்பாகவும் சொல்லப் புகுவோமாயின் ஒன்றுக்கொன்று எல்லையாகக் கூறப்படவில்லை. ஏனெனின், அன்பு வேறாகவும் சிவம் வேறாகவும் இருக்குமாயின் சொல்லக்கூடும். வேறென்று சொல்லுவோம் என்றாலோ "அன்பும் சிவமும் இரண்டென்பவர் அறிவிலார்" என்றதனால் சிவனுக்கு எல்லையாக அன்பைக் கூறக்கூடாதாயிற்று. ஆகவே அன்பே சிவமாவது என்று அறிந்து அன்பே சிவமாய் அமர்ந்தார் என்றதனால் நாம் என் செய்கோமென்று கூறினர்.

அன்பே சிவமென்பதும், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பார் என்பதும் மூலமந்திரமா யிருத்தலின் அதனை மறுப்பதற்கு மந்திரத்திற்குமேல் பிரமாணமில்லை யாகலான் நாம் என்செய்கோம் என்பதுமாம்.

இதனால், "அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவம்ஆவது யாரும் அறிந்திலார், அன்பே சிவமாய் யாரும் அறிந்தபின், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே" என்று திருமந்திரத்திற்கூறிய பொருளையே கொண்டு, அஃதாவது—அன்பு சிவம் என இரண்டாகக் கூறுமவர் அறிவிலார் எனவும், அன்பே சிவமென்று கூறுவார் அறிவுடையார் எனவும், அன்பே சிவமாய் அங்ஙனம் அறிந்தவர், சிவமாய் அமர்ந்திருக்க வேண்டுமாயின், அன்பிலேயே யமர்ந்திருப்பர் என்றும், இதுவொழிந்து, அன்பை எல்லையாக்கிச் சிவத்தை வேறுகண்டு அச்சிவத்தில் அமர்ந்திருக்கக் கருதுவாராயின் சிவத்தைக் காண்பது எங்கே, அமர்ந்திருப்பது எங்கே என்றும், அவரறிவுக்கு யாம் என் செய்யக்கடவோம் என்றுங் கூறப்பட்டன.

## திருக்களிற்றுப்படியார்.

௫௮. ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானன்று—நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவும் அன்று
தலையன்று அடியன்று தான். (1)

௫௯. செய்யாச் செயலையவன் செய்யாமை கண்டுதனைச்
செய்யாச் செயலிற் செலுத்தினால்—எய்யாதே
மாணவக அப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கும்
மாணவமும் இத்தால் அறி. (2)

௬௦. ஏதேனும் காலமுமாம் ஏதேனும் தேசமுமாம்
ஏதேனும் திக்கா சனமுமாம்—ஏதேனும்
செய்வான் ஒருவனுமாம் செய்யாச் செயல்அதனைச்
செய்யாமை செய்யும் பொழுது. (3)

௬௧. செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்துசிலர்
எய்தற் கரியதனை எய்தினர்கள்—ஐயோநாம்
செய்யாமை செய்து செயல்அறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத ஆறு. (4)

௬௨. இப்பொருள்கள் யாதேனும் ஏதெனினும் ஒன்றுசெய்தல்
எப்பொருளும் செய்யா தொழிந்திருத்தல்—மெய்ப்பொருளைக்
கண்டிருத்தல் செய்யாதே கண்ட மனிதரெலாம்
உண்டிருப்ப தென்னோ உரை. (5)

(எ-று.) சிவன் எல்லாப் பொருள்களையும் தனக்கு இடமாகக்கொண்டு ஒன்றாயிருப்பவனும் அல்லன். சராசரங்களாகிய எல்லாப் பொருள்களும் தன்னை ஆதாரமாகக் கொண்டிருத்தலால் அவைகளுக்கு வேறாய் ஓரிடத்திருப்பவனும் அல்லன். அங்ஙனம் யாவைக்கும் ஆதாரமாய்த் தான் இருப்பவனாயினும் ஏனைப்பொருள்கள்போல் உள்பொருளாய்க் காணப்பட்டிருப்பவனும் அல்லன். எனவே, உள் பொருளென்ற அவ்விடத்திலும் இருப்பவனும் அல்லன். கட்புலனால் காணப்படும் பொருள்கள்போல் காணப்படானாயினும், ஞானத்தினால் காணப்படும் பொருளாய்த் தன்னறிவிலே காணப்படுதலின் இல்

பொருளாய் இல்லாதவனும் அல்லன். எனவே, அறிவிலேயன்றி ஏனையவிடங்களை இடமாகக்கொண்டிராதவனும் அல்லன். நன்மையைச்(சுகங்களை)க் கொடுக்கின்ற அப்பொருள்களை இடமாகக் கொண்டிருப்பவனும் அல்லன். தீமையைக் கொடுக்கின்ற அப்பொருள்களைஇடமாகக் கொண்டிருப்பவனும் அல்லன். எல்லாப் பொருளும் பொய், நான் ஒருவனே மெய் என்று சொல்லுகின்ற ஆரம்பிரமத்தை இடமாகக் கொண்டிருப்பவனும் அல்லன். எல்லாம் பொய் அவைகளை அறிந்த நானே மெய், என்ற அவ்வளவில் நில்லாமல் பிரமத்தையும் நானென்று சொல்லும்படி அவர்களிடத்தில் நிலையாக நின்ற பாசத்தை இடமாகக் கொண்டிருப்பவனும் அல்லன். இங்ஙனங்கூறிய பாசஞான பசுஞானங்களைக் கேட்டுணர நிற்கின்ற உன்னை யிடமாகக்கொண்டிருப்பவனும் அல்லன். பாசஞான பசுஞானங்களைக் கேட்டுணரும் அளவிற்றாய் நின்று அவைகளோடு சம்பந்தப்படாது வேறாய் நிற்கின்ற உன்னறிவை யிடமாகக்கொண் டிருப்பவனும் அல்லன். இங்ஙனம் ஒன்று என்றதுமுதல் நின்னறிவு என்பது காறும் இது இடம் அல்லவென்று அறுதியிட்டுச் சொல்லுவதற்குக் கூடாமையா யிருத்தலால், அச்சிவம் ஆதியையும் உடைத்தானது அன்று, அந்தத்தையும் உடைத்தானது அன்று. எனவே, அச்சிவம் ஆதிஅந்தமென்னும் அளவுக்குட்பட்டதாயிருப்பின் அதற்கு இடமும் இது என்று அளவுப்பட்டிருக்கும் சிவம் அளவுப்படாததாகவே, இடமும் அச்சிவத்துக்கு அளவுக்கு உட்படாததாயிற்று என்பதாம்.

இதனால், "எல்லார் அறிவுகளின் தாற்பரியம் என்னறிவு செல்லுமிடத்தளவும் சென்றறிந்தேன்" என்ற திருவெண்பாவின் சொற்பொருளை விரித்து, உந்தியாரில் "சிவனுக்கு எல்லையென்று சொல்லப்புகுமிடம் சொல்லும் இடமன்று" என்ற மேற்கோளை வலியுறுத்தினமை காண்க.

எங்ஙனமெனின், ஒன்று இரண்டு உளது இலது நன்று தீது என்று சொல்லப்பட்டனவெல்லாம் பாசகாரியத்துட்பட்ட செயல் வகைகளாகலான், அவை சிவனுக்கிடமாமோ? ஆகா. அஃதேபோல் நான் என்பதும், நீ என்பதும், நின்னறிவென்பதும் பசுஞானத்துட்பட்ட சொல்வன்மைகளாகலான் அவையும் சிவனுக்கிடமாகா. தலையன்று அடியன்று. அஃதாவது ஆதியும் அந்தமும் இல்லாதது என்று சொல்லும் சொல்லே சிவனுக்கிடம் என்று சொல்லலாமோவெனின், அதுவும் இடமாகாது. ஏனெனின் உலகெலாம் உணர்ந்தோதற் கரியனாய், அலகில் சோதியனாய், ஆதியந்தமற்றவனா யிருப்பினும் அவ்வரிய சிவன், அன்பர்க்கெளியனாய், நிலவுலாவிய நீர்மலி வேணியனாய், அம்பலத் தாடுபவனாய் நின்றருளுதலினால் என்க.

இவ்வுண்மை தோன்றவே, இந்நூன்முகத்தில் "அகளமாய் யாரும் அறிவரிதப் பொருள், சகளமாய் வந்தது" என்று கூறிற்று. இவ்வுந்தியின்பொருளை விதந்தோதிய திருக்களிற்றுப்படியாரும், "அகளமயமாய் நின்ற அம்பலத்து எங்கூத்தன், சகளமயம் போல் உலகில் தங்கி" என்றார். அதுவேயுமன்றி "நிகளமாம் ஆணவமூலமகல என்னுடனாய் வந்து ஆண்டனன்" என்றதனால் ஒன்றன்று இரண்டன்று என்றற் றொடக்கத்தனவாகக் கூறிய இடங்களை இடமாகக் கொள்ளாதவன் அகளமயனாய் நின்ற இறைவன் என்றும், உலகில் தங்கி என்றதனால் அவ்விறைவனுக்கு இடம் உலகம் என்றும் வெளிப்படுகின்றது. ஈண்டு உலகம் என்றது, உள்ளும் புறம்பும் நினைப்பொழியப் பெற்ற பெரியோர் என்க. ஆகவே அகளமயமாய்நின்ற இறைவனுக்கு இடம் இப்பெரியோரேயன்றி, ஒன்று இரண்டு என்பனவாகக் கூறப்பட்ட இடங்களன்று என்றது துணிபுரை என்க.

இனி, "நிகளமாம் ஆணவமூலமகல என்னுடனாய் வந்து ஆண்டனன்" என்று கூறிய அவ்வுண்மை விளங்க, ஈண்டு "உள்ளும் புறம்பும் நினைப்பறின் நின்னுளே மொள்ளா அமுதாம்" என்றார். "முளையாது பந்தம்" என்று கூறிய உந்தியாருக்கு, "உள்ளும் புறம்பும் நினைப்பொழியின் நின்னுளே, வள்ளல் எழுந்தருளும் மாதிஞெடும், தெள்ளி - அறிந்தொழிவாய் அன்புடையையாயின்" என்றார். எனவே—பந்தம் முளையாதிருப்பதற்கு - அன்புடைய னாயிருப்பை யாயின் முளையாது பந்தம் என்பதாம்.

இதனால், சிவனுக்கு ஒன்றன்று இரண்டன்று என்று அவரவர் கூறிய இடங்களெல்லாம் இடங்களன்று. அவனுக்கு இடம் உள்ளும் புறம்பும் நினைப்பொழியப் பெற்றவரே யாவர். ஏனெனின், நினைப்பொழியப் பெற்ற அவருள்ளத்தில் பந்தமுளையை முளையாதிருக்கச் செய்யவல்ல மொள்ளாவமுதமாகிய அன்பு நிறையப் பெற்றதனால். ஆகவே சிவனுக்கு இடம் அன்பென்றும், அவ்வன்பு நிறையப்பெற்றவரே இடமென்றும் உணர்த்தியவாறுமென்க. (1)

உந்தியாரில்என்றால், "நாம் என்செய்கோம்" என்ற குறிப்புரையை இனி செய்யாச் செயலை என்ற திருவெண்பாவால் விதந்து கூறுகின்றார்.

(எ - து) மெய்ஞ்ஞானியாய் அன்பு தோன்றப்பெற்ற "கலைமலிந்த சீர் நம்பியாகிய கண்ணப்பதேவர்—ஒருவருஞ் செய்யாமையாகிய செய்தற்கரிய செயலை இறைவனிடம் செய்ததையும் அஃதே போல் இறைவனும், அவரிடம் ஒருவருக்குஞ் செய்யாமையாகிய (செய்தற்கரிய செயலைச் செய்ததையும்) கண்டு நீயும் உன்னை இறைவன்பால் அன்பினால் செய்தற்கரிய செயலிற் செலுத்துவையே யாயின் மாணவகனே! இச்செயலினால் உன்னை விட்டுப் பிரியாது உன்னுடன் வாழும் வாஞ்சைக்கொடி வளர்க்கும் ஆணவமும், உன்னைவிட்டுப் பிரிந்துபோய் மீண்டும் வந்து பொருந்தாது; இது நிச்சயம் இதனை தெளிந்தறிவாயாக என்பதாம்.

அவன் செய்யாமை(யாகிய) செய்யாச் செயலை(ச் செய்வதைக்) கண்டு, தனைச் செய்யாச் செயலிற் செலுத்தினால், மாணவக இத்தால், அப்பொழுதேவாஞ்சைக்கொடி வளர்க்கும் ஆணவமும் எய்யாதே அறி எனக்கூட்டுக.

அஃதாவது—ஆசையென்னும் கொடி அறுபடாவண்ணம் படரச் செய்யும் ஆணவம் முளையாவண்ணம் செய்யவல்ல வித்தும் அதனங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானத்தையும் அன்பினையுங் கண்டவர்கள் அவையிற்றைப் பேணுதொழிந்து பேறற்றுப்போவார்போல் போகாமல், பேறெய்துமாறு "நாம் என்செய்கோம்" என்று எண்ணி அதனைச் செய்யுமுறையே செய்யவேண்டுமென்க. (2)

இனி, இங்ஙனமான செய்யாச்செயலால் பேறற்றுப் போகாது பேறெய்துமாற்றை "ஏதேனுங் காலமுமாம்" என்ற திருவெண்பாவாற் கூறுகின்றார்.

(எ - து) மேலே சொல்லிய ஒருவருக்கும் செய்யாமையாகிய செய்தற்கரிய செயலை இறைவன் செய்யத் திருவுளத்தெண்ணிச் செய்யும்பொழுது, எந்தக் காலமாயினும் ஆம், எந்தத் தேசமாயினும் ஆம், எந்தத்திசையாயினும் ஆம், எந்த ஆசனமாயினும் ஆம், செய்யக்கூடாதனவாகிய தொழில்களில் எதைச்செய்யினும் ஆம் என்பதாம்.

செய்யாமை, செய்யாச் செயலதனை ஒருவன் செய்யும் பொழுது ஏதேனும் காலமுமாம் எனக்கூட்டுக. கண்ணப்ப தேவருடைய தந்தையாகிய நாகன் என்பவன், கண்ணப்ப தேவரை வேட்டையாடுவதற்கு நியமித்த யாதொரு காலமோ, அக்காலமே - காளத்திநாதரோடு அவர் அன்பினை ஆளுவதற்கான காலமாக முடிந்தது. கண்ணப்பதேவர் அவதரித்ததாகிய வேடுவர் வாழும் யாதொரு உடுப்பையுண்டோ அந்தத் தேசமே—சான்றோர்கள் வாழும் தேசமாக முடிந்தது. அவர் வேட்டையாடுவதற்குக் குறித்துச் சென்ற திக்கே - காளத்திநாதரைக் காணுதற்கான நல்ல திக்காய் முடிந்தது. அவர் அக்கானகத்தில் மிருகங்களைப் பிடிப்பதற்காகப் படுத்தும், ஒருபக்கமாய்ச் சாய்ந்தும், குனிந்தும் இவ்வகையான சாகசங்கள் எதுஎதுவோ. அவைகளெல்லாம் காளத்திநாதரைப் பற்றுவதற்கான யோகத்தியான முறையில் நிற்போர் கொள்ளத்தக்க ஆசனங்களாகவே முடிந்தன. அவர் வேட்டையாடிக் கொண்டுவந்த மிருகம் பறவை முதலானவைகளைத் தீயிற் காய்ச்சிய அவ்வுணவுகளும், வாயில் நிரப்பிக்கொண்ட ஆற்றுநீரும், தலையில் சூட்டிக்கொண்ட மலர்களும், செருப்புக் காலடியும், காளத்திநாதர் பூஜைக்குரிய நிவேதனங்களாகவும், திருமஞ்சன நீராகவும், பூங்கூடையிற் கொண்டுவந்த அருச்சனைக்குரிய மலர்க

ளாகவும், நிருமாலியத்தைக் கழித்தற்குரிய கூர்ச்சப் புல்லாகவும் வேத சிவாகமப்படி செய்யப்படும் சிவபூஜைச் செயல்களாகவே முடிந்தன. (3)

இனி நாம் என்செய்கோமென்பதற்கு—இன்னது செய்கோம் என்றும், அங்ஙனஞ் செய்யப்பெறின் கண்ணப்ப தேவருக்குக் காலமுதலிய யாவும் நல்லனவே யாயினமை போல் நமக்கும் ஆகும் என்பதில் ஐயமுறுவண்ணம் செய்தற்கரிய என்னுந் திருவெண் பாவால் அறிவுறுத்துகின்றார்.

(எ - து) உலகில் எண்ணிறந்த ஆன்மாக்களிருக்க அவரெல்லாம் எண்ணப்படாதவரா யொழிந்துபோக நம்பியாரூரர் ஓதியருளிய திருத்தொண்டத்தொகையுள் ஓதப்பட்டார் சிலரேயாகலின், அந்தச் சிலராகிய பெரியோர், கண்ணப்பதேவரைப் போல், நல்ல சிவதன்மம், நல்ல சிவயோகம், நல்ல சிவஞானம் என வகுக்கப்பட்ட மூன்றனுள், வன்மை மென்மையாகவும், ஆதார நிராதாரமாகவும், ஆராய்ச்சி அனுபூதியாகவும் பலதிறமாய்க் கூறப்பட்டிருப்பனவாகிய செய்தற்கரிய செயல்களை விடாது செய்து சிவதருமத்தைவிட்டு பசு தருமத்தைச் செய்தாரும், சிவயோகத்தை விட்டு அவயோகத்தைச் செய்தாரும், சிவஞானத்தைவிட்டு பாசஞான பசுஞானங்களை யுணர்ந்தாரும் அடைதற்கரிய சிவானந்தானுபவமாகிய சிவபோகச் செல்வத்தைப் பெற்றனர். அந்தோ! மாணவனே! பாசதருமத்தையும், அவயோகத்தையும் பாசஞான பசுஞானங்களையும் உடையார் செய்யும் செயல்களைச் செய்யாதுவிட்டு, நல்ல சிவதன்மத்தையும், நல்ல சிவயோகத்தையும், நல்ல சிவஞானத்தையும் உடையார்செய்த செய்தற்கரிய செயல்களைச் செய்து, ஆணவத்தின் செயலையும், தற்போதத்தின் செயலையும், பிராரத்தத்தின் செயலையும், மாயேயமாகிய உடம்பின் செயலையும், அறுக்கும் செயலுக்குரியராய்நாமிருக்க, அங்ஙனமான செய்தற்கரிய செயலை நாம் செய்து சிவானந்தமுற்றுச் சிவயோகிகளாக வாழலாமன்றோ? அங்ஙனஞ் செய்யாதிருப்பது என்னையோ என்பதாம். (4)

இனி, நம்முடைய செய்தி, இங்ஙனமிருக்க, — சிவானந்தத்தைப் பெறவேண்டுமாயின் அதற்கு மார்க்கம்:—தவமார்க்கம், நூன்மார்க்கமென இரண்டு. இவற்றுள்— "ஐயா நாம், செய்யாமைசெய்து செயலறுக்கலாயிருக்க, செய்யாமை செய்யாதவாறு" என்றதே தவமார்க்கம். இத்தவமார்க்கத்தை எண்ணி அதில் உழல எண்ணாது நூன்மார்க்கத்தையே பெரிதாகவெண்ணி அதில் உழன்று அலைதலே நூன்மார்க்கம். கண்ணப்பதேவர் முதலாகச் சொல்லப்பட்ட சிற்பரச் செல்வர்களெல்லாம், செய்த செய்தற்கரிய செயல்களெல்லாம் அனுமான அளவையானும், நூல் அளவையானுமன்றி, பிரத்தியக்ஷயளவையான் இப்பாரதகண்டமுற்றும் காணக்கிடக்கின்றது. அங்ஙனங் காணக்கிடந்தும் அவற்றுளொன்றேனும் செய்யாது உலகினர் உண்டிருந்து காலங்கழிப்பதைக்கருதி வருந்துவதை "இப்பொருள்கள்யாதேனும்" என்ற திருவெண்பாவால் அறிவுறுத்துகின்றார்.

(எ-து) மேற்கூறிய வற்றைக்கண்டவர்களாகிய அரிய மானுடப்பிறப்பைப் பெற்றவரெல்லாம், நல்ல சிவதன்மம், நல்ல சிவயோகம், நல்ல சிவஞானம் என்பவைகளுக்குப் பொருளாகச் சொல்லப்பட்ட வல்வினை, மெல்வினை முதலாகக் கூறப்பட்டவைகளுள் ஒன்றினைச் செய்தல், அஃதாவது சரியை கிரியைகளாகச் சொல்லப்பட்ட இப்பொருள்களுள் யாதேனும், வல்வினையினாலாவது, மெல்வினையினாலாவது, ஏதெனினும் ஒன்றுசெய்தலாம், எப்பொருளும் செய்யாது ஒழிந்திருத்தல்—அஃதாவது-ஆதார நிராதாரயோகங்களைச் செய்தலாம், மெய்ப்பொருளைக் கண்டிருத்தல்—அஃதாவது—ஆதாரநிராதாரயோகங்களைக் கடந்து மருளுந் தெருளும் மறக்கும் மீதானத்தின்கண் ஒருசெயலுஞ் செய்யாது அருளை மறவாது, கண்டிருத்தலாம். ஆகிய இவைகளுள் ஒன்றினையுஞ் செய்யாது, உடற்போகத்தையே விரும்பி வேண்டிய வேண்டியபடியே கருவிகாணக் கூட்டுறவால் செய்ய வேண்டிய முயற்சிகளைச் செய்து அறுசுவையோடுகூடிய உணவுகளை உண்டு மரணத்

கத்தை மறந்து என்றும் உள்ளவர்கள்போல் மகிழ்ந்திருப்பது, என்னே? இஃதென்ன அறிவுடைமையோ? இஃதென்ன அறிவின்மையோ? மாணவகனே நீயே சொல்வாயாக. என்பதாம். (5) (உக)

கூ0. வீட்டில் இருக்கிலென் நாட்டிலே போகிலென்
கூட்டில்வாள் சாத்திநின் றுந்தீபற
கூடப் படாததென் றுந்தீபற.

(எ-து. உ-ர். என் - எனின்) உள்ளத்தளவாய் உடம்பினிடத்தே அன்பு நிகழப் பெற்றவர்க்கு, உள்ளத்துட்படாத இல்லறம் துறவறம் என்னும் இருவகையறங்களானும் பயன் என்னை என்று சொல்லிற்று.

(இ - ள்.) வாக்கினளவும், மனத்தளவுமே யன்றி உடம்பளவும் வெளிப்படும்படி அன்பென்னும் வாளினை உடம்பினிடத்து நீங்காதிருக்கப் பெற்றால், அங்ஙனம் பெற்றவர்க்குக்கூடப் பெறாதது என்ன விருக்கின்றது. ஆகவே, அன்பென்னும் வாளைக் கூட்டில் சாத்தப் பெறாதார், சகல பற்றுக்களையும் துறத்தலாகிய துறவறத்தை மேற்கொண்டு வீட்டுநெறியில் நின்றால்தான் என்னை? அதுவன்றி நல்லறங்களைச் செய்தற்குரிய இல்லறத்தை மேற்கொண்டு நாட்டிலேபோனால் தான் என்னை? இரண்டினாலும் பயனில்லை என்க.

வாளைக் கூட்டில் சாத்தி நின்றால், கூடப்படாததென். (ஆகலின்) வீட்டிலிருக்கிலென், நாட்டிலிருக்கிலென் எனக் கொண்டு கூட்டுக.

வீட்டு நெறியானது—நாட்டிலுள்ள வீட்டிலிருந்தால் கூடாதெனக் கருதி நாட்டை விட்டுக் காட்டிலிருக்குந் துறவியாய்ப் போனாரெல்லாம் மேலே சொல்லிய அன்பினைப் பெற்றனரோ வென்றால் பெற்றாரில்லை. அவர் பெற்றது வைராக்கிய ஞானம், அதன் மேலும் பெற்றது உளதெனின் ஆன்மஞானமேயாம்; சிவஞானமன்றென்க.

நல்லறமாவது—இல்லறமன்றி வேறொன்றில்லையென அவ்வில்லறத்திலேயே யிருந்தாரெல்லாம் அன்பினைப்பெற்றாரோவெனின் இல்லை. அவர்பெற்றது போகவின்பமே. மேலும் பெற்றது உளவெனின் புண்ணியமும் புகழுமேயாம். சிவஞானமும் அன்று அன்புமன்றென்க. ஆகலின் வீட்டிலிருக்கிலென்? போகிலென்? எனவும், இல்லறத்திலிருந்து நல்லறங்கள் பலசெய்தும், துறவறத்திலிருந்து வைராக்கியங்கள் பலசெய்தும் அன்பு கிடைக்கப் படாததாயிற்று. அவ்வருமையை நோக்கிக் கூடப்படாதவாள் என்றார். அவ்வன்பினைக்காட்டுவது உடம்பேயாகலான் அவ்வொற்றுமை நோக்கி கூட்டில்வாள் சாத்தி என்றார். அன்பு—உடம்புமுதலியவற்றுள் பற்றியிருக்கின்ற பாசத்தையறுக்குங் கருவியாயிருத்தலின் வாளென்றார். பாசப்பற்றொழிந்தபின்னர் அவ்வுடம்பே அன்பினைக் காட்டுவதாயிருத்தலின் கூட்டில் சாத்தி என்றார். உடம்புக்கும் அன்புக்கும் சம்பந்தம் யாதெனின் 'அன்போடியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கென்போ டியைந்ததொடர்பு' எனவும், 'அன்பிலாரெல்லாம் தமக்குரியர் அன்புடையார் என்பும் உரியர்பிறர்க்கு' எனவும், 'என்பிலதனை வெயிற்போலக்காயுமே அன்பிலதனைஅறம்' எனவும், 'புறத்துறுப்பெல்லாம் எவன்செய்யும் யாக்கையகத்துறுப் பன்பிலவர்க்கு' எனவும் அறநூலார் கூறியனவேயன்றி, வீட்டுநூலாரும் "மெய்தானரும்பி விதிர்விதிர்த்து உன்விரையார்கழற்கு என்கைதான் தலைவைத்துக் கண்ணீர்ததும்பி' எனவும், 'ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கு அன்பிலை என்புருகிப் பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர் சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை' எனவும், 'என்னையாண்டாய்க்கு உள்ளந்தான்நின்று உச்சியளவும் நெஞ்சா யுருகாதால்' எனவும், 'போகம்வேண்டி வேண்டிலேன் புரந்தராதியின்பமும், ஏக நின்கழலிணை யலாதிலேன் எம்பிரான், ஆகம்விண்டு கம்பம்வந்து' எனவும்கூறிய அருளுரைகளானும், அன்புக்கு இடம் உடம்பே என்று தெள்ளிதின் அறியுக்கிடக்கின்றமைகாண்க.

## திருக்களிற்றுப்படியார்.

சுரு. வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடிலென்
நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென்—கூட்டில்வாள்
சாத்தியே நின்றிலையேல் தக்கனார் வேள்விசெய்த
மாத்திரமே யாம்கண்டாய் வந்து. (1)

சுசு. சிவன்முதலே அன்றி முதலில்லை என்றும்
சிவனுடைய தென்னறிவ தென்றும் - சிவன் அவன
தென்செயல தாகின்றதென்றும் இவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான். (2)

(எ-று) இல்லறத்தைவிட்டுத் துறவறத்தை மேற்கொண்டு வனத்திலே சென்று பொன் நிலம் மாதர் என்னும் மூன்றிடத்தும் வாசனாமாத்திரத்தால் சென்றுழலும் புறக் கரண அகக்கரணங்களை அங்ஙனஞ் செல்லவிடாது அடக்கித் தாம் கருதிய ஞான யோக நெறியில் நிற்கப்பெறினும் பயன் என்னை? (அன்றி) துறவறத்திற் செல்லாது இல்ல றத்தை மேற்கொண்டு நாட்டின்கண் ணிருந்து இல்லறத்துக்குரியனவாக விதித்திருக் கும் நல்லறங்களை விடாது செய்யப்பெறினும் பயன் என்னை? எனெனின், உடம்பி னிடத்தில் பொருந்தி யிருக்கத்தக்கதாகிய அன்பென்னும் வாளாயுதம் உடம்பைவிட்டு நீங்காதிருக்கும்படியாகச் செய்து அவ்வன்பிற்குரிய செயலையுஞ் செய்யா தொழிந்தால் மேலே சொல்லிய இருவகை யறத்தாலும் வரும்பயன் என்னையுள. அன்பினைவிட்டு அவ்விரண்டறத்தையும் செய்வதனால் காணும்பயன்தான் யாதோவெனின், தக்ஷப்பிரஜா பதியானவன் தேவர்யாவரையுங் கூட்டி அச்சபைக்கண்ணே வந்து, அவன்செய்த பெரிய யாகத்தினால் என்னபயன் விளைந்ததோ அவ்வளவினதாகிய பயனேயா மென்பதாம்.

கூட்டில் வாட்சாத்தி நின்றால், வீட்டிலேசென்று வினையொழிந்து நின்றாலும், நாட்டிலே நல்வினைகள் செய்தாலும் பயன்தரும். கூட்டில் வாட்சாத்தி நின்றிலையேல், வீட்டிலேசென்று வினையொழிந்து நின்றிடிலென், நாட்டிலே நல்வினைகள் செய்திடி லென் என்க. எனவே அவ்வறங்கள் பயனைக்கொடா. அவை தரும்பயன் தக்கனார் வேள்விளப்பயனைத் தந்ததோ, அம்மாத்திரமான பயனையே தருமென்று கூறினாரென்க.

எனவே, பாசப்பற்றாகிய வினைப்பற்றொழிந்து வீட்டிலே சென்றது—பாசப்பற்றை அறுக்கவல்ல அன்பினைப்பற்றி அப்பற்றால் அவ்வன்புருவாகிய சிவனைப்பற்றி வாழ்வ தற்காம். அஃதேபோல்—நாட்டிலே நல்வினைகள் செய்வது—அந்த நல்வினை எனப்படும் அறக்கடவுளாகிய இறைவனால் மீண்டும் பிறப்பில் நாட்டப்பெறாது அவன் திருவடி யிணையில் நாட்டப்பெற்று அவ்வடியிணையிற் பெருகும் அன்பினை நுகர்ந்து அவனருள் வசப்பட்டிருப்பதற்காம். அங்ஙனமிருக்க, வீட்டிலே சென்றவர்—பாசப்பற்றற்று, சிவ னைப் பற்றுதற்கும், நாட்டிலேநின்று நல்வினை செய்பவர்—பிறவி வசப்படாது அருள் வசப்பட்டிருப்பதற்கும், அன்பென்னும் வாளைக் கூட்டில் (உடம்பில்) சாத்தப்பெற்றிருக் கும் வகையறியாமற் போவாராயின் அவர் எங்ஙனம் சிவனைப் பற்றிவாழ்வார், இவர் எங்ஙனம் அருள்வசப்பட்டிருப்ப ரென்க.

இந்த இரண்டறத்தாரும், அன்பினைப் பற்றாமையான் தக்கனைப்போல் இவர்கள் பற்றப்படும் சிவனைப்பற்றாது, பற்றப்படாத அகங்காரத்தைப் பற்றியும், அத்தக்கன் நற்றுணையாகிய சிவன் திருவடியிணையைப் பெறாது, கடலில் ஆழ்த்தும் கற்றுணைபோலும் பிறப்பிலாழ்த்தும் திருமால்முதலிய தேவர்களைப் பெற்றதுபோல் இவர்கள் அத்திருமால் முதலியோரால் சித்தாந்தப்படுத்திய அகம் பிரமஞானத்தைப் பெற்றும், அவன் அவர் களைத் தன்னால் செய்யப்படும் யாகத்திற்குத் தலைவராக நாட்டியதுபோல், இவர்கள் அவர்களை இவ்வுலகில் யாவரும் பரமாகச் சொல்ல, பிரமாணங்களை வேண்டியபடியே

நாட்டியும், அவன் மஹா வீரபத்திரமூர்த்தியின் திருமுகத்தினின்றும் பெருகிய கோபாக்கினிக்குள்ளாய் அவருடம்பில் தாங்கப் பெற்றிருந்த வாளாயுதத்தால் வெட்டப்பட்டுப் பெருந்துன்பத்துக் காளாய்த் தனது வாழ்வையிழந்து ஆட்டின்தலையைப் பெற்று மேமே என்று கதறிக்கதறி யொழிந்ததுபோல் இவர்கள் மஹா ருத்திரமூர்த்தியாகிய பரப்பிரஹ்மத்தின் கோபத்துக்குள்ளாய், இவ்வுலகின்கண் எண்ணிறந்த ஆடுகளாய்ப் பிறந்து பிறந்து அப்பிறவிகள்தோறும் காய்கனி முதலியவைகளை யொழித்துத் தின்னப்படாத தழைக ளனைத்துந்தின்று, சிவமே சிவமே என்று வாயால் அறற்றுவதொழிந்து, சிவபதத்தையொழித்து இறுதியை (நாசத்தை) யடைவிக்கவல்ல மே மே என்னும் பதத்தையே கதறிக்கதறிக் கூவி வாளாயுதங்கொண்டு மிலேச்சரால் வெட்டப்பட்டு அசைவர்களுக்கே ஆகாரமாய் ஒழிந்துபோவரென்க.

இத்திருப்பாடலில் தக்கனர் வேள்வி செய்த மாத்திரமே என்றதனை இங்ஙனம் விதந்து'கூறினுமென்க. இன்னும் விரிக்கிற் பெருகும். இனி கூட்டில்வாள் சாத்தி நின்று என்றதன் உண்மையைச் "சிவன்முதலே" என்னுந் திருப்பாட்டின் பொருளான் அறிக. (1)

(எ-து.) முதல் என்றால்—சிவன் என்று சொல்லப்பட்டவனே முதலன்றி இவன் என்று சொல்லப்பட்ட ஆன்மா முதலாக இருப்பதில்லை என்றும், அறிவுஎன்றால்—சிவனுடைய அறிவே அறிவன்றி, என்னுடைய அறிவென்று சொல்லப்படுவது அறிவாக இருப்பதன்றென்றும், செயலென்றால்—சிவனுகிய அவனது செயலே செயலாகுமன்றி, என்செயலென்று சொல்லப்பட்ட அச்செயல் ஓர்செயலாகச் செய்யப்பட்டிருப்பதன்று என்றும் அறிவதே கூட்டின்கண் சாத்தும் வாளாகிய மெய்ஞ்ஞானமெனப்படும் சிவஞான வாளாம். அந்தஞானவாளுக்குக் கூர்மையை யுண்டாக்குவது அன்பாம். அங்ஙனமான கூர்மையைக் கொண்ட ஞானவாளை மனத்தளவும் வாயினளவுமேயன்றி காயத்தினளவுங் கொண்டுநின்று, என்றும் ஒருமுதலாயிருக்கும் சிவன்முதலையொழித்து இந்திரியச் சார்புகளால் முதலழிந்துநிற்கும் தன்னை—முதலாகவும், என்றும் தன்னிலைமைகெடாது பேறிவாயிருக்கும் சிவனறிவையொழித்து—ஏகதேசப்படும் தன்மையிற்கெடாது சிற்றறிவாயிருக்குந் தன்னறிவை—எல்லாம் அறியும் அறிவாகவும், தோற்றப்படுபொருளெல்லாம் தன்னையன்றித் தோன்றுவதற் கில்லாமலும், நிலைப்படுபொருளெல்லாம் தன்னையன்றி நிலைத்திருப்பதற் கில்லாமலும், பின்னர் அவையெல்லாம் அழியவருங்காலத்துத் தன்னையன்றி அழிவதற்கில்லாமலும் செய்யவல்ல சிவன்செயலாகிய மஹாசங்காரச் செயலையேசெயலாகச் சொல்லுவதொழித்து, தனக்குவேண்டியவற்றைத் தானே தோற்றுவித்துக்கொள்ளவும், தான் நிலையாக இருக்க எண்ணும் பொருள்களைத் தானே நிலைபெறுவித்துக் கொள்ளவும், தனக்கு வேண்டாமென்று ஒழிக்கவேண்டிய பொருளைத் தானே ஒழித்துக்கொள்ளவும் கூடாமல் தன்னளவன்றி இறைவனுணையின்வழியாய்த் தோன்றி நின்றழியப்படும் தனுகரண புவனங்களால் அனுபவிக்கப்படுவனவாகிய சுகதுக்கரூபமான போகங்களைத் தன்னிச்சையின் வழியன்றி "வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி, தொகுத்தார்க்குந் துய்த்தலரிது" என்ற பொய்யாமொழிப்படி இறைவனுணையின்வழியே அனுபவிக்கவரும் பொருள்களில் நிலைபெறுவதின்றி அலமந்து, விரும்பப்படுவனவாக வருவனவற்றில் வெறுப்பும், வெறுக்கப்படுவனவாக வருவனவற்றில் விருப்பமுங் கொண்டு ஊழ்வழியுழலும் தன்செயலை ஊழ்வழியுழலாத சுதந்தரமுடைய செயலாகவும், முன்னையுள்ள மலப்பயிற்சிவயத்தால் முனைக்கவருமாயின் முனைக்குந்தோறும் அறுத்தெறிந்து, சிவனை முதலென்று சொல்லுவதற்கு நாம் ஒருமுதலாயுள்ளோமென்றும்; சிவனுடைய அறிவு பிரகாசிப்பதற்கு நமதறிவு இடமாயிருப்பதென்றும், சிவனது செயல் செல்லுந்திறத்தைக் காட்டுவதற்கு நமதுசெயல் நிகழ்வதென்றும் அறிவுறுத்தி சிவன்முதலினும், சிவனறிவினும், சிவன்செயலினும், தமதுமுதலையும், தமதறிவையும், தமதுசெயலையும், தாடலைபோல் அடங்கிநிற்கச்செய்து

வாழ்வார்கள் அன்பென்னும் கூர்மைபொருந்திய மெய்ஞ்ஞான வாளேந்தியிருக்கும் மெய்யன்பர்களென்க. ஆகலின் மாணவகனே! நீயும் அவர்கள்போல் வாழ்வாயாக என்பதாம்.

இதனுல், தன்னையே முதலென்றும், தன்னறிவையே அறிவென்றும், தன்செயலையே செயலென்றும் கொள்வோர் தக்கன்பெற்ற பாழைப்பெறுவரென்றும், சிவனையே முதலென்றும், சிவனறிவையே அறிவென்றும், சிவன்செயலையே செயலென்றும் கொள்வோர் சிவன்பாலுள்ள வாழ்வைப்பெறுவரென்றும் கூறப்பட்டன. (2)

இவ்விரண்டு திருப்பாட்டான்—உந்தியாரில் "வீட்டிலிருக்கிலென் நாட்டிலே போகிலென்" என்றதை—வீட்டிலேசென்று வினையொழிந்து நின்றிடிலென், நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென் என்றும், "கூட்டில்வாள் சாத்திநின்று" என்றதனை—சிவன் முதலேயன்றி முதலில்லை என்றும், சிவனுடைய தென்னறிவதென்றும், சிவனவன தென்செயலதாகின்றதென்றும், அவையிற்றைத் தன்செயலாக் கொள்ளாமைதான் என்றும், நின்றிலையேல் என்றும், "கூடப்படாதது" என்றதனை—தக்கனுர் வந்து வேள்விசெய்த மாத்திரமேயாம் கண்டாய் என்றும் "கூட்டில்வாள்" என்றதன் பொருட்சிறப்பை—சிவன் முதலே—என்ற திருவெண்பாவானும் விதந்து கூறினுரென்க. (௩௦)

௩க. சாவிபோ மற்றச் சமயங்கள் புக்குநின்
றாவிய றாதேயென் றுந்தீபற
அவ்வுரை கேளாதே யுந்தீபற,

(எ-து. உ-ர். என் - எனின்) வித்தும் அதன் அங்குரமும் போன்றிருப்பதாகிய மெய்ஞ்ஞானமும் மெய்யன்பும் மெய்ம்மையாகவுடையது மெய்ச்சமயமாகிய இச்சைவ சமயமன்றி ஏனைச்சமயங்கள் அன்றென்று கூறிற்று.

(இ - ள்.) சித்தாந்த சைவமொழிந்த ஏனைச் சமயங்களெல்லாம் நெற்பதர்போல் சமயப்பதர்களாம். ஆகலான் அச்சமயங்களிற் பிரவேசித்து தக்கன் உயிரிழந்ததைப் போலும் உனது அரிய உயிரை மாளச்செய்யாதே, அவர்களாற் கூறப்படும் நூற்பொருள்களையும் செவிகளாற் கேட்கவும் செய்யாதே என்க.

மற்றச் சமயங்கள் என்றதனுல்—அன்பினையே தலைமையாகக்கொண்ட இச்சைவ சமயமே சித்தாந்தமாகக் கொள்ளப்பட்டதெனவும், ஏனைச் சமயங்களெல்லாம் அன்பின் கொள்கையைக் கொள்ளாதனவாகலான் அவை சாவிபோம் மற்றைச் சமயங்களென புறச்சமயங்களாக ஒதுக்கப்பட்டனவெனவும் கூறப்பட்டன.

பதரானது, நெல்லைப்போல் காணப்பட்டுத் தூற்றும்போது நெல்லோடுநில்லாது பறந்துபோதல்போல ஏனைச் சமயங்களெல்லாம் பொருள் உள்ளதுபோற்காட்டிப் பின் ஆராயப் புகும்போது இல்லையாய் உயிரைவருத்துமாகலின்—புக்குநின்று ஆவியறாதே எனவும், அச்சமயங்கள் வேண்டாதொழியினும் அவர் கூறுங் கொள்கைகளாவது கேட்போம் என்று கேட்கத்தொடங்கினுல் அது பறந்துபோம் பதரைப் பதரென்று கண்டபின்னரும் அதனைத் தொட்டுப்பார்ப்போமென்று அதன்பின்னே ஓடும் அறிவிலிகள்போலுமாகலின்—அவ்வுரை கேளாதே எனவுங்கூறினுர்.

அன்பைப் பொருளென்றது என்னையெனின்,—அன்பில்லையாயின் சிவமில்லை. அது இல்லையாயின் ஞானமில்லை என்னுந் துணிபுநோக்கி என்க. எல்லாச்சமயங்களும் சிவத்தைத் தங்கள்பொருளாகக் கொள்ளாதொழியுமேயன்றி, அன்பைப் பொருளாகக் கொள்ளாதொழியுமோ எனின், கொள்ளும். அவ்வன்பு யாதாய் முடியுமெனின், அவையெல்லாம் பாச ரூபமாகவுள்ள புத்திரமித்திர களத்திராதிகள்பால் வைக்கப்பட்ட அன்பு போலாம். அவ்வன்பு ஞானத்தைக் கொடுக்குமோ! கொடா, அதுபோலென்க.

எனவே - சிவன் ஒருவனே பரமான்மாவாகிய தெய்வம். அவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கி நிற்பவன். திருமால்முதலிய தேவரெல்லாம் தெய்வமல்லர்.

அவரெல்லாம் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்காதிருப்பவர். ஆகலின் அவர்கள் பால் செல்லும்அன்பு அவமாய்ப் பாசமயமாகிய அஞ்ஞானமயமாகுமேயன்றி, அது சிவமாய் மெய்ஞ்ஞான மயமாகாதென்க. ஆற்றுநீரானது கடல்நீரோடு கலப்பின் அந்நீர் உண்ணப்படாத உவர் நீர்மயமாகுமேயன்றி உண்ணப்படும் நன்னீராகுமோ! ஆகா! அதுபோலென்க. இதனுண்மையை அடியில் வரும் திருவெண்பாக்களாலறிக.

திருக்களிற்றுப்படியார்.

சரு. இன்றிச் சமயத்தின் அல்லதுமற் றேழையுடன்
ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார்—இன்றிங்கே
அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவரார்
எங்கும் இலை கண்டாய் இது. (1)

சசு. விரிந்துங் குவிந்தும் விழுங்குவர்கண் மீண்டுந்
தெரிந்துந் தெரியாது நிற்பர்—தெரிந்துந்
தெரியாது நிற்கின்ற சேயிழைபால் என்றும்
பிரியாது நின்றவனைப் பெற்று. (2)

சஎ. ஆதனமும் ஆதனியும் ஆய்நிறைந்து நின்றவனைச்
சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச்—சேதனனைச்
சேதனனிலே செலுத்திச் சிற்பரத்த ராயிருப்பர்
ஏதமறக் கண்டவர்கள் இன்று. (3)

சஅ. தாம்அடங்க இந்தத் தலம்அடங்குந் தாட்தர்கள்
தாம்உணரில் இந்தத் தலம்உணரும்—தாமுனியில்
பூமடந்தை தங்காள் புகழ்மடந்தை போயகலும்
நாமடந்தை நில்லாள் நயந்து. (4)

(எ - து.) இந்தச் சைவசித்தாந்த சமயத்தில் அல்லாமல், இப்பொழுது சொல்லிய சித்தாந்தமுடிவுரையைச் சொல்லி, சிற்சபையின்கண்ணே நடராஜமூர்த்தியாய் சிவகாமியாரோடு நிற்கும் வன்மையாளர் யாவர்? (அஃதேபோல் அந்த முடிவுரையைக் கைப்பிடித்து) இக்கலியிலே இம்மண்ணுலகில் என்பானது உயிர்பெற்றெழுந்திருக்கத் திருப்பதிகத்தைப் பாடும் அடியவர்கள் யாவரிருக்கின்றனர்? இவ்வதிசயச் செய்கை எவ்விடத்திலும் இல்லை, இதனை நீ அறிவாயாக என்பதாம்.

இச்சமயத்தினல்லது, இன்று ஒன்று சொலி ஏழையுடன் மன்றத்து நின்றவர் யார் எனக் கூட்டுக.

ஒன்றுசொலி—என்றது—“சிவன் முதலேயன்றி முதலில்லை” என்ற திருவெண்பாவிற்போந்த பொருளென்க. சிவன் முதலேயன்றி முதலில்லை என்றும், சிவனுடையது என்னறிவ தென்றும், சிவனவன தென்செயல தாகின்ற தென்றும், அவையிற்றைத் தன்செயலாக் கொள்ளாமைதான் என்றும் பலசொல்லாயிருக்க, அதனை ஒருசொல் என்றது என்னையெனின், அவை ஒருபொருளைக் குறித்த பல சொல்லாதலின் ஒரு சொல்லேயாம்.

அஃதாவது—முதலாந்தன்மையும், அறிவுடைமையும், செயலுடைமையும் உடையவன் சிவனேயன்றி ஆன்மாவல்ல என்னும் பொருட்டாகலின் என்க.

இனி—இப்பொருளைச் சொன்னது இந்நூலாசிரியரா யிருக்க, ஒன்று சொல்லி ஏழையுடன் மன்றத்து நின்றவர் ஆர் என்றது என்னையெனின்,—அகளமயமாய் நின்ற அம்பலத்து எங்கூத்தன், சகளமயம்போல் உலகில் தங்கி—நிகளமாம், ஆணவமூலமகல

ஆண்டனன்" என்று முன்னே கூறியிருக்கின்றாராகலின் அப்பொருள்கொண்டு இங்ஙனங் கூறியதென்க.

அஃதாவது—ஆசிரியனாய்வந்து சொல்லுமவன் நடராஜ முதல்வனேயன்றி வேறு முதலன்றாகலின் அவ்வொற்றுமை நோக்கி என்க.

இதனை,—போற்றிப் பஃறொடையில் "பூவலயம் தன்னின்று நீங்காச் சகலர்க் கவர் போல, முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை, அன்னவனுக்கு—ஆதிகுணம் ஆதலினால் ஆடுந்திருத்தொழிலும், சோதி மணிமிடற்றிற் சுந்தரமும்—பாதியாம், பச்சையிடமும் பவளத்திருச்சடைமேல், வைச்சநதியும் மதிக்கொழுந்தும்—அச்சமற, ஆடும் அரவும் அழகார் திருநுதல்மேல், நீடுருவவன்னி நெடுங்கண்ணும்—கேடிலயம், கூட்டுந் தமருகமும் கோலஎரியகலும், பூட்டரவக் கச்சும் புலியதளும்—வீட்டின்ப, வெள்ளத் தழுத்தி விடுந்தாளினும் அடியார், உள்ளத்தினும் பிரியா வொண்சிலம்பும்—கள்ளவினை, வென்று பிறப்பறுக்கச் சாத்திய வீரக்கழலும், ஒன்றும் உருத்தோன்றாமல் உள்ளடக்கி—என்றும், இறவாதஇன்பத்து எமையிருத்த வேண்டிப், பிறவா முதல்வன் பிறந்து—நறவாரும், தாருலாவும் புயத்துச் சம்பந்தனாதனென்று, பேரிலாநாதன் ஒரு பேர்புனைந்து—பாரோர்தம், உண்டி யுறக்கம் பயம் இன்பம் ஒத்தொழுகிக், கொண்டுமகிழ்ந்த குணம்போற்றி" என்று உமாபதிசிவங் கூறியவாற்றானும் அறிக.

இனி—ஏழையுடன் மன்றத்து நின்றவர் சொல்லிய அவ்வொருசொல்லை, பிரகாசப்படுத்திய ஆளுடைய பிள்ளையாரது அரிய செயலின் வழியானே அச்சொல்லின் பொருளை விளக்குவானெண்ணி இத்திருவெண்பாவினும் ஏனைய மூன்று திருவெண்பாவினும் அருளிய பொருள் வருமாறு காண்க.

இத்திருவெண்பாவில், "இன்றிங்கே அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவர்கள், எங்குமிலை கண்டா யிது" என்றார். இங்ஙனங்கூறிய இது—சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்று ஆவியறாதே. என்றதனை உரையளவையானுமன்றி, அனுமான அளவையானுமன்றி, காண்டல் அளவையான் (பிரத்தியக்ஷப் பிரமாணத்தால்) நன்குணரவேயாமென்க.

அஃதாவது—சைவசமயம் உயிர்கொடுக்கும் ஆற்றலுடைத்தாகலின் அச்சமயத்தையுடையார் அங்கத்து (என்பு)க்கு உயிர்கொடுக்கும் ஆற்றலுடையராயினர். அதற்குக் காரணம்—தன்னைச் சங்கரிப்பார் ஒருவருமின்றித் தானே மஹாசங்காரமூர்த்தியாய் யாரையும் யாவையும் சங்கரித்து மீண்டும் அவையிற்றைப் புனருற்பவஞ் செய்யும் கடவுளாயிருக்கும் சிவபெருமானைத் தனக்கு முதற்கடவுளாகக் கொண்டிருக்கும் ஆற்றலுடைய சைவசமயத்தை ஆளும் ஆளுடைய பிள்ளையாராகலின், அப்பிள்ளையார் அங்கத்துக்கு உயிர்கொடுக்கும் ஆற்றலுடையாராயினர்.

ஏனைச் சமயங்களெல்லாம், அந்த மஹாசங்காரமூர்த்தியால் சங்கரிக்கப்பட்டும், புனர் உற்பவிக்கப்பட்டும் சாவினையே மேற்கொண்டும் இருக்கின்ற மெல்லியகடவுளரைத் தங்கட்குக் கடவுளராகக் கொண்டிருக்கும் புல்லிய சமயங்களாதலால் சாவிபோம் சமயங்களாயின.

ஆகலின்—சமயங்களின் வன்மை மென்மைகளை வாய்ச்சொல்லின் வழியானன்றி அவ்வச்சமயக் கடவுளரின் வழியான் உணர்ந்து, சாதலைத் தலைமேற் சுமந்திருக்கும் கடவுளரைத் தங்கள் தெய்வமாகக் கொண்டிருக்கும் சாவுச் சமயங்களிற்புக்கு உயிருக்குச் சாவினைத் தேடுவதொழிந்து, சாவா மூவாச் சிங்கம்போன்றிருக்கும் பரசிவத்தைத் தெய்வமாகக் கொண்டிருக்கும் சைவசமயத்துட் புக்குச் சாதலையொழித்து என்றும் உயிருடன் அங்கம் வாழும் வாழ்வினைப் பெறுவாயாக. செத்துச்செத்துப் பிறப்பதே தேவென்று கதறும் சமயங்களுடைய சாவுரைகளையும் கேளாதொழிவாயாக என்க.

இனி "சிவன்முதலே யன்றி முதலில்லை" என்றதனை "விரிந்தும் குவிந்தும்" என்னும் திருவெண்பாவால் விதந்து கூறுவதேயன்றி இதனுள்—"அங்கம் உயிர் பெறப் பாடினர்" என்றதனற் போதரும் அடியவர்பெருமையும் விளக்குகின்றார். (1)

(எ - து.) விரிந்தும்—மெய்ஞ்ஞானிகள்பால் அங்குரிக்கும்அன்பினை இறைவன் கண்டு தனது திருவருட்பிரகாசம் அவர்கள்பால் பரவத் திருவுளத்தெண்ணி அதற்குரிய செயலை விரிக்கத் தொடங்குவானாயின் அச்செயலோடு தாங்களும் விரிந்தும், குவிந்தும்—அங்ஙனம் விரியுங்காலத்து, அதனுடன் கலந்து அவ்வருட்செயலைத் தன்செயலாக விரிக்கவரும் தற்போதத்துள் தாம்குவியாது, விரிந்த அருட்செயலிலேயே தாம் வேறுபடாது குவிந்தும், விழுங்குவர்கள்—அத்திருவருள் வல்லபத்தால் தற்போதத்தை வெளிவரவொட்டாது தம்முள் அடக்குவார்கள், மீண்டும்—அங்ஙனம் அடக்கியபின்னர், (அருட்செயலிலே வேறுபடாது குவிந்ததிருந்த தாம்) மறுபடியும், தெரிந்தும்—இப்போது அருட்செயலானது வேறிருந்து செய்யாது நம்செயலாகவே செய்கின்றது என்று தெரியவரினும், தெரியாது நிற்பர்—(முன்னர் தற்போதத்தை யடக்கினவராதலால்) இது நமது செயல், இச்செயலில் கலந்த அருட்செயல் இதுஎனத் தெரியவரினும், நிட்டையின் விசேடத்தான் அவ்வருட்செயலில் தமதுசெயலைத் தெரியாதவராய், அருட்செயலையே தெரியுந் தெரிவுடையவராய் அவ்வருளிலேயே சலிப்பற நிற்பர். தெரிந்துந் தெரியாது நிற்கின்ற சேயிழைபால் என்றும் பிரியாது நின்றவனைப் பெற்று (வந்தது.)—அங்ஙனமான சலிப்பறநிற்கும் சத்தி எவ்வாற்றால் வந்ததெனின், மெய்ஞ்ஞானத்தினல் அன்பு தோன்றியபின்னர் தெரிந்து நிற்கின்ற அருட்சத்தியாயும், மெய்ஞ்ஞானந் தோன்றுவதற்குமுன் தெரியாதுநிற்கின்ற திரோதானசத்தியாயும் நிற்கின்ற சிற்சத்தியைப் பிரியாதுநிற்பவனாகிய சிவனை முதலாகப் பெற்றவராகலின் நிற்கவந்ததென்பதாம்.

விரிந்தும்—என்றது—சிவனருட்சத்தியின் விரிவை. குவிந்தும் என்றது—அங்ஙனந் தன்பால் விரிந்தஅருட்செயலில் தான்விரியாது அவ்வருளில் தான்குவிந்திருத்தலை. விழுங்குவர்கள் என்றது—அருளில் குவிந்திருக்கும் அந்நிலையினும் முனைத்துவரும் தற்போதத்தை முனைத்துவரச் செய்யாது தான் விழுங்குதலை. மீண்டுந் தெரிந்தும் என்றது—தற்போதம் தன்னுள் அடங்கிநிற்கும் அந்நிலையில் அருளாலேயே அவ்வருட்செயல் தெரியவருதலை. தெரியாதுநிற்பர் என்றது—அங்ஙனந் தெரியவருங்கால் அச்செயலை வேறுநின் றுணரும் செயலற்றிருத்தலை. தெரிந்துந் தெரியாது நிற்கின்ற சேயிழை என்றது—அன்பு தெரிந்தாரிடத்துத் தான் தெரிந்தும், அன்பு நிலை தெரியாதாரிடத்துத் தான்தெரியாதும் நிற்கின்றசிற்சத்தியை. என்றும்பிரியாது நின்றவனைப் பெற்று என்றது-இங்ஙனமான சிற்சத்தியோடு தன்னைவிட்டுப் பிரியாது என்றுந் தன்னுடனாய் நின்றருளும் சிவத்தைத் தனக்குத் தலைவனாகப் பெறுதலை.

இதனால்—அடியவர் என்பார்—தற்போதத்தை விழுங்கி, தாம் அருளினால் விரிந்தும், அருளிலே குவிந்தும், அவ்வருட்சத்தி யுடையானாகிய சிவனையே முதலாகக் கொண்டு தன்முதலையொழித்து, தம்மைத்தெரியாது முதலாகக்கொண்ட சிவத்தையே தெரிந்துவாழும் நிலைமையையுடையவர் எவரோ அவரே என்று கூறிற்றெனக.

அல்லதூஉம், விரிந்ததும், குவிந்ததும், விழுங்கியதும், மீண்டுந் தெரிந்தும் தெரியாநின்றதுமாகிய இச்செயலெல்லாம் அருட்செயலன்றி ஆன்மாவின் செயலன்றாகலானும் அவ்வருளுக்கு முதல்வன் சிவனாதலினானும் அங்ஙனமான சிவன் ஆன்மாவாகிய தன்னைப்பிரியாது நிற்கப்பெற்றதனாலும் சிவன் முதலேயன்றி ஆன்மா முதலில்லை என்றாயிற்று.

இனி—சிவனுடைய தென்னறிவது என்றதனை. "ஆதனமும் ஆதனியும்" என்னும் திருவெண்பாவால் விதந்து கூறுகின்றார். (2)

(எ-து.) ஆதனமும் - (ஆய்)—ஆன்மாக்கள் தோற்ற நிலை இறுதிகளை யடைதற்கு இடமா யிருக்கின்ற தத்துவங்களுமாய், ஆதனியும் ஆய்—அத் தத்துவகாரியங்களாகிய தனுகரணாதிகளைக்கொண்டு சுகதுக்கங்களை அனுபவித்துப் பிறப்பிறப்பில் நீங்காதுழலும் ஆன்மாக்களுமாய், நிறைந்து நின்றவனை—இங்ஙனங்கூறிய ஆதனமாகிய தத்துவங்களுக்கும், ஆதனியாகிய ஆன்மாக்களுக்கும் வேறாகியும் அவைகளால் அறியப்படாதவனாகியும், அத் தத்துவவடிவங்களாகியும், அவ்வான்ம வடிவங்களாகியும், நிறைந்திருக்கின்ற மேலாகிய சிவத்தை, சேதனனைக்கொண்டே தெளிவுற்று—(இத்தன்மையாய் நிறைந்திருக்கும் இயல்பினையுடைத்தாய்ச் சிவனிருப்பினும்) அச்சிவத்தை அறிவதற் கில்லாதிருப்பதால் அஃது அறிவித்தற்பொருட்டு அச்சிவமே ஆசிரியனாய் வருகின்றானாகலின், அவ்வாசிரியனைக் கொண்டே அவ்வியல்பினைத் தெளிவாயுணர்ந்து, சேதனனை—அங்ஙனம் உணர்த்தவுணர்ந்த ஆன்மாவாகிய அறிவாளியை, சேதனனிலே செலுத்தி—உணர்த்துகின்ற முறைமையினையுடைய அச்சிவனறிவிலே உணருகின்ற முறைமையினையுடைய ஆன்மஅறிவை அம் முறைமையிலேயே மாறுபடாது செலுத்தி, சிற்பரத்தராய் இருப்பர்—உணர்த்துகின்ற சிவனறிவின் பரமாகவே நிற்பர் என்பதாம்.

இதனால்—ஆன்ம அறிவானது—சிவன் உணர்த்த உணருந் தன்மையையே உடைத்தாயிருப்பதன்றி, தானே யுணருந் தன்மை இல்லாதிருப்பதாக வெளிப்படலால் அவ்வான்மஅறிவு சிவனுடையஅறிவே என்றாயிற்று.

இனி—"சிவனவனது என்செயலது ஆகின்றது" என்றதனை—"தாம் அடங்க இந்தத்தலம் அடங்கும்" என்ற திருவெண்பாவால் விதந்து கூறுகின்றார். (3)

(எ-து.) தாபதர்கள்—தமது அறிவைச் சிவனுடைய அறிவென் றுணர்ந்த மெய்ஞ்ஞானிகள், தாம் அடங்க—தமக்கு அறிவிக்கின்ற அறிவின் பரமாக (சிற்பரத்தராக)வே தமதுஅறிவு நின்றடங்க, இந்தத்தலம் அடங்கும்—அறிவிக்கும் சிவ அறிவிலே அறியும் அறிவினையுடைய ஞானிகள் அறிவு அடங்கிநிற்கப்பெறவே சிவனறிவு அந்தஞானிகள் அறிவேயாய், அவ்வறிவில் சிற்றறிவினராகிய ஆன்ம அறிவுகளெல்லாம் அடங்கி நிற்கப்பெறும், தாம் உணரில் இந்தத்தலம் உணரும்—அந்தஞானிகள் எவ்வகையாக அறிகின்றார்களோ அவ்வகையாகவே உயிர்களெல்லாம் அறியும், தாம் முனியில்—அந்த ஞானிகள் உள்ளம் வேறுபட்டு கோபிப்பார்களாயின், பூமடந்தை தங்காள்—அக்கோபத்துக்கு உள்ளானவர்கள்பால் தங்கியிருந்த செல்வங்கள் அவர்களைவிட்டுப் போம், புகழ் மடந்தை போய் அகலும்—கீர்த்தியும் அவர்களை விட்டுப் போம், நாமடந்தை நயந்து நில்லாள்—கல்விச்செல்வமும் வெறுத்து அவர்களைவிட்டுப் போம் என்பதாம்.

செல்வமும், புகழும், கல்வியும் சக்திசொரூபங்களாதலினாலும், அவைகட்கு அதிதேவதைகளாகலினாலும் அவ்வொற்றுமை கருதி பூமடந்தை என்றும், புகழ்மடந்தை என்றும், நாமடந்தை என்றுங் கூறினார். இம்மூன்றும் சத்திசொரூபங்களாகவே, அவைகள் சத்தனை அன்றி நிகழாதாகலின் சிவஞானிகள்பாலுள்ள சத்தன் வேறுபடவே அச்சத்திகளும் வேறுபட்டு அவர்களைவிட்டுப் போகத் தலைப்பட்டனவென்க.

ஈண்டு ஞானிகள் என்றது—சிவஞானிகளையே யன்றி ஆன்மஞானிகளையன்று. ஆன்ம ஞானிகள்—சிவன் அறிவிக்க, அறியுந்தன்மை யுடையது தமது அறிவென்றறியார். அறிவென்பது பிரமமென்றும், அப்பிரமம் தமது அறிவே என்றும், அங்ஙனம் அறிவதே பிரமஞானமன்றி, தன்னறிவை வேறாகவும் பிரமத்தை வேறாகவும அறிதல் அஞ்ஞானமென்றும் தெளிந்தவர். இங்ஙனந்தெளிந்த பிரமஞானிகள், "இருக்கு நாள் சில எண்ணில்நூல் கதறித், தருக்கம் பேசித் தலைபறியுற்றுக், கண்டோர் ஈந்த பிண்டமுண்டலறிப், பன்னேயாக்கை தன்னேயுற்றுடல், விடவருமென்று நடு நடுநடுங்கி" அவ்வுடலைவிட்டு, தெய்வம் என்றும் உளதாயிருத்தல்போல் இவர்களும் நரகத்

தில் என்றும் வாழ்ந்து உளராயிருப்பர் என்க. இந்தப் பிரமஞானிகளுடைய தடுமாற்ற விசேடத்தைச் சங்கற்ப நிராகரணமென்னும் சித்தாந்தநூலிற் பரக்கக்கண்டு தெளிக.

சிவஞானிகளோவெனின்,—தம்மை முதலாகக்கொள்ளுத லொழிந்து, சிவனையே முதலாகக்கொண்டு, யாவர்க்கும் சிவன் முதலேயன்றி முதலில்லை என்று கூறுவர். அறிவினரெனப்படும் ஆன்மாக்களாகிய நாம், பேரறிவாளனாகிய சிவன் அறிவிக்க அறியுந்தன்மை யுடையோமாகலின், நாம் அறியுந்தன்மையிற் சுதந்தரமுடையோ மல்லோம் ஆகலின் நமதறிவு சிவனுடைய தாகவுள்ள அறிவேயாமென்று கூறுவர். நமக்கு முதல் சிவனாகவும், நமது அறிவு -சிவனால் ஆளப்பட்டு அவன்அறிவிக்கும் அளவில் நிற்கும் அவனுடைய அறிவாகவுங் காணப்படலால், நமது அறிவினால் செய்யப்படும் செயலெல்லாம் சிவன்செயலாகுமே யன்றி நமதுசெயலாக எங்ஙனம் ஆகும். நமதறிவு அறிவிக்க அறியுந் தன்மையை விட்டுத் தானே அறியுந்தன்மை யுடைத்தாயின் நமது அறிவினால் செய்யப்படும் செயலும் நமது செயலாகவே முடியும். அங்ஙனமான இலக்கணம் ஒரு சிறிதும் பந்த நிலையிலேயன்றி முத்திநிலையினும் இன்மையான் நம்மால் செய்யப்படும் எவ்வளவு அரியசெயலும் சிவனவனது என்று கூறுவர்.

ஆதலின்—இங்ஙனங்கூறிப் போந்த திருவெண்பாவாகிய தாமடங்க இந்தத்தலம் அடங்கும் என்னும் பாசுரத்திற்போந்த செயல்களெல்லாம் சிவன்செயலாக் கொள்வரே யன்றி அவையிற்றைத் தன்செயலாகக் கொண்டு மீளா ஆளாயிருத்தலாகிய அடிமைநிலை யைக் குலைத்துக் கொள்ளாரென்க.

இங்ஙனமான சித்தாந்த உண்மையை வலியுறுத்தவே இனிவரும், "துரியங் கடந்த" என்னும் உந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் எழுந்தன. (4)

இந்நான்கு திருப்பாடலால் உந்தியாரில்—"சாவிபோம் மற்றச் சமயங்கள் புக்கு நின்று ஆவியறாதே" என்றதனை—"இன்றிச் சமயத்தினல்லது" "விரிந்தும் குவிந் தும்" "ஆதனமும் ஆதனியும்" என்ற மூன்று திருவெண்பாக்களானும், அவ்வுரை கேளாதே" என்றதனை—"தாமடங்க இந்தத்தலமடங்கும்" என்ற திருவெண்பா வானும் விதந்து கூறினார்.

எங்ஙனமெனின், மற்றச்சமயம்—சாவிபோம் என்றதனால், இச்சைவ சமயத்தை—இன்றிச் சமயத்தில் என்றார். அஃதாவது—இயல்பென்றுந் திரியாமல் இன்றுங் காண விருக்கின்றதனாலென்க. ஏனைச்சமயங்கள் முதலும் அறிவும் செயலும் அற்றிருக்குஞ் சமயங்களாதலால் சாவிபோம் என்றார். இச்சமயம் சாவிபோம் அந்த அவநெறியைப் பெறாது அம்மூன்றும் உடைத்தென்னும் உண்மைதோன்ற—இன்றிங்கே அங்கம் உயிர் பெறவே பாடும் அடியவர்கள் எங்குமிலை கண்டாய் இது என்றார். முதல்வனையும் அறிவ னையும் செயலுடையனையும் மன்றத்து நின்ற இறைவன் தம்முடைய சமயத்தைச் சார்ந் தார்க்குத் தனது முதன்மையும், தனது அறிவையும், செயலையுந் தந்து தன்னின்வேறா காது ஆளுந் திறத்தில் அவர்களுக் தெரிந்துந் தெரியாது நிற்கின்ற சேயிழைபால் என்றும் பிரியாது அவனைப்பெற்று, விரிந்தும் குவிந்தும் விழுங்குவர்களாயும், மீண்டும் தெரிந் தும் தெரியாது நிற்பவர்களாயும், ஆவிபோகாதுநின்று ஆதனமும் ஆதனியுமாய்நிறைந்து நின்றவனைச் சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச் சேதனனைச் சேதனனிலே செலுத்திச் சிற்பரத்தரா யிருப்பவர்—என்று சைவசமயத்தின் ஆற்றலையும், அச்சமயத் திற் புக்காது நிலைமையுங்கூறி, அங்ஙனமான சிற்பரச்செல்வர்களது உரையாகிய ஆணையி னளவாகவே,— இந்தத் தலமானது அடங்குவதாயும், உணர்ந்தால் உணர்வதாயும், முனிந்தால்—பூமடந்தை, புகழ்மடந்தை, நாமடந்தை போவதாயும் இருப்பதன்றி ஏனைச் சமயிகளுடைய உரைக்கும், உணர்வுக்கும், முனிவுக்கும், இந்தத்தலம் அடங்கியிருப்ப தாக என்றுங் காணப்படாமையான்—அவ்வுரை கேளாதே என்றார். (௬௧)

௬௨. துரியம் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரம்
துரியமாய் நின்றதென் றுந்தீபற
துறந்தார் அவர்களென் றுந்தீபற.

(எ - து. உ - ரை. என் - எனின்.) தம்மாட்டு நிகழும் சிவன்செயலைத் தம்செயலாகக் கொள்ளாது சிவன்செயலாகவே கொள்ளும் தொண்டினை யுடைய சிவஞானிகளது சாக்கிராவஸ்தையின் நிலையைக் கூறிற்று.

(இ - ள்) சகல தத்துவங்களையுங்கடந்து அன்புருவாய் நின்ற இந்தத் தொண்டர்களுக்குச் சாக்கிராவஸ்தையானது சிவநிலையாய் நின்றது. சிவமயமாகிய இத்துரிய நிலை யுடையவர்களே துறவிகளாவர் என்க.

முன்னைய துரியம் - தற்போதம். பின்னைய துரியம்-சிவபோதம். சகல தத்துவங்களையுங் கடந்தவிடத்து நிற்பதுதற்போதமேயாகலான் அதனைத் துரியமென்றும். அஃதாவது ஆசிரியன் உபதேசித்தவழியே சகலதத்துவங்களையும் தத்துவரூபம், தத்துவ தெரிசநம் என்னுமுறையால் கண்டு சுத்தியாக்கியபின்னர் நின்றது தற்போதம் ஒன்றேயாகலான் அதனைத் துரியம் எனவும், அப்போதம் ஆன்மரூபம் ஆன்மதெரிசனம் என்னு முறையால் ஆன்மாவைக் கண்டபின்னர் ஆன்மா அன்பின்வசப்பட்டு, சுத்தியாமாகலான் இவர்கள்பின்னர் தத்துவங்களோடுகூடிச் செய்யுஞ்செயலெல்லாம் இவர்களது அன்பே வுருவாகிய சிவன் செயலாமேயன்றி இவர்கள் செயல் சிறிதுமில்லையாகவே இத்தொண்டர்க்குச் சாக்கிரம் துரியமாய் நின்றதெனவும், தத்துவரூபம் தத்துவதெரிசனங்களால் தத்துவ சுத்தியையும் ஆன்மரூபம், ஆன்மதரிசனங்களால் ஆன்மசுத்தியாகிய தற்போதசுத்தியும் பெறப்பெற்ற இவர்களே மெய்த்துறவிகளாகலான் துறந்தாரவர்கள் எனவுங் கூறினர்.

தத்துவரூபாதிகளை, "மண்முதற் சிவமதீறாய் வடிவு காண்பதுவே ரூபம், மண்முதற் சிவமதீறாய் மலஞ்சடமென்றல் காட்சி, மண்முதற் சிவமதீறாய் வகையதிற்றானிலாது, கண்ணுதல் அருளால் நீங்கல் சுத்தியாய்க் கருதலாமே" எனவும், ஆன்மரூபாதிகளைப் "பாயிருள்நீங்கி ஞானந்தனைக் காண்டல் ஆன்மரூபம், நீயும் நின் செயல் ஒன்றின்றி நிற்பதே தரிசனந்தான், போயிவன் றன்மைகெட்டுப் பொருளிற் போய் அங்குத் தோன்றாது, ஆயிடல் ஆன்மசுத்தி அருள்நூலின் விதித்தவாறே" எனவும் வரும் உண்மைநெறி விளக்கத்தாற் கண்டு தெளிக.

அவர்கள் துறந்தார் என்றதனால், இம்முறையறியாதார் தத்துவங்களைத் துறந்தவருமல்லர்; தற்போதத்தை யடக்கினவருமல்லர் என்க. இதனால் துறத்தல் என்பது சுத்தி எனப்பட்டது. அஃதாவது—முன் தத்துவங்கள் இன்னதெனத் தெரியவந்து, அதன் பின்னர் அவற்றினுண்மை இதுவாமென் றுணர்ந்து, அதன்பின்னர் கண்ணுதலருளால் அவற்றினின்றும் ஆன்மா வேறுபடுதலாம்.

இதுபோலுமே தற்போதசுத்தியாகிய ஆன்மசுத்தியாவது ஆணவமறைப்பினின்று நீங்கி ஆன்மாவை ஞானமாகக்கண்டு பின்னர் போதமும் போதச்செயலும் அற்றிருப்பதாகிய நிலையினை யுணர்ந்து அந்தநிலையில், அப்பொருளேயாய் போதந்தோன்றாதாயிடமேயாம்.

திருக்களிற்றுப்படியார்

௬௬. துரியம் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்—துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளும்
ஆக்கியிடும் அன்பர்க் கவன். (1)

எ0. ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்
பாடல் பணைதாளம் பாலைநெய்தல்—ஏடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்தல் ஈங்கிவைதான் ஓங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல். (2)

எக. கொல்கரியில் நீற்றறையில் நஞ்சில் கொலைதவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடல்நீத்தல்—நல்ல
மருவார் மறைக்காட்டில் வாசல்திறப் பித்தல்
திருவாமூர் ஆளி செயல். (3)

எஉ. மோகம் அறுத்திடில்நாம் முத்தி கொடுப்பதென
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத்—தோகையர்பால்
தூதாகப் போகவிடும் வன்றொண்டன் தொண்டுகளை
ஏதாகச் சொல்வேன் யான். (4)

எங. பாய்பரியோன் றந்தப் பரமானந் தப்பரனைத்
தாயதிரு வாய்மலராற் சொற்செய்து—மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன். (5)

எச. அம்மையிலும் இம்மையிலும் அச்சம் தவிர்த்தடியார்
எம்மையுமாய் எங்கும் இயங்குதலான்—மெய்மைச்
சிவயோக மேயோகம் அல்லாத யோகம்
அவயோகம் என்றே அறி. (6)

எரு. மன்அருள் எவ்வண்ணம் மாநுடர்பான் மாணவக
அன்ன வகையே அரனருளும்—என்னில்
அடியவரே எல்லாரும் ஆங்கவர்தாம் ஒப்பில்
அடியவரே எல்லாம் அறி. (7)

(எ-று.) சிவசாக்கிராதி அவஸ்தாத்திரயங்களைக் கடந்த ஞானசொரூபமாய் விளங்கும் சித்சத்தியுடன் எப்பொழுதும் நீங்காது தாதான்மியமாய் நிற்கின்ற பெருமானாகிய சிவன், தம்பால் நிகழும் அருட்செயலைத் தம்செயலாகக் கொள்ளாத அன்பர்களுக்கு, சிவதுரியநிலையில் நிகழும் தமதுசெயலை, புருவமத்தியிலே முப்பத்தாறு தத்துவங்களும் ஒருங்கேகூடித் தொழில்புரிதலாகிய சிவசாக்கிரத்தைப் பொருந்தியிருக்கின்ற அந்நிலையிற் செய்தருளி, அச்செயல்களைத் தாஞ்செய்ததாக வெளிப்படுத்தாமல், அவர்கள் செய்ததாகவே ஆக்கிவிடுவான் என்பதாம்.

துரியங்கடந்த சுடர்த்தோகையுடன் என்றும் பிரியாதே நிற்கின்ற பெம்மான் (ஆகிய) அவன் அன்பர்க்குச் சாக்கிரத்தே * * * ஆக்கியிடும் எனக்கொண்டு கூட்டுக.

இதனால், சிவபெருமானார் தனது அன்பர்கள் சாக்கிராவஸ்தையைப் பொருந்துவராயின் அதனைச் சிவசாக்கிரமாக்காது தமது சிவசாக்கிரமாக ஆக்குவாரென்றும், சிவசாக்கிரத்துக்குரிய தத்துவங்களோடு கூடி அவ்வன்பர்கள் செய்யும் செய்கைகளெல்லாம் தாஞ்செய்யும் அருட்செயலாகச் செய்வரென்றும், பின்னர் தமது அருட்செயலாகிய அச்செயல்களை அவர்கள் செய்தசெயல்களாகவே யாவராலும் சொல்லும் வண்ணம் செய்வாரென்றும் கூறப்பட்டன.

எனவே—சிவஞானிகள் இறைவன் தம்மிடத்து நிகழ்த்தும் செயல்களைத் தம் முடையதாகக் கொள்ளாது இறைவனுடைய செயல்களாகவே கொள்ளும் ஞானத் திறத்தை நோக்கி அவ்விறைவனும் அவர்கள்பால் தமக்கிருக்கும் அன்பின்திறத்தை யாவரும் அறிய அவர்கள்பால் நின்று தாம்செய்யும் அருட்செயல்களெல்லாம் அவர்கள் பாலே யாக்கி அவர்களுக்கே புகழைத் தருவனென்று கூறப்பட்டது.

இவ்வருமையைப் பின்வரும் ஆறு திருவெண்பாக்களின் உரைகளாற் காண்க.

ஆள்வேண்டாது ஓடத்தைச் செலுத்தித் திருக்கொள்ளம் பூதூரைச் சேர்ந்ததும், திருப்பட்டீச்சுரத்திலே முத்துச்சிவிகை பெற்றதும், திருவாவடுதுறையிலே உலவாக்கிழி (எடுக்குந்தோறுங் குறைபடாத பொன்முடிச்சி) பெற்றதும், திருமறைக்காட்டிலே திருக்கதவம் அடைத்ததும், திருவோத்தூரில் ஆண்பனையைப் பெண்பனையாக ஆக்கியதும், திருக்கோலக்காவிலே பஞ்சாக்கரம் வரைந்துள்ள பொற்றாளம் பெற்றதும், பாலைநிலத்தை நெய்தல்நிலமாக்கியதும், மதுரையில் வைகைநதியில் திருவேடு எதிரேறச் செய்ததும், கூன்பாண்டியனுக்கு வெப்புநோய் கொடுத்து அதனை யொழித்ததும், திருமயிலையிலே என்பைப் பெண்ணாக்கியதும் ஆகிய இவ்வற்புதச் செயல்கள் ஓங்கிய புகழை யுடைய தென்னாட்டிலுள்ள சீகாழிநாதனாகிய திருஞானசம்பந்தப் பெருமானார் தாம் ஓதியருளிய திருப்பாடல்களால் நிகழ்ந்த செயல்களாம் என்பதாம். (2)

பல்லவராஜன் உடன்பாட்டினால் சமணர் கொல்ல விடுக்க வந்த யானையினாலும், நீற்றறையினாலும், உணவாக வூட்டிய விடத்தினாலும், சாவாமையைப் பெற்றதும், ஆழ்த்துவதாகிய கற்பாறையையே தெப்பமாகக் கொண்டு கடல்நீந்திக் கரையேறியதும், நறுமணங்கமழும் பொழில்சூழ்ந்த திருமறைக்காட்டில் திருக்கதவைத் திறப்பித்ததும் ஆகிய இவ்வற்புதச் செயல்கள், திருவாமூரை யாண்டருளிய வாகீசப் பெருமானார் தாம் ஓதியருளிய திருப்பாடல்களால் நிகழ்ந்த செயல்களாம் என்பதாம். (3)

வீடுபேற்றை விரும்பினானொருவன் பெண், பொன் என்னும் இவைகளிடத்தில் செல்லத்தக்க ஆசையை அறவே யொழித்தால் அவனுக்கு அவன் விரும்பிய வீடு பேற்றை நாம் அருளுவது என்று சிவாகமங்களிலே விதித்தருளிய இறைவனை, பரவையார் சங்கலியார் என்னும் இரண்டு மங்கையரிடத்தும் தம்பால் உண்டாகிய ஊடலால் பிணக்கைத் தீர்க்கும்பொருட்டுப் போகும்படிவிட்ட வன்றொண்டப் பெருமானார் தாம் செய்தருளிய தொண்டுகளை யான் எத்துணைச் செயலென்று அளவிட்டுச் சொல்லுவேன் என்பதாம். (4)

திருவாதவூரை யாண்டருளிய தேன்போலும் இனிக்கின்ற மணிவாசகப் பெருமானார்—பரிசுத்தமாகிய தேன்நிறைந்த தாமரைமலர்போன்ற தமது திருவாக்கினால், திருப்பாடலைச்செய்து, அப்பாடலில் விளையும் சொற்சுவையால், பரமானந்த சொரூபனாகிய இறைவனை இனிக்கச்செய்து அவ்வினிமை மிகுதியால் ஒப்பற்ற வேதப்புரவி மேல் சேவகனாய் வரச்செய்து, நாமெல்லாம் மாயாவசப்பட்டு கருப்பத்தில் வந்து துன்பப்படும் பெருந்துன்பத்தை அறியாத வகையாகச் செய்தனர் என்பதாம். (5)

இங்ஙனங் கூறிவந்த அருளாளர்களாகிய நம்பெருமக்கள் நம்போன்றவர்களுக் கெல்லாம் பிறவிப்பந்தம் ஒழியப் பெறுவோமோ என்னும் பயத்தையும், முத்தி வீட்டை யடையப்பெறுவோமோ என்னும் ஏக்கத்தையும் போக்கி நமக்கெல்லாம் அம்மை இம்மைப்பயனென்று சொல்லப்படும் இருமைப்பயனாய், யாம் வசிக்கப்பெறும் இப் பரதகண்ட முற்றும் உலாவப் பெற்றிருக்கின்றோ ராகலின், யோகம் என்றால்—மெய்ம்மையாகிய சிவயோகத்தைத் தான் யோகமென்று சொல்லலாம். இச்சிவயோக மல்லாத ஏனைய யோகங்களெல்லாம் அவயோகமென்றே தமக்கும் பிறர்க்கும் பயன் படாதனவாகிய வீணான யோகங்களென்றே மாணவகனே ! நீ அறிவாயாக என்பதாம். (6)

மாணவகனே! இவ்வுலகின்கண் இருக்கின்ற மனிதர்களிடத்திலே, இவ்வுலகினை யாளும் அரசனது அருளானது எவ்வகையா யிருக்கின்றதோ! அவ்வகையாகவே சிவ பெருமான் தன்னடியவர்கள்பால் வைத்திருக்கும் அருள்வகையாகும் என்று சொல்லப் படுமானால் அடியவர்கள் எத்தனைவகையான செயல் வேறுபா டுடையவராயிருப்பினும் அவரெல்லாம் அருளை யாளுகின்றவரேயாவர். அங்ஙனம் அருளை யாளுகின்றவர்களாகிய அவர்கள்தாம் ஒப்புமையில்லாத அடியவர்களாவர். யான் சொல்லிவந்த இவைகளையெல் லாம் நீ அறிவாயாக என்பதாம். (7)

இனி இந்த ஆறு திருவெண்பாக்களாலும் போந்த தொகைப்பொருளாவது இறுதி யிற் கூறிய "மானுடரில் மன்னருள் எவ்வண்ணம், அன்னவகையே அரனருளும்" என்ற உவமையிற் போந்த பொருள்யாதோ, அப்பொருளேயாமென்க.

அஃதாவது—உலகினையாளும் அரசன்—தனது குடைநிழலின்கண் வாழும் உயிர் களைக் காத்தற்பொருட்டுச் செய்யவேண்டிய செயல்களை அறத்தின் வழியானும், தண்டத் தின் வழியானும் செய்தல் முறைமையாகலான் அம்முறைமைகளைத் தனது சத்தியைமேற் கொண்டு தானேயாய் தன்னாணையைச் செலுத்தவல்லாரைக் கொண்டு அறம் தண்டம் என்னும் இருவகையையும் செலுத்துவதேயன்றித் தான் ஒருசெயலும் செய்வதின்று. அஃதேபோல் பெருங்கருணைத் தடங்கடலாகிய இறைவன் தன்னடிச்சார்ந்தாரைக் காக்கும் பொருட்டு, தனது அருட்சத்தியை மேற்கொண்டு தானேயாய்த் (சிவமேயாய்த்) தன்னாணை யைச் செலுத்தவல்ல சிவஞானிகளாகிய அடியவர்களைக்கொண்டு அறக்கருணை மறக் கருணையென்னும் இருவகைச் செயல்களையும் செலுத்துவன். அரசனாணையைச் செலுத்த வல்லார்-பிறர் தம்மை அரசனாகவே எண்ணி நடுங்கும்வகையான தோற்றத்தைக் காட்டி சொற்களையும் வழங்கி அரசனாணையைச் செலுத்துவரேயன்றித் தம்முள்ளத்துள் அரச னைத் தாமாகவும், தாம் செலுத்திய இருவகை ஆணைச்செயல்களைத் தம்முடைய செயல்க ளாகவும் கொண்டு இறுமாப்பினை யடையார். தம்மை அரசனது வேலாளராகவே தம் முள்ளத்தெண்ணி வாழ்வர். அரசனோ அவர்களை ஏவலாளராக எண்ணாது தானாகவே எண்ணித் தனதுசெயலாக நடத்திய அச்செயல்களையும் அவர்கள் செய்த செயலாகவே ஆக்கி அச்செயல்களுக்குத் தான்வேறுபடாது ஒற்றுமையுடையனாய், தானென்றும் அவர்க ளென்றும் எவ்வகையானும் யாவரானும் வேறுபடுத்தி அறிவதற்கின்றி இவனே அவர்க ளாய், அவர்களே இவனாய் வாழாநிற்பன்.

அஃதேபோல், இறைவனுக்கும் அவனருள்பெற்று அவனாணையைச் செலுத்தும் மெஞ்ஞானசம்பந்தம் உடையார்க்குமென்க. இம்முறைமையினை யுணரவே அன்ன வகையே அரனருளும் என்றார். இனிஎன்னில், அடியவரே எல்லாரும் ஆங்கவர்தாம் ஒப் பில் அடியவரே எல்லாம் அறி என்றது—தனது ஆணையைச் செலுத்துகின்றவரிடத்து எந்தவகையான அருளை அரசனிடத்துக் காண்கின்றோமோ, அந்தவகையான அருளையே இறைவன் தன்னாணையைச் செலுத்தும் அடியவர்கள்பால் காணக்கிடக்கின்றது என்று சொன்னால், சிவனேயாய் சிவனாணையைச் செலுத்துமவர் எக்குலத்தராயினும், எக்குண முடையாராயினும், எச்செயலுடையாராயினும் அவரெல்லாரும் அடியவரேயாவர்-(இறை வனருட்செயலைச் செலுத்தும் வன்மையுடையவரே யாவர்) ஆதலின் அவர்களுக்கு ஒப் பாக எந்த ஞானிகளுமாகார், எந்த யோகிகளுமாகார் என்க. இதனை முன்—"இன்றிங்கே அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவர்கள் எங்குமிலை" என்று கூறியவாற்றானறிக.

அதுவேயுமன்றி—ஓடம் சிவிகை என்றும், கொல்கரியின் என்றும், மோகமறுத் திடில் என்றும், பாய்பரி என்றும் கூறிய திருவெண்பாக்களிற் போந்த அற்புதச் செயல் களை யெல்லாம் சிந்தித்தும் அறிவாயாக.

அடியவரே எல்லாருமென்றும், அவர்தாம் ஒப்பில் அடியவர் என்றும், யான்கூறிய உண்மையை நீ சிந்தித்து அறியவல்லனாயின், அவ்வடியவர் அம்மையினும் இம்மை

யினும் அச்சந்தவிர்த்து, எம்மையுமாய் எங்கும் இயங்குமவர் என்றதனையும் தெளிந்தறிவாயாக.

அஃதாவது—அரசனாணைக்கு உட்பட்டிருக்கும் இடங்களிலெல்லாம் உள்ளவர் அரசனைக்கண்டாரில்லை, அரசனும் அவர்களைக் கண்டானில்லை. இருவரும் ஒருவரையொருவர் காணாதொழியினும், உலகினர் அரசனாணையைக் காணாதிருக்கின்றனரா? அரசன் தன்னாணையை எங்கும் பரவாதிருக்கச் செய்கின்றனனா? அரசன் தன்னாணையைச் செலுத்துவது தன்னாணையை மேற்கொண்டு எங்கும்செலுத்தவல்ல அதிகாரிகளைக் கொண்டே. உலகினரும்-தமக்குள்ள பகைவராலும், கள்வர் முதலாயினாராலும், ஏனைய துஷ்டமிருகங்களாலும் உண்டாவனவாகிய அச்சங்கள் ஒழியப்பெற்று தத்தமக்குவேண்டிய சுகங்களை வேண்டியாங்குப் பெற்று வாழ்தலும் அவ்வதிகாரிகளைக் கொண்டே. அவ்வதிகாரிகளன்றி அரசனும் ஒன்றும் செய்தானல்லன். உலகினரும் அவ்வதிகாரிகளன்றி ஒருசுகமும் அடைந்தாரல்லர். இம்முறையே போல் இறைவனும் அடியவரன்றி அம்மையும் இம்மையும் ஒன்றும் செய்வானல்லன். உலகினரும் எம்மையும் பெறவேண்டியவற்றை அடியவர்களன்றி ஒன்றேனும் பெறுவாரல்லர் என்று தெளிந்தறிவாயாக என்பதாம்.

இனி அம்மையிலும் இம்மையிலும் அச்சந்தவிர்த்து அனுக்கிரகஞ் செய்யவல்ல ஆற்றல் சிவயோகமுடையார்க்கு உண்டாமேயன்றி, சிவத்தைமறந்து தம்மையேபொருளாகக் கொள்ளும் அவயோகிகளுக் கன்றென்னும் உண்மையை அறிவாயாக என்பார்—சிவயோகமே யோகம் அல்லாதயோகம் அவயோகம் என்றே அறி—என்றார்.

"துரியங்கடந்த"—என்னும் உந்தியின் பொருளைத் துரியங்கடந்த சுடர்த்தோகையுடன் என்னும் திருவெண்பாவால் தொகுத்தும், ஒடுஞ் சிவிகை—என்னும் திருவெண்பாமுதல் ஆறுதிருவெண்பாக்களால் விரித்துங் கூறினாரென்க.

அஃதாவது—தொண்டர்கள் துரியங்கடந்த நிலை இம்முறை என்றும், அவர்களுக்குச் சாக்கிரம் துரியமாய் நின்ற முறை இம்முறை என்றும், அவர்கள் துறவாது துறந்த முறை இம்முறை என்றும் விதந்த முறைமை என்க. (௩௨)

௩௩. பெற்றசிற் றின்பமே பேரின்பமா யங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது மாயையென் றுந்தீபற.

(எ - து. உ - ர். என் - எனின்) மாயை முளையா வண்ணம் சிற்றின்பம் பேரின்பமாம் முறையைக் கூறிற்று.

(இ - ள்.) பெத்தக்காலத்துப் பெற்ற சிற்றின்பமே, முத்திக்காலத்து அங்கு பேரின்பமாய் முதிரவருந்தன்மையை உணர்ந்தால், அங்குரிக்கும் மாயை அங்குரிக்காதென்க.

சிற்றின்பம்பெற்ற அக்காலம் பெத்தக்காலம். அது அநாதிகாலமாகலான் பெற்ற சிற்றின்பம் என இறந்தகாலத்தாற்கூறினர். பெத்தம்பெற்றகாலம் அநாதியாயிருக்க, அக்காலந்தொட்டு இம்முத்திகாலம்வரையில் பெற்றஇன்பம் சிற்றின்பமாகவே யிருப்பதற்குக்காரணம் யாதெனின், உயிர் சுதந்தரமிலியாயும்; உயிர்க்குக்கூடிய தத்துவக்கூட்டங்கள் சடமானமையானும் பெற்ற இன்பம் பேரின்பமாவதற்கின்றி சிற்றின்பமாகவே சிதறப்பட்டுக்கிடந்தது. முத்திக்காலமாகிய இக்காலத்து உயிர்—எல்லாம் தன்வயத்ததாகவே ஆக்கவல்ல இறைவன் வயத்ததாய் நிற்கவந்ததாகலானும், அங்ஙனம் நிற்கப்பெறவே முடிவிலாற்றலுடைய அவ்விறைவனது அருட்சக்தி இவ்வுயிரோடு துணையாய்க் கூடியதனாலும், உயிர் சிவமயமாயும், தத்துவம், போதம் முதலியனவெல்லாம் அருண்மயமாயும் ஆயின. ஆகவே முன்னைய சிற்றின்பமெல்லாம் வரம்பிலின்பமயமாய்ப் பெருகிற்று என்பார்—பெற்றசிற்றின்பமே பேரின்பமாக்கொண்டு முற்ற

வரும்பரிசு—என்றார். அப்பெருக்கம் வற்றாத பெருக்கமாகலின் துன்பத்தையே எல்லையாக உடைய மாயை முளைப்பதற்கின்றி அழிந்து போயிற்றென்பார்—முளையாது மாயை—என்றார்.

பெத்தக்காலமெனவே—தத்துவங்களும் ஆன்மாவும் சுத்திபெறாதகாலம். முத்திக் காலமெனவே—அவ்விரண்டும் சுத்திபெற்றகாலம்.

## திருக்களிற்றுப்படியார்.

எசு. உடம்புடைய யோகிகள்தாம் உற்றசிற் றின்பம்
அடங்கத்தம் பேரின்பத் தாக்கில்—தொடங்கி
முளைப்பதுமொன் றில்லை முடிவதும்லொன் றில்லை
இளைப்பதும்லொன் றில்லை யிவர்.

(எ-து) சிவயோகிகள் உடம்புடனே கூடியிருக்கின்றார்க ளாகலின் அவர்கள் தமது உடம்புடனே கூடி அனுபவிக்கப் பெறும் சிற்றின்பமனைத்தும், (இறைவன்தமது) பேரின்பத்தில் அடங்கும்படியாக ஆக்கினால் அச்சிவயோகிகள், சிற்றின்பத்துக்குரிய இந்திரியாதிகளுடனே கூடி இது செய்வோமென்று ஒன்றைச் செய்யத் தொடங்குவதும் உண்டோ? அதுவாயிலாக முளைப்பதாகிய ஆகாமிய வினைகளும் உண்டாகுமோ? இல்லை. அது இல்லாமையினால் கருத்தளவையான் கட்டுப்படுவதாகிய சஞ்சிதம் என்று சொல்லப் படுவதாகிய அது வொன்றிருக்குமோ? இல்லை. சஞ்சிதம் இல்லாதொழிவதால், எடுத்த வுடம்பொழிந்து, மீண்டும் உடம்பெடுத்து அனுபவித்து இளைப்பதாகிய பிராரத்தஅனு பவம் ஒன்றுவருமோ? அதுவும் இல்லை என்பதாம்.

உடம்புடையயோகிகள், தாம் உற்றசிற்றின்பம், தம் பேரின்பத்து அடங்க (இறை வன்) ஆக்கில், இவர்தொடங்கி முளைப்பதும் ஒன்றுஇல்லை எனக்கொண்டு கூட்டுக.

சிவயோகிகள்-அவயோகிகளைப்போல் உடம்புடையராயிருத்தலினால் அவர்கட்கும் ஆகாமியம், சஞ்சிதம் பிராரத்தம் என்று சொல்லப்பட்ட மூன்றும் எங்ஙனம் ஒழியப் பெறும் என்று ஐயுறுவார்க்கு அவ்வையமகல இத்திருவெண்பாவைக் கூறினாரென்க.

எனவே, ஆகாமியவினையானது—கருத்தளவையானும் செயலளவையானும் ஒன் றைச்சங்கற்பித்து அதுவாயிலாக விருப்புவெறுப்புக்களைப் பலவாக அங்குரிக்கச்செய்வது இயல்புடைத்தாகலின் அதனை—தொடங்கிமுளைப்பது—என்றார். சஞ்சிதவினையானது—கருத்து செயல் என்ற இருவகையானும் முளைத்தனவாகிய வேண்டப்படும் பொருள், வேண்டப்படாப் பொருளாகிய அவைகளைத் தனக்குள் அடக்கிக்கொண்டு பிறவிக்கிடஞ் செய்து முடிவுபெறாதிருக்கும் இயல்புடைத்தாகலின் அதனை—முடிவதும் ஒன்றில்லை—என்றார். பிராரத்தமானது—முடிவதில்லாத சஞ்சிதத்தினின்றும் வகுத்தனவாகிய அவை சுகதுக்கரூபமாய் ஒருவாற்றானன்றிப் பலவாற்றான் வந்துவந்து இளைக்கச்செய்யும் இயல் புடைத்தாகலின் அதனை—இளைப்பதும் ஒன்றில்லை—என்றார்.

சிவயோகிகளாகிய இவர் உடம்புடையராயினும் மேலேகூறிய இயல்பினையுடைய ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தமென்னும் மூன்றும் இல்லையாகலின்—தொடங்கி முளைப் பதும் ஒன்றுஇல்லை, முடிவது மொன்றில்லை, இளைப்பதும் ஒன்றில்லை என்றார்.

எவ்வாற்றாலெனின்—சிவயோகிகள், சிவஞானத்தால் சிவனையுணர்ந்து அன்பி னால் அவன் வசமாயிருக்கும் இயல்புடையராகலான், அச் சிவயோகிகளை அவ்விறைவன் தனது பேரின்பத்தில் மூழ்கி அதனில் சுகித்திருக்கும்வண்ணம் செய்வது அவனுக்கு இன்றியமையாத கடனாகலின், அவர்களது ஞானக்கிரியைகளைத்தனது ஞானக்கிரியைக ளுக்குள்ளாக்கித் தான்செய்யுஞ் செயல்களெல்லாம் செய்யா நிற்பன். அங்ஙனம் இறை வன் செய்யாநின்றபொழுது, பிராரத்தத்துக்கும் சஞ்சிதத்துக்கும் காரணமாகிய ஆகாமிய

வினையைச் செய்வதற்கு, இவர்களுக்கு விருப்புவெறுப்பை நாடுவதாகிய ஞானமேது? அவற்றிற்குரிய செயல்களைச் செய்வதாகிய கிரியை ஏது? ஒன்றுமின்றாகலான் ஆகாமிய வினை—ஒன்றும் இல்லா தொழிந்தது. அது வொழியவே—சஞ்சிதமும் பிராரத்தமும் இல்லையாயின. எனவே இறைவன் செய்யும் செயலில் ஆகாமிய முதலிய மூன்றும் உளதாயின் அச்செயலுக்குரியாராய் நின்ற இச்சிவயோகிகளுக்கும் உளதாமென்க.

இதனை-"அல்லல் என்செயும் அருவினைஎன்செயும், தொல்லைவல்வினைத் தொண்டந் தான் என்செயும், தில்லைமாநகர்ச் சிற்றம்பலவனூர்க், கெல்லையில்லதோர் அடிமைபூண் டேனுக்கே" என்றும், "கைவினைசெய்து எம்பிரான் கழல்போற்றுதும் நாம் அடியோம், செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறுதிருநீலகண்டம்" என்றும் கூறியவேதமொழி களான் உணர்க.

இத்திருப்பாசுரத்தான் உந்தியாரில் "பெற்றசிற்றின்பமே" என்றதனை உடம்புடைய யோகிகள்தாம் உற்றசிற்றின்பம்எனவும், "பேரின்பமாகக்கொண்டு முற்றவரும்பரிசு" என்றதனை —தம்பேரின்பத்து அடங்க ஆக்கில் எனவும், "முளையாதுபந்தம்" என்றதனை —இவர்தொடங்கி முளைப்பதும் ஒன்றில்லை, முடிவதும் ஒன்றில்லை, இளைப்பதும் ஒன் றில்லை எனவுங்கூறினர்.

இதனால், சிவயோகிகள்-சிவசம்பந்தப்பட்டு சீவதுரியத்தைக்கடந்து சிவதுரியத்தில் நிற்கும் நிலையினையுடையவராதலால், அச்சிவன் தான்செய்யுந் தன்மைகளை அவர்களுக்கு ஆக்குந் தன்மையனாகின்றான். ஆகவே மாயாகாரியமாகிய உடம்பை உடையவராயிருப் பினும் அவ்வுடம்பினால், அனுபவிக்கப்படும் சிற்றின்பத்திற்குரிய ஆகாமியவினை யொழி ந்து, பேரின்பத்துக்குரிய அருட்செயலுடையாராய் சஞ்சிதமும் பிராரத்தானுபவமும் ஒழி ந்து சிவானுபவிகளாய் மாயாபந்தம் ஒழிந்து நிற்பரென்று கூறப்பட்டது.

எனவே-சிற்றின்பத்துக்குரியது இந்தவுடம்பாயினும், இவ்வுடம்பே, பேரின்பம் முற்றவரும்பரிசுக்கும் ஆம் என்னும் உபாயம் கூறப்பட்டதென்க. (நந)

நச. பேரின்ப மான பிரமக் கிழத்தியோ
டோரின்பத் துள்ளானென் றுந்தீபற
உன்னையே ஆண்டானென் றுந்தீபற.

(எ - து. உ - ர். என் - எனின்) உடம்புடையயோகிகளைப் பேரின்பத்து ஆக்கி, முளைக்கும் முளையை முளையாவகை செய்து ஆண்டமுறைமையைக் கூறிற்று.

(இ - ள்) பெரிய இன்பமயமான சத்தியோடு தாதான்மியமாய் அவ்வின்பத்துள் ளானாய் நிற்பவன் பரசிவனாம். அப்பரசிவன் உன்னையே ஆளாக்கிக்கொண்டனன் என்க.

பரசிவம்—யாரும் அரிவரிதாய் அகளமாய் இருக்கும் அவசரத்து பிரமம் எனப் பெறும். அவ்வகண்டாகார பிரமத்தின் சத்தி—இச்சா ஞானக்கிரியை என்னும் பகுப் பின்றிப் பரமானந்தாகாரமாகவே இருக்கும் அவசரத்துப் பராசத்தி எனப்பெறும். பரப் பிரமும் பராசத்தியும் அக்னியும் அதனுஷ்ணமும் போல் அபின்னமாயிருக்குந் தன்மைத் தாகலின்—பேரின்பமான பிரமக்கிழத்தியோடு ஓரின்பத்துள்ளான்—என்றார். பெற்றசிற் றின்பமே பேரின்பமாக்கொண்டு முற்றவரும் பரிசுணர்ந்த உன்னைப்போன்றாரை அப்பர சிவன் தானாக்கிக்கொண்டு தன் செயலெல்லாம் அவர்செயலாகவே செய்வனாகலின்— உன்னையே யாண்டான்—என்றார். அருட் சத்தி மயமாகவே யிருக்கும் முத்தான்மாக்களை அவ்வருட்சத்தியிற்றானே அடங்கிநிற்கச் செய்வன் என்னும் அவ்வுண்மை தோன்ற— உன்னையே யாண்டான்—என்றலுமாம். அருள்வசத்தராய் நிற்கும் சிவயோகிகளிடத்து பரப்பிரமசொரூபமாகிய பரசிவன், ஞானக்கிரியாரூபமாகிய பலசத்திகளின் சம்பந்தத்தால் கொள்ளப்படும் தடத்தவடிவங்களைவிட்டு சொரூபசிவமாய் நிற்பதுபோல், தத்துவதாத் திகங்களால் பலதிறப்பட்டுப் பசுவெனநிற்கும் ஆன்மாவையும், அத்தத்துவங்களி

னின்றும், தற்போதத்தினின்றும் வேறாக்கித் தானாகவே நிற்கச்செய்து ஆளும்அவ் வுண்மை தோன்றவும்—உன்னையே யாண்டான் என்றலுமாம்.

திருக்களிற்றுப்படியார்.

எஎ. பேரின்ப மான பிரமக் கிழத்தியுடன்
ஓரின்பத் துள்ளானை உள்ளபடி—பேரின்பம்
கண்டவரே கண்டார் கடலுயிர்த்த இன்னமுதம்
உண்டவரே உண்டார் சுவை.

(எ - று. பேரின்பமயமாகிய பராசத்தியோடு, அவ்வின்பாகாரமாகவே இருக்கின்ற பரசிவத்தை, (ஆகாமியத்தில் வினைகள் முளைத்து, முளைத்த அவ்வினைகள் சஞ்சிதத்தில் முதிர்ந்து, முதிர்ந்த அவைகள், பிராரத்தத்தில் அனுபவிக்கப்படும் பருவத்தினளவாய் வருவதாகிய சிற்றின்பானுபவத்துட் படாது) இறைவனால் பேரின்பத்துக் குள்ளாகி அப்பேரின்பப் பெருக்கில் தன்னைக்காணாது சிவத்தையும், தன்னறிவைக் காணாது சிவனறிவையும், தன்செயலைக்காணாது சிவன்செயலையும் காணத்தக்க அறிவுடையாரே உள்ளபடி (உண்மையாக)ப் பார்த்தவராவர். (எதுபோலெனின்) கடலின் கண் தோன்றிய இனிய அமுதத்தைப் புசித்தவர்களே அதன்சுவையை யறிந்து உண்டவராவர் என்பதாம்.

பேரின்பமான பிரமக்கிழத்தியுடன், ஓரின்பத் துள்ளானை, பேரின்பங்கண்டவரே, உள்ளபடி கண்டார் எனக்கூட்டுக.

சுட்டறிவுட்பட்ட விஷயங்களின் வழித்தாய் அனுபவிக்கப்படும் சிற்றின்பம் போலாது சுட்டறிவிறந்த சிவஞானத்தின் வழித்தாய் அனுபவிக்கப்படுவதாயுள்ள இன்பமே பேரின்பம்; அதுவே பராசத்தி. ஒருநாமம் ஒருருவம் இல்லாமல், ஆதியும் அந்தமும் இல்லாமல் அகண்டாகாரப் பேரொளிப் பிழம்பாயிருக்கும் பரசிவமே—பிரமம்.

பேரின்பாகாரமாகிய பராசத்தியோடு பரசிவமாகிய பரப்பிரமம், பண்ணினிடத் துள்ள இசைபோலும், பழத்தின்கண்ணுள்ள சுவைபோலும் அத்வைதமாய்க் கலந்திருக் கும் தன்மையுடைத்தாகலின்—பேரின்பமான பிரமக்கிழத்தியுடன், ஓரின்பத்துள்ளானை என்றார்.

ஒப்பாகாத இருவினைகளை ஒப்புவரச்செய்ததும், பாகம்வரப்பெறாத மலங்களைப் பாகம் வரச்செய்ததும், திரோதானசத்தியாகலான் அச்சத்தியினால் விளைந்த இன்பத்தைக் கண்டவரும் சத்திபதிதலை யறியப்பெறாத தன்னறிவின்கண் சத்திநிபாதம் வரச்செய்தது இச்சாசத்தியாகலான் அச்சத்தியினால் விளைந்த இன்பத்தைக் கண்டவரும், அச்சத்திபதிவினால் தெரிசிக்கவந்த ஆசிரியன்பால் கேட்டல், தெளித்தல், நிட்டைஎன்னும் நான்கினையும் பெறும்படிச் செய்தது-ஞானக்கிரியாசத்திகளாகலான் அவ்விருசத்திகளால் விளைந்த இன்பத்தைக் கண்டவருமே, நிட்டையின்கணிகழும் சிவானந்தானுபவமாகிய சிவயோகத்தில் நிலைபெறச்செய்தது பராசத்தியாகலான் அச்சத்தியால் விளைந்தபேரின்பத்தை உள்ளபடிகண்டவராவர் ஆதலான்—உள்ளபடி கண்டவரே பேரின்பங்கண்டார் என்றார். பாற்கடலிற் றோன்றிய அமுதத்தை யுண்டவர் தேவரேயன்றி மற்றைய ரல்லாராகலான், அஃதேபோல் இங்ஙனம் இருவினையொப்புமுதல் நிட்டையீறாகக்கூறிய முறைப்படி வந்த சிவயோகிகளே இப்பேரின்பத்தை யறியத்தக்கவராவரே யன்றி, இருவினையொப்பு வரப்பெறாது அவ்வினையுட்பட்டுழல்வாரும், மலபாகம் ஆகப்பெறாது மும்மலத்துள் ஆழ்ந்து கிடக்கின்றவரும், சத்திநிபாதம் எய்தப்பெறாது ஆசைவசப்பட்டலைபவரும், ஆசிரியன்பால் கேட்டலாதிகளைப் பெறாது தற்போதத்தால் சாத்திரங்களிற் பழகுவோருமாகிய அவயோகிகள் இப்பேரின்பசுகத்தை யறியார் என்னும் அவர்களது அறிவின் சிறுமையும், இப்பேரின்பத்தை அறிந்தாரது அறிவின்பெருமையும், ஈண்டே

உணர்த்த எண்ணி—கடலுயிர்த்த இன்னமுதம் உண்டவரே உண்டார் சுவை என உவமைமுகத்தாற் கூறினர்.

அல்லதூஉம்—கடலிற்றோன்றிய இனிய அமுதம்-தன்னிடத்துள்ள சுவைவேறாகவும் தான் வேறாகவும் இராமல் சுவை வடிவமாகவே அமுதமெனப் பெயர்பெற்றிருத்தல் போல், பரசிவன் தன்னிடத்துள்ள பேரின்பரூபமாயிருக்கும் பராசத்தி வேறாகவும் தாம் வேறாகவும் இராமல் பரப்பிரமம் எனப் பெயர்பெற்றிருப்பர் என்பார்—பேரின்பமான பிரமக்கிழத்தியொடு ஓரின்பத்துள்ளான் எனவும், அமுதத்தின்சுவையை உண்டறியவல்லார் எவரோ அவரே இது அமுதம் என்றும், இது சுவையுடைத்தென்றும் அறிந்து அவ்வமுதத்தை யுண்டவராவர். அஃதேபோல் சிவயோகிகளே பரசிவாமுதத்தை அருட்சுவையுடைத்தென்று உண்டவராவரென்பார்—கடலுயிர்த்த இன்னமுதம் உண்டவரே உண்டார் சுவை எனவும் கூறியதுமாம்.

சத்தியை—பிரமக்கிழத்தி என்றதனல் சிவத்தை—பிரமமெனக் கொள்ளக்கிடந்தது.

இத் திருப்பாசுரத்தால்—உந்தியாரில்—"பேரின்பமான பிரமக் கிழத்தியோடோரின்பத்துள்ளான்"—என்றதை—பேரின்பமான பிரமக் கிழத்தியுடன் ஓரின்பத்துள்ளானை எனவும், "உன்னையே ஆண்டான்" என்றதை—கடல் உயிர்த்த இன்னமுதம் உண்டவரே சுவையுண்டார் (அதுபோலும்) பேரின்பங் கண்டவரே உள்ளபடி கண்டார் எனவுங் கூறினர்.

பேரின்பத்தைக் கண்டவர்போலும் நீ உள்ளபடி கண்டிருக்கின்றாய் என்னும் அக்குறிப்புத் தோன்ற உன்னை ஆண்டான் என்று கூறினராகலின், அதனை ஈண்டு உவமைமுகத்தால் விதந்து காட்டினரென்க.

இதனல், மேலை வெண்பாவில், உடம்புடைய யோகிகளுக்கு இறைவன் முளைப்பதும், முடிவதும், இளைப்பதும் ஆகிய வினைகளொன்றும் இராவண்ணம் ஆக்கிப் பேரின்பத்துள் ஆக்குவான் என்னும் உண்மையை வெளிப்படுத்தினராகலின், ஈண்டு அவ்விறைவன் பேரின்பமான பிரமக் கிழத்தியோடு ஓரின்பத்துள்ளானுகிய பரசிவனென்றும், அவ்விறைவன், தம்மால் பேரின்பத்துக்குள்ளாகிய சிவயோகிகளே தமது இன்பத்தை அனுபவிக்கும் ஆற்றலுடையவராகலான் அவர்களைக் கைவிடாது ஆண்டருளுவனென்றுங் கூறப்பட்டன.

அங்ஙனம் அவர்களையாண்டருளும் அந்நிலையில், அச்சிவனும் அவர்களும் பெண்டிர்பிடிபோல ஆண்மக்கள்பேய் போல நிற்கும் நிலையாமென்று இனி வரும் உந்தியாராற் கூறுகின்றார். (௩௪)

௩௫. பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரென் றுந்தீபற
காணுதார் காணுரென் றுந்தீபற.

எ-து - உ - யார் - என்—எனின். சிவயோகிகளுக்கும் சிவசத்திகளுக்கும் உள்ள வொற்றுமை இத்தன்மைத்தென்று கூறிற்று.

(இ - ள்.) பெண்பேய் ஆண்பேய் என்னும் பேய்கள் ஒருவரைப் பிடித்துக் கொண்டால் அப்பேய்களினல் பிடியுண்டவர்கள் அப்பேய்களின் வசமாகவே யிருக்க, அப்பேய்கள் உடல் கரணமுதலிய யாவையும் தம்வசமாக்கிக் கொண்டு தமது செயல்களைச் செய்து அவர்களை விடாதுபற்றி யிருத்தல்போல், சிவசத்திகளும் சிவயோகிகளுமாமென்று அவ்வனுபவநிலையைக் கண்டவரே சிவானந்தானுபவ நிலையைக் கண்டவராவர். அங்ஙனமான நிலையைக் காணவல்லரல்லாதவர் அச்சிவானந்தானுபவ நிலையைக் காணுதவரேயாவர் என்க.

பெண்பேய் பற்றினல் அதற்குரிய செயலும், ஆண்பேய் பற்றினல் அதற்குரிய செயலும் பற்றப்பட்டாரிடத்து காணக் கிடத்தல்போல், சிவசத்திகளால் பற்றப்பட்டா

ராகிய சிவயோகிகளிடத்துக் கண்டவரே கண்டவர். எனவே—பேயினல் பிடிக்கப்பட்டா ஒருவனைக் கண்டவர்—அவனைப் பேயனென்றும், அவன் செய்கையைப் பேய்ச் செயலென்றும் சொல்வரேயன்றி, அவனை முன்னுள்ள பேருடையவனென்றும், அச் செயலுள்ளவனென்றும் சொல்ல அறியார். அஃதேபோல் பேய்பிடியுண்ட அவனும் முன்னுள்ள தனது நிலைமையினையும் செயலையும் அறியான். அவனது நிலை அவ்வியல் பிற்ருயினும் அப்பேயோ அவனேயாய் தன்செயலை நிகழ்த்துகின்றது. அங்ஙனம் நிகழ்த்துகின்ற முறைமையால் அவன் பேயனென்றே சொல்லப்பட்டும் காணப் பட்டும் வருகின்ருன். அன்றியும், பெண்பேய் பிடிப்பது—ஆண்மகனை. ஆண்பேய் பிடிப்பது—பெண்ணை. ஆகவே ஆண்மகனைப் பெண்பேய் பிடித்தகாலத்து அவனது ஆண்தன்மையை யொழித்து பெண்தண்மையைக் காட்டுவதும், பெண்ணை ஆண்பேய் பிடித்த காலத்து அவளது பெண்தன்மையிற் தனது ஆண்தன்மையைக் காட்டுவதும் இயல்பு. இவ்வியல்பு தோன்றவே—பெண்டீர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போல என்று உவமை முகத்தாற் கூறினர்.

இதுதான் பேயினல் பற்றப்பட்டாரிடத்துக் காணக்கிடக்குந் தன்மை. இத்தன்மையைக் கண்டார், இஃதேபோல் சிவயோகிகளிடத்துக் காண்கின்ற தன்மை யாதெனின்,—பேரின்பமான பிரமக்கிழத்தியும், பாசிவமும் ஓரின்பமாய் (அபின்னமாய்) இருப்பரென்று முன்னே கூறப்பட்டிருக்கின்றது. அதனல் பராசத்தியும் பாசிவமும் வேருயிருப்ப ரன்றென் ருயிற்று. ஆகவே, சிவசத்திகளால் பற்றப்பட்ட சிவயோகி களைக் காண்பாராயின், அவரைச் சிவமே என்றும், அவரிடத்து நிகழுஞ் செய்கையைச் சிவச்செயலே என்றும் கூறுவரேயன்றி, முன்னுள்ள சீவத்தன்மை யுடையவரென் றும், சீவச்செய லுடையவரென்றும் கூறுர். அச்சிவயோகிகளும் தமக்கு முன்னுள்ள நிலைமையும் செயலையும் அறியார். சிவனே அச்சிவயோகிகளுக்குத் தன்னையே அறி வித்து, அவர்களைத் தானேயாக்கியும் தன்னருளைப் பிரகாசிப்பித்துத் தனது அருட் செயலைச் செய்வித்து அவ்வருளிலேயே நிறுத்துவன் என்று காண்பர்.

இதனல்—பேய் பிடியுண்டாரிடத்துப் பேய்த்தன்மையைக் காண்டல்போல், சிவ சத்தியாற் பிடிப்புண்டவரிடத்து சிவத்தன்மையே கிடக்குமாகலான் அவர்களிடத்தில் சீவத்தன்மையைக்சாணுது சிவத்தன்மையே காணவேண்டுமென்று கூறப்பட்டது. இதனை "பேயொன்றுந் தன்மை பிறக்குமளவுமே, நீயொன்றுஞ் செய்யாமனில்" என வரும் திருவருட் பயனுற் காண்க.

இனி, பேயென்று பொதுமையாற் கூருது —பெண்டீர் பிடி என்றும், ஆண்மக்கள் பேய்போல என்றும் இருவகைப்படுத்திக் கூறியது என்னையெனின், பெண்டீர் பிடி என்றது—சிவசத்தியை, ஆண்மக்கள் பேயென்றது—சிவத்தை. ஆகவே—பெண் பேயானது—தன்னல் பிடிக்கப்பட்டவனது ஆண்தன்மையைக் கெடுத்துத் தன் வச மாக்கிக் கொள்வதுபோல், சிவசத்தியானது—தன்னல் பிடிக்கப்பட்ட சிவ யோகிகளது தற்போதத்தையும் கரணச்செயலையும் கெடுத்து நானென்றெழும் எழுச்சியையும் அடக் கித் தன் வசமாக்கிக் கொள்ளுதலால் சத்தியைப் பெண்டீர் பிடிபோல என்றும், ஆண் பேயானது—பெண் தன்மையில் தனது ஆண் தன்மையைக் காட்டுவதுபோல், தற் போதத்தாலும் கரணத்தாலும் நானென்றெழும் எழுச்சியற்று, அருள் வசப்பட்டு அரு ளின் எழுச்சியாய் நிற்கின்ற காலத்து—அவ்வருளோடு அபின்னமாயிருக்கும் சிவமானது, தனது செயலை அச்சிவயோகிகள் செயலாக்கித் தனது ஆண் (சிவமே என்று எண்ணுந்) தன்மையை யாவருங் காணச் செய்தலான் சிவத்தை ஆண்மக்கள் பேய்போலவென்றுங் கூறினர்.

இதனல், பெண்பேய் ஆண்தன்மையைக் கெடுத்துத் தன்தன்மையை அந்த ஆண் மகனிடத்துக் காட்டல்போலும், சிவசத்தியானது சிவயோகிகள்பால் என்றும் சீவபோதந்

தோன்றுவாறு தற்போதத்தைக்கெடுத்துத் தனது அருட்டன்மையில் நிறுத்திக் காட்டுமென்றும், ஆண்பேய் தன்னால் பிடிக்கப்பட்டாரிடத்துத் தன் செயலைக் காட்டித் தான் ஆளுதல் போலும், சத்தியையுடைய சத்தனாகிய சிவன் அருட்டன்மையில் நிற்கும் அச் சிவயோகிகள் பால் அவர்கள செயல் என்றுந் தோன்ற வொட்டாது தன் செயலையே செய்து அவர்கள் தானாகவே யிருப்பனென்றுங் கூறப்பட்டன.

திருக்களிற்றுப்படியார்.

எஅ. நங்கையினால் நாமனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும்—நங்கையினும்
நம்பியாய்த் தானடுவே நாட்டப் பெறும் இதுகாண்
எம்பிரா னார்தம் இயல்பு. (1)

எகூ. பொன்னிறங் கட்டியினும் பூணினும் நின்றாற்போல்
அந்நிறம் அண்ணலும் அம்பிகையும்—செந்நிறத்தள்
எந்நிறத்த ளாயிருப்பள் எங்கள் சிவபதியும்
அந்நிறத்த னாயிருப்பன் ஆங்கு. (2)

"பேரின்பமான பிரமக் கிழத்தியுடன் ஓரின்பத்துள்ளான்" என்றதனை இவ்விரண்டு திருவெண்பாவானும் விதந்து கூறுகின்றார்.

(எ - து) நாம் நமது நினைவின் கண் செய்யப்படுவனவாக எண்ணும் செயல்களனைத்தையும், நம்முடைய கையினால் நாம் செய்து முடித்தல்போல, நாயகனும் (சிவபெருமானும்) தனது சத்தியினால் தனது செயல்களாகச் சங்கற்பிக்கும் எல்லாச் செய்திகளையும் செய்து முடிக்கின்றான். (அதுவேயுமன்றி) அந்தச் சத்தியாகிய உடையாள் நடுவில் சிறந்த சத்தனாக நிலை பெற்றிருக்கின்றான். (மாணவகனே!) எமது பெருமானாகிய இறைவனது இயல்பு இதுவேயாகும். (க)

(உடையாள் நடுவில் நம்பியிருக்கும் தன்மை எத்திறமெனின்,) பொன்னினிடத்துள்ள அந்த நிறமானது, ஆபரண வகைகளாகாது பொன்னாயிருப்பினும் ஆபரண வகைகளா யிருப்பினும் வேறுபடாது ஒரு தன்மையாய் இருத்தல்போல, இறைவனும் இறைவியுமாம். ஆகலின், அருட்குணத்தளாகிய பராசத்தி, எந்தக் குணமுடையவளாய், எந்த வடிவத்தோடு கூடியிருக்கின்றனளோ, அவ்வடிவத்தில் அந்தக் குணமுடையவனாய், எங்கள் பதியாகிய சிவனும் இருப்பன் என்பதாம் (உ)

(க) நாயகனும் நங்கையினால் செய்தளிக்கும் எனவும்,(உ)பொன்னிறங் கட்டியினும் பூணினும் அந்நிறம் நின்றாற்போல், அண்ணலும் அம்பிகையும் செந்நிறத்தள் எந்நிறத்தளாயிருப்பள், ஆங்கு எங்கள் சிவபதியும் அந்நிறத்தனாயிருப்பன் எனவுங் கூட்டுக.

அந்நிறம்—அக்குணம். அண்ணல்—தனக்கு மேலொரு தலைவனில்லாமல் தானே யாவர்க்கும் தலைவனாய் அப்பனாயுள்ளவன். அம்பிகை—தனக்கொரு தாய் வேண்டாமல் தானே யாவர்க்கும் அம்மையாயுள்ளவள். செந்நிறத்தள்—செம்மையாகிய அருட்குணமுடையவள். எந்நிறத்தள்—எந்தக் குணமுடையவள், எந்த வடிவமுடையவள். அந்நிறத்தன்—அக்குணமுடையவன், அவ்வடிவமுடையவன்.

நாமும் நமது கையும்போல்—நம்பியும் நங்கையும். நமது கையினால் நாம் அனைத்தையும் செய்வதுபோல, நாயகனும் நங்கையி (தனது சத்தியி) னால் நாடனைத்தும் செய்வன் என்றார். அங்ஙனமாயினும் நமது கை எனது கையெனப் பிறிதின் கிழமைப் பொருளாகவுள்ள அதுபோலு. மன்று சிவமும் சத்தியும். இருவரும் பொன்னிறத்தைப் போல் தற்கிழமைப் பொருளாக வுள்ளவர் ஆகலான்—நங்கையினும் நம்பியாய்த் தான் நடுவே நாட்டப்பெறும் என்றார்.

இனி, பொன்னிறத்தைப்போல் தற்கிழமைப் பொருளாக வுள்ளவர் என்றது என்னையெனின், பொன்—சிவம். நிறம்—சத்தி. மாற்றைக் காட்டுவது—நிறம், அந்த நிறங்காட்டுவது—அப்பொன்னின் உயர்வை. இதனால் பொன்னின் உயர்வைக் காட்டுவது நிறம்போல, சிவத்தின் உயர்வைக் காட்டுவது—சத்தி என்றாயிற்று. உயர்வைக் காட்டுவதாகிய நிறத்தைவிட்டு பொன் வேறாயிருக்க அறியாதவாறுபோல, தனது உயர்வைக் காட்டுவதாகிய சத்தியைவிட்டுச் சிவம் வேறாயிருக்க அறியாதாகலான்—செந்நிறத்தள் எந்நிறத்தளாயிருப்பள், ஆங்கு சிவபதியும் அந்நிறத்தனா யிருப்பன் என்றார்.

இவ்விரண்டு திருப்பாசுரத்தில், உந்தியாரில்,—"பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக் கண்டாரே கண்டார்" என்றதை—நங்கையினால் நாமனைத்தும் செய்தாற் போல் நாடனைத்தும், நங்கையினால் நாயகனும் செய்தளிக்கும் என்றும், பொன்னிறங் கட்டியினும் பூணினும் நின்றாற்போல், அந்நிறம் அண்ணலும் அம்பிகையும் என்றும், "காணாதார்" என்றதை—நங்கையினாற் நம்பியாய்த் தானடுவே நாட்டப்பெறும் இது காண் எம்பிரானார் தம்இயல்பு என்றும், செந்நிறத்தள்—எந்நிறத்தாளா யிருப்பள் எங்கள் சிவபதியும் ஆங்கு அந்நிறத்தனாயிருப்பன் என்றுங் கூறினார்.

இதனால்—பேய் நிலைமையைக் கண்டார்க்கு—நங்கை, பொன்னிறம் என்னும் இரு வகை யுபமானங்களால் சிவசத்திகளின் தன்மையை வலியுறுத்தியும், அவ்வுவமானப் பொருளைக் காணாதார்க்கு—எம்பிரானார்தம் இயல்பு என்றும், ஆங்கு அந்நிறத்தனா யிருப்பன் என்றும் அவர்கள் தெளியும்படியாகச் சிவசத்திகளின் தன்மையை இத்தன்மைத்தென்று நிலைநாட்டியதுமாம்.

இனி, காணாதார் காணார் என்றதனை—இனிவரும் உந்தியாரும், இரண்டு திருவெண்பாக்களும் விதந்து கூற எழுந்தனவாகலான் மாணவகனே அவற்றை உய்த்துணர்வாயாக. (ரு௫)

ருசு. நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடில்
நாலாம் நிலயமென் றுந்தீபற
நாதற் கிடமதென் றுந்தீபற.

எ - து உ - யார் என்—எனின் - பரசிவத்துக்கு இடம் இதுவென்று கூறிற்று.

(இ - ள்.) ஐம்பூதங்களில் நாலாவதாகிய வாயுவும், தத்துவங்களின் முடிவாகிய நாததத்துவமும், நாதாந்த ஸ்தானமாகிய பிரமரந்திரத்தில் பொருந்துமாயின் (அவ்விடத்துக்குமேல்) சத்தி, வியாபினி, சமனை, உன்மனை என்னும் நால்வகைச் சத்திகளும் நிலை பெற்றிருக்கும் இடமாம். அவ்விடமே பரசிவத்திற்கு இடமாம் என்க.

ஈண்டு வாயு என்றது—பிண்டமாகிய சரீரத்திலுள்ள பிராண வாயுவை. பிராணனாகிய ஆன்மா—அனுபவித்து வரும் சாக்கிராவஸ்தை முதலிய ஐந்து அவஸ்தைகளிலும் விடாது உடனிகழும் வாயுவாதலால் அது பிராணவாயு எனப்பட்டது. நாததத்துவம் - அறிவு வடிவாதலால் அந்த நாததத்துவமானது ஆன்மாவின் அறிவைப் பிரகாசப்படுத்தும் செயலுடையதாயிற்று. ஆகவே அவஸ்தை வசப்பட் டுழலவல்ல பிராணவாயுவும், அவ்வவஸ்தையின் வசப்பட்டுழலும் ஆன்மாவிற்கு ஆங்காங்கு நுகரவரும் விஷயங்களை அறிவிக்கவல்ல நாததத்துவமும் சிவசத்தி வியாபகத்துக்கு எல்லையாயுள்ள பிரமந்திர ஸ்தானத்தில் அடங்கப் பெறுமாயின்; பரசிவத்திற்கு வாசஸ்தானமாயுள்ள நாலாம் நிலயமாகிய துவாத சாந்தத்தில் அப்பரசிவனைக் காணலாம். நாலாய பூதமும், நாதமும் ஒன்றும் நிலையைக் காணப்பெறாதவர், அச்சிவத்தைக் காணப்பெறாதவரே யாவர். துவாத சாந்தமாவது—பிரமரந்திரத்துக்கு மேல்—பன்னிரண்டு அங்குலமாகச் சொல்லப்பட்ட எல்லை. அவற்றுள் சத்தி—ஓரங்குலம், அதற்குமேல்—வியாபினி மூன்றங்குலம், அதற்கு மேல்—சமனை நான்கு அங்குலம், அதற்குமேல்—உன்மனை நாலங்குலம். ஆகப் பன்னி

கண்டங்குலம். இந்த துவாதசாந்த ஸ்தானம்—துவாத சாதித்தர் உதயமானதுபோல் பிரகாசிக்கும். அந்தப்பிரகாசத்தில் சகல தத்வாதீதமாகிய பரசிவன்—நின்மலமான கண்ணாடிக் கொப்பான சரத்கால தண்ணீரைப்போலும் காந்தியுள்ளவராய்ப் பிரகாசிப்பர். இதன் விரிவெல்லாம் சித்தாந்த சாராவளியில் கிரியாபாதத்திற் காண்க.

## திருக்களிற்றுப்படியார்.

௮0. தாரத்தோ டொன்ருவர் தாரத்தோர் கூருவர்
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர்—தாரத்தில்
நாதாந்தத் தேயிருப்பர் நாற்ருனத் தேயிருப்பர்
வேதாந்தத் தேயிருப்பர் வேறு. (1)

௮௧. ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்கள் ஒன்ருக
நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவால்—இன்றுரைக்க
என்னல் இயன்றிடுமோ என்போல்வார் ஏதேனும்
சொன்னுற்ருன் ஏறுமோ சொல். (2)

எ-நு. ஏது அல்லை, ஏதல்லை என்று அன்மைச் சொல்லினல் துதித்து இளைத்து நிற்கும் இயல்பினையுடைய வேதாந்தத்தின்கண், (ஒன்ருய் வேருய் உடனுயிருக்கும் அத்துவைத நிலையாகிய மூவகைநிலையுள்) வேருயிருக்கும் நிலையினை யுடையவரா யிருப்பவரும், ஸ்ரீகண்டருத்ரபதத்தையும், அநந்தேஸ்வர பதத்தையும், சதாசிவ மூர்த்தி பதத்தையும் கடந்துள்ள நான்காம் பதமாகிய பரசிவபதத்தில் ஒன்ருயிருப்பவருமாகிய இறைவனுர் (இந்நிலையன்றி வேறு நால்வகையா யிருப்பர். அவையாவன:) தாரத்தோடு ஒன்ருவர்—இச்சா சத்தியோடு கலந்து ஒன்ருயிருப்பர், தாரத்தோர் கூருவர்—ஞானசத்தியோடு கலந்து ஒருகூற்ருனே வேருயிருப்பர், தாரத்தோடு எங்கும் தலைநிற்பர்—கிரியா சத்தியோடு கலந்து எவ்விடத்தும் உடனுயிருப்பர், தாரத்தில் நாதாந்தத்தே இருப்பர்—சகல தத்துவாதீதமாய் விளங்கும் பராசத்தியினிடத்தில் பரமானந்த ரூபியாயிருப்பர் என்பதாம் (1)

இவ்வாறு சைவர்களால் சித்தாந்தமென்று சொல்லப்படும் சிவாகமங்களெல்லாம் ஒரே முடிவாக நிச்சயித்துக் கூறும். ஏனைய சாத்திரங்களெல்லாம் ஒருவர் சொல்லுவது போல் ஒருவர் சொல்ல அறியாத சமயிகளாகிய பூர்வ பக்ஷிகளால் சொல்லப்பட்டனவாகலான், அவையெல்லாம் ஒரு முடிவை யுடையனவாக நின்று, அதனை நிச்சயித்துச் சொல்ல முடியாவாம். ஆகலான், அவர்களுக்கெல்லாம் இப்பொழுது இந்த சித்தாந்த முடிவை என்னல் சொல்லுவதற்கு முடியுமோ, (யானேயன்றி) என்னைப் போன்ற சித்தாந்திகள் ஏதேனும் ஒரு சித்தாந்தத்தை எடுத்துச் சொன்னுலும் அவர்களது அறிவிற்புகுமோ மாணவகனே! நீ சொல்வாயாக என்பதாம். (2)

வேதாந்தத்தே யிருப்பர், நாற்ருனத்தே யிருப்பர். (அதுவேயுமன்றி) வேறு, தாரத்தோடொன்ருவர், தாரத்தோர் கூருவர், தாரத்தோடெங்குந் தலை நிற்பர், தாரத்தில் நாதாந்தத்தே யிருப்பர் எனக் கொண்டுகூட்டுக.

சத்தி—பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, என ஐவகைப்படும். அவற்றுள் நால்வகைச் சத்திகள் சிவன் வசமாய் நிற்பன. ஆதி சத்தியொன்று ஜீவர்கள் வசமாய்த் திரோதான சத்தி என நிற்பது.

இச்சாசத்தியானவள்—ஆன்மாக்கள் ஆணவமலத்தில் ஆழ்ந்து கிடக்கும் பெருந்துன்பத்தை நாடி, அது பொருது, கருணை யுடையவளாய் அவ்வான்மாக்களுக்குச் சத்திநிபாதம் வருவிப்பானென்னும் இச்சையுடையவள். அமல மூர்த்தியாகிய இறைவனும் அவ்விச்சையுடையவன் ஆகலின்—தாராத்தோடு ஒன்ருவர் என்ருர்.

ஞான சத்தியானவள்—அச்சத்திநி பாதம்—மலபாகம் வந்தாலன்றிக் கூடாது. அது—பாசஞான பசு ஞானங்கள் விட்டொழிந்தாலன்றி வாராது. அவை—சிவஞானத்தாலன்றி ஒழியா. ஆகவே, அச்சிவஞானம் வரும் உபாயத்தை எண்ணும் ஞானமுடையவள். இறைவனும் அவ்வுபாயத்தை ஒவ்வோர் கூறாக உணர்த்தவல்ல ஞானமுடையவனாகலின்—தாரத்தோர் கூறுவர் என்றார்.

கிரியா சத்தியானவள்—(ஆன்மாக்களுடைய) "ஞானத்தின் கண்ணை மறைத்த கடிய தொழில் ஆணவத்தால், எண்ணும் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும் உண்ணாடிக், கட்புலனாற் காணார்தங் கைக்கொடுத்த கோலேபோல், பொற்புடைய மாயைப் புணர்ப்பின் கண்—முற்பால், தனுகரணமும் புவனமும் தந்து அவற்றான், மனமுதலாய் வந்த விகாரத் தான்—வினையிரண்டும் (புண்ணியம் பாபம் என்னும் இரண்டும் உண்டாம் படி) காட்டி, அதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு (அப்பிறப்பினைக் கொண்டு செய்யும் வினைகளை ஏற்றுக்கொண்டு) மீட்டறிவு காட்டும் வினை (மீண்டும் அந்த வினைப்போகங்களைப் புசிப்பதற்குக் கலாதி ஞானங்களையும் காட்டும் கிரியை)யும்—(அந்தக் கிரியையினால்) நாட்டுகின்ற எப்பிறப்பும் முற்செய் இருவினையால் நிச்சயித்துப், பொற்புடைய தந்தைதாய்ப் போகத்துள்—கர்ப்பமாய், புல்லிற்பனிபோல் புகுந்திவலைக்கு உட்படுங்கால் (அங்குள்ள சாடராக்னியினாலும், கிருமிமுதலிய உயிர்களினாலும் சிறிதுந் தீங்குறாவண்ணம்) காத்து, காமியத்துக்கேயக் கைகால் முதலா எவ்வுறுப்பும் மாசறவே செய்து திருத்திப் பின்பு யோகிருத்தி முன்புக்க (தாகிய யோனி) வழியே சொண்டு அணைகின்ற வல்லபம்(கிரியை) உம்—(அங்ஙனம் யோனி வழியாய் வருகின்ற காலத்து) அம்மாயக்காற்றினால் மறைப்ப, நல்ல அறிவொழிந்து நன்கு தீது—எல்லையுறா, அக்காலந் தன்னில் பசியை அறிவித்து அழிவித்து, உக்காவிசோரத் தாய் உள் நடுங்கி—மிக்கோங்கும், சிந்தையுருக முலையுருகத் தீம் சுவைப்பால் வந்து மடுப்பக் கண்டு வாழ்ந்திருப்பப்—பந்தித்த, பாசப் பெருங்கயிற்றால் பல்லுயிரும் பாலிப்ப நேசத்தை வைத்த நெறி (கிரியை)யும்—(பின்னர்)மாசற்றபாளைப்பசும்பதத்தும், பாலனும் அப்பதத்தும், நாளுக்கு நாள் சகல ஞானத்தும்—மூள்வித்துக், கொண்டாள வாளக் கருவி கொடுத்து ஒக்க நின்று பண்டாரியானபடி (கிரியை)யும்,—(அங்ஙனம் ஒக்க நின்றகாலத்து) புன்புலால், போர்த்த புழுக்குரம்பை மாமனையில், (துரியாதீதம், துரியம், சுழுத்தி, சொப்பனம் சாக்கிரம் என்னும்) அன்பு சேர்கின்றன கட்டு ஐந்தாக்கி, (அந்தக் கட்டுகளில் செய்யப்படுவனவாகிய) தொழிற்குரியராக்கும் அறம (கிரியை)உம்—(அங்ஙனம் தொழிற்குரியராக்குங் காலத்தில்) வேட்கைமிகும், உண்டிப் பொருட்டால் ஒரு கால் அவியாது, மண்டி யெறியும் பெருந் தீமாற்றுதற்குத்—திண்டிறல்சேர், வல்லார்கள் வல்லவகையால் தொழிற்புரிதல், எல்லாம் உடனே ஒருங்கிசைந்து—செல்காலை முட்டாமற் செய்வினைக்கும் முற்செய் வினைக்கும் செலவு, பட்டோலை தீட்டும்படி (கிரியை)யும்—இந்நிலைமை மானிடருக்கேயன்றி யெண்ணிலா மன்னுயிர்க்கும் இந்த வழக்கேயாய்—முன்னுடைய, நாணாள்வரையில் உடல்பிரித்தும் நல்வினைக்கண், வாழ்நாளில் மாலாய் அயனுகி—நீள்நாகர், வானுடர்கோ முதலா வந்த பெரும்பதத்து, நானாவிதத்தால் நலம்பெறுநாள் தான் மாள, வெற்றிக் கடுந்தூதர் வேகத்துடன் வந்து, பற்றித் தம் வெங்குருவின் (இயமன்) பாற்காட்ட—இற்றைக்கும், இல்லையோ பாவி பிறவாமை என்றெடுத்து, நல்லதோர் இன்சொல் நடுவாகச்—சொல்லியிவர், செய்திக்குத் தக்க செயல் உறுத்துவீர் என்று வெய்துற்றுரைக்க விடைகொண்டு, (அக்காலதூதர், செக்கிலிலும், தீவாயிலும், நெருப்புத்தூணிலும் ஆகிய இவைகளில் திரித்தும், எரித்தும், தழுவுவித்தும், அவையன்றி, நாராசங்காய்ச்சி செவியில் வார்த்தும், நாவினையரிந்தும், அவர்கள் மாமிசத்தை யறிந்து அவர்களையே தின்னும்படி யடித்தும் - இவ்வகையான பல பெருந்தன்பத்துள் ஆழ்த்தித் தீவினைகளை யொழிக்கும் மறக்கருணை(யாகியகிரியை) யும்—பல்லுயிர்க்கும் இன்னவகையால் இருவினைக் கண்ணின்றருத்தி (அவ்விருவினையும்

லேங்கவல்ல) நல்ல நெறி, எய்துவதோர் காலந் தன் அன்பரைக்கண்டு இன்புறுதல், உய்யு நெறிசிறிதே யுண்டாக்கிப்—பையவே, மட்டாய் மலராய்வருநாளில் முன்னை நாள், மொட்டா யுருவா முறைபோலக்—கிட்டியதோர், நல்ல பிறப்பில் பிறப்பித்து, சரியையாதிகளைப் படிமுறையிற் செய்வித்து அவற்றான் இருவினை யொப்பும் இனிப் பிறவாவண்ணம் செய்யவல்ல சத்தி பதிக்குந் தாம்'' (சத்திநிபாதம் வருவித்த லாகிய கிரியை)உம்—உடையவள். இறைவனும் அருளே திருமேனியனாய் ஞானக்கிரியா சக்தியுக்தனாய் ஆசிரியனாய் வந்து கேட்டல் சிந்தித்தலாதிகளால் சிவோகம் பாவனையை வருவிக்கும் குருமூர்த்தி ஆகலின்,—தாரத்தோடு எங்குந் தலைநிற்பர்—என்றார்.

ஆதிசத்தியானவள்—கிரியாசத்தியியற்றும் உபாய வழித்தாய் உள்ளத்தள் தெரியாமனின்று இருவினையொப்பு வருவதற்கு அவ்வினைகளை மாறிமாறி ஆன்மாக்களுக்கு நுகர்விப்பதில் தளராமையும் மலபாகம் உண்டாவதற்குப் பிறவிக்கு வித்தாகிய அவாவினை மேன்மேல் விளைவித்தலில் ஊக்கப்பாட்டையும் உடையவள்.

பராசத்தியானவள்—இவ்வாறு திரோதான சத்தியின் வழித்தாய் நின்று அங்ஙனம் செய்யாளாயின், கிரியாசத்தியால் செய்யப்படும் வினையொப்பும் மலபரிபாகமும் ஆகா. ஆகலான் அவை வந்தபின்னர் பெத்தநிலையில் இயற்றியதுபோல் சத்திநிபாதம் வரப்பெற்ற இம்முத்திநிலையினும் ஆன்மாக்களிடத்தில் ஆணவமலசத்தின் செயலாகிய மறைப்பு அணுகாவண்ணம் செய்வதாகிய இறைபணியில் தளராமையும், சிவோஹம்பாவனை அவ்வான்மாக்களிடத்துப் பொருந்துமாறு சிவ யோக வழியான் பிராணாயாம நெறியுணர்ந்து அந்நெறிவழியே பிராணவாயுவையும், அவ்வாயுவின் வழியே அலைகின்ற ஆன்மஅறிவையும் குருவுபதேசமுறையின் வந்த மெய்ஞ்ஞானத்தில் அசைவற நிற்றற்குரிய ஊக்கப்பாட்டையும் உடையராக்கி, பிரமரந்திர ஸ்தானமாகிய நாதாந்தத்தில் பொருந்தியிருக்கும்படிச் செலுத்துவள். அந்த நாதாந்தஸ்தானமாகிய பரவெளி சிவபரஞ்சுடருக்கு எல்லையாயுள்ளது. ஆகலின் அவ்வொற்றுமை கருதி—தாரத்தின் நாதாந்தத்தே யிருப்பர் என்றார்.

நாதாந்த முடிவில் சத்தி வியாபினி சமனை உன்மனை என்னும் நான்கையும் இறைவன் இடமாகக் கொள்பவனாகலின்—நாற்றானத்தே யிருப்பர் என்றார்.

இன்மை, அன்மை, மறுதலையாகக் கூறும் மூன்றனுள்—இன்மையாகவும், மறுதலையாகவுங் கூறுங் கூற்றுக்களை யொழித்து, அன்மைப் பொருள்பற்றிக் கூறுவது வேதாந்தம். அவ்வன்மைப் பொருளாய் விளங்குவது—பரப்பிரமம். அப்பிரமப்பொருள்—சைவசித்தாந்தத்திற் கூறப்படும் பராசக்தி யுக்தமாகிய பரசிவமாய் விளங்குவது. அவ்வொற்றுமை கருதி—வேதாந்தத்தே யிருப்பர் என்றார்.

துவாதசாந்தமாகிய நாற்றானத்தே யிருப்பவராகிய பராசத்தி யுக்தமாய் விளங்கும் பரசிவம்—தாரத்தோ (இச்சாசத்தியோ)டு ஒன்றாய், தாரத்தோ (ஞானசத்தியோ)டு ஓர் கூறாய், தாரத்தோ (கிரியாசத்தியோ)டு எங்குந் தலைநிற்பவராய், தாரத்தி (ஆதிசத்தியி)னாலே ஆங்காங்கிருந்து அவ்வச்சத்திகளைக் கொண்டு ஆன்மாக்களுக்கு இயற்றற்குரிய உபகாரங்களை வேறுவேறாகச் செய்துவரும் அவ்வேற்றுமை கருதி—வேறு என்றார்.

இங்ஙனங் கூறிவந்த சத்திபேதங்களும், அச்சத்தி பேதங்களோடு இயைந்து அவைகளை இயக்கும் சிவபேதங்களும், ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் நிற்கும் நிலையைச் சுருதிவாயிலானும், யுக்திவாயிலானும், அனுபவ வாயிலானும் மாறுபடாது நிலையாகநின்று சொல்லும் ஆற்றலுடையது சித்தாந்த சாத்திரங்களன்றி ஏனைய சாத்திரங்க ளன்றென்பது துணிபாகலான்—ஒன்றுரைத்தது ஒன்றுரையாச் சாத்திரங்கள் ஒன்றாக நின்றுரைத்து நிச்சயிக்கமாட்டாவால் என்றார்.

பாசபேதங்களையும் அப்பாசங்களின் காரிய பேதங்களையும், பசுக்களாகிய ஆன்ம பேதங்களையும், அவ்வான்மாக்களுடைய ஞானக்கிரியா பேதங்களையும், பாச காரியங்க

ளிடத்து நிகழும் சடத்தன்மைகளையும், பசுக்களுடைய ஞானக்கிரியா பேதங்களில் நிகழும் சுதந்தரஹீனத் தன்மைகளையும் சுருதி யுக்தி அனுபவங்களைக்கொண்டு மாறுபடாது உணரும் ஆற்றலற்று, அவரவரறிவுக்கு ஏற்றவாறு மாறுபட்டுணரும் அறிவையுடையராய் சிற்றறிவும் சிறுதொழிலும் உடைய சிறுதெய்வங்களைத் துணையாகப்பற்றிக் கூறிய சாத்திரங்களாகலான், சாத்திரங்களென்று பொதுப்படக்கூறுது—ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்கள் என்றார்.

ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரவுணர்ச்சி யுடையவர்க்கு, பெருநூல் சொன்ன அறத்திறனல் விளையும் புண்ணிய மிகுதியுடையார் எடுத்துரைக்கும் வேதாந்தத் தெளிவாகிய இச் சைவசித்தாந்தத் துண்மை இருள்போல் தோன்றுமாகலினானும், அதனல் கொடிறும் (முதலையும்) பேதையும் கொண்டது விடாமைபோலத் தாம்தாம் கொண்ட கொள்கையை விடாராகலினானும்—இன்றுரைக்க என்னல் இயன்றிடுமோ, என்போல்வார் ஏதேனும் சொன்னுற்றான் ஏறுமோ சொல்—என்றார்.

இத்திருவெண்பாக்களில்—உந்தியாரில்—“நாலாயபூதமும் நாதமும் ஒன்றிடில்” என்றதை—தாரத்தோ டொன்றுவர் தாரத்தோர் கூறுவர், தாரத்தோ டெங்குந் தலைநிற்பர்—தாரத்தின், நாதாந்தத்தே யிருப்பர் என்றும், “நாலாம்நிலையம்” என்றதை—நாற்றானத்தே என்றும், “நாதற்கிடமது” என்றதை—வேதாந்தத்தே யிருப்பர் வேறு என்றுங் கூறி பிறர் தம்மதமேற்கொண்டு களைதலென்னு மதமும், தானட்டித் தனது நிறுத்தலென்னு மதமும், தோன்ற—ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்கள் என்னும் திருவெண்பாவைக் கூறினர். (௬௬)

௬எ. சென்ற நெறியெல்லாம் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
நீசெயல் செய்யாதே யுந்தீபற.

எ - து உந் - யார் - என் - எனின்—ஆன்மாவாகிய தான் செய்யும் எவ்வகை அவச்செயலிலும், சிவச்செயல் நின்று தவச்செயலாக்கும் தன்மையுணர்ந்து தான் ஒரு செயலுமற்று நிற்குநிலை இந்நிலை என்று கூறிற்று.

(இ - ள்.) மாணவகனே! நீ பிராணவாயுவோடு கூடினவனாய் சாக்கிரமுதலிய ஐந்திடங்களிலும் நாடோறும் சென்று சென்று வந்ததாகிய அந்த அவநெறிகளெல்லாம், கன்மமலங் கழிதற்கான இன்பத்துன்பங்களை நுகர்ந்து நுகர்ந்து ஒழித்தற்கான தவநெறியே யாகும்படி, சிவசத்திகள் ஆங்காங்குநின்று உபகரித்துவருதலாகிய உண்மைத் தன்மையை மேலேசொல்லிவந்த முறைப்படி அறிந்து, நீ செய்யும் பேதமும், அபேதமும், பேதாபேதமும் செய்யாதொழிவாயாக என்க.

அறிவும் செயலும் உடைய ஆன்மாக்கள், ஆணவாதி மலசம்பந்தத்தால் அறிவும் மாண்டு செயலும் மாண்டுகிடந்த அநாதி கேவலநிலையில், அறிவுந்தொழிலும் மாண்டு போகாது சகலநிலையடைந்து வெளிப்பட்டுப் பிரகாசிக்கவும், பிரகாசத்திற்கு வந்த அறிவுந்தொழிலும் மீண்டும் மும்மலவசப்படாது நின்மலமாகும் அருள்வசப்பட்டுத் தானேயாய் நின்றிடவும், அநாதிமலமுத்த பரமான்மாவாகிய சிவன், மாயாமலத்தைத் தநுகரண புவனாதிகளாகக் காரியப்படுத்தி ஆன்மாக்களை அவற்றுட்புகுத்தி, அஃதேபோல் கன்மமலத்தை நல்வினைதீவினைகளாகவும், புண்ணிய பாபரூபங்களாகவும், சுகதுக்கரூபங்களாகவும்காரியப்படுத்தி அவையிற்றை நுகருமாறாக்கி, ஆணவமலத்தை—நுகரு (அனுபவிக்கு) மாறு ஆக்கிய கன்மமலத்தை, நானென்றெழுந்து கைக்கொள்ளுமாறு தற்போதத்தை யுதிப்பித்து அவ்வழியில் உலாவிவரச் செய்து, இம்முறையால் மும்மலபந்தத்தையும் ஒழித்து சிவமாக் (நின்மலமாக்) கி ஆண்டருளுந் தன்மையுடையவனாகலின் அவ்வுண்மை தோன்ற—சென்ற நெறியெல்லாம் செந்நெறியாம்படி நின்றபரிசறிந்து என்றார்.

இங்ஙனங்கூறிவந்த செயலை நோக்குங்கால், ஆணவத்திற் கிடந்த ஆன்மாக்களை எடுத்தது, சிவன் செயலாலேயன்றி ஆன்மாக்கள் தம்செயலால் தாமே வெளிவந்தனவன்று. எடுத்த பின்னர், மாயாமலத்தை தநுகரணபுவன போகங்களாகக் காரியப்படுத்தி அவைகளின் வழியாய் கன்மமலத்தைக் காரியப்படுத்தி அவைகளை அனுபவிக்கச் செய்ததும் சிவன் செயலாலே யன்றி, ஆன்மக்களே ஆக்கிக்கொண்டு கன்ம பலத்தை அனுபவித்ததில்லை. அக்கன்ம பலத்தை, முனைத்து நின்று தளராது அனுபவித்தற்கு, ஆணவமலத்தைத் தற்போதவழியில் உலாவச்செய்து, அவ்வழியால் ஆணவமலத்திற்குத் தளர்ச்சிவரச்செய்ததும் சிவன் செயலாலே யன்றி, ஆன்மாக்களே ஆணவத்தை உலாவச் செய்து தளர்ச்சிவரச் செய்ததில்லை. இவ்வண்ணம் மூன்று மலங்களையுங் காரியப் படுத்தி ஒருங்கே மும்மலச் சக்திகளையுங் கெடுத்துச் சிவமேயாய் (நின்மலமேயாய்) நின்றிடச் செய்ததும் சிவன் செயலாலேயன்றி, ஆன்மாக்களே மலசக்திகளைக் கெடுத்து, சிவமேயாய் நின்றாரில்லை. இம்முறையால் "" பந்தமும் வீடும் படைப்போன் காண்க " என்ற திருவாசகப்படி பந்தமும் வீடும் ஆன்மாக்களுக்குப் படைப்பவன் சிவனே யாகக் கிடத்தலால் அவ்வுண்மை தோன்ற— நீ செயல் செய்யாதே— என்றார்.

இவ்வுண்மை தோன்றவந்தகாலமாகிய முத்திக்காலத்திற்கு முன் சென்ற காலமாகிய பந்தகாலத்திற்கு அளவில்லை ஆகலான்—சென்ற நெறியெல்லாம் என்றும், அநேககாலமாய் நின்ற அப்பெத்தக்காலம் முத்தி நெறியாகிய செந்நெறி கூடும்படியாகவே நின்றதாகலான்—செந்நெறியாம்படி நின்ற என்றும், ஆன்மாக்களுக்கு, பந்தநெறி - முத்திநெறிகூடுவதற்கான நெறியிலே நிற்கச்செய்தது சிவன் அளித்த அருட்பரிசு என்றறிதலே சிவமேயாய் நின்றார் அறிந்த அறிவாகலான்—பரிசறிந்து—என்றும், இவ்வுண்மை யுணரவந்த மாணவகனே ! இனி நீ அருள்வசப்பட்டு, சிவமேயாய் நிற்குஞ் செயலையேசெய்து, தற்போதவசப்பட்டுச் செய்யும் செயலை ஒழிக்கவேண்டுமாகலான்—நீ செயல் செய்யாதே என்றுங் கூறினாரென்றலுமா மென்க.

## திருக்களிற்றுப்படியார்.

அ௨. யாதேனுங் காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும்
மாதேயும் பாகன் இலச்சினையே—ஆதலினால்
பேதமே செய்வாய் அபேதமே செய்திடுவாய்
பேதாபே தஞ்செய்வாய் பின். (1)

அ௩. நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்தெரியா
மன்றினுள்நின் றாடல் மகிழ்ந்தானும்—சென்றுடனே
எண்ணுறும்ஐம் பூதமுதல் எட்டுருவாய் நின்றானும்
பெண்ணுறநின் றாடும் பிரான். (2)

எவ்வுலகில் எத்திறமும் மாதேயும் பாகன் இலச்சினையே ஆதலினால், (நீ) பின், யாதேனுங் காரணத்தால் பேதமே செய்வாய், அபேதமே செய்திடுவாய், பேதாபேதஞ் செய்வாய் (1) எனவும், பெண்ணுறநின் றாடும் பிரானே மன்றினுள்நின்றாடல் மகிழ்ந்தானும், எண்ணுறும் ஐம்பூதமுதல் எட்டுருவாய்ச் சென்றுடனே நின்றானும், (ஆகலின் அவன் அங்ஙனம்) நின்றபடி, நின்றவர்கட்கன்றி நிறந்தெரியா (2) எனவும்கொண்டுகூட்டுக.

(எ-து) எவ்வுலகத்தில் எவ்வகைப்பட்ட பொருள்களாயிருப்பினும், (அவையெல்லாம்) உமாதேவியோடு பொருந்தியிருப்பவனாகிய பரசிவத்தினது அடையாளப் பொருள்களே யாகும். ஆகையினால், நீ பின் (வேறு) எந்தக்காரணத்தினால் எந்தப்பொருளை அப்பரம சிவத்துக்கு வேறாகவும், எந்தப்பொருளை அவனேயாகவும், எந்தப்பொருளை அவனாகவும் அவனல்லவாகவும் அறிந்து சொல்வாய் ? (அதனைச் சொல்வாயாக.) (1) சத்தியோடு கலந்து அபேதமாய் நின்று அச்சத்தியின்வழியே யாவுஞ் செய்யவல்லவனாகிய பரசிவனே,

சிற்சபையின் கண்ணே சிவகாமியார் காண தாண்டவ கோலத்துடன் பேதமாய் நின்று பஞ்சகிருத்தியமாகிய ஆடலைப்புரிந்து மகிழ்ந்திருக்கின்றவனும், பிருதிவி முதல் அஷ்ட மூர்த்தமாக எண்ணப்பட்ட உருவங்கள் தோறும் பேதாபேதமாய் நின்றருள்கின்றவனும் ஆகலின், அங்ஙனம் மூவிடத்தும் சிவம் நின்றதன்மையையறிந்து தாமும் அஃதே போல் அச்சிவத்தோடு நின்றவர்கள் யாரோ அவர்களே அத்தன்மையை அறிந்தவராவார். அவர்களன்றி ஏனையோர்க்கு அத்தன்மை தெரியவாரா (2) என்பதாம்.

பேதம்—இரண்டுபொருள் ஒருதன்மையா யிராது,வேறு வேறு தன்மையை யுடைத்தாய்க் கூடியிருப்பதாகும். அபேதம்—இரண்டுபொருள் வேறுவேறு தன்மையாயிராது ஒரேதன்மையை யுடைத்தாய்க்கூடியிருப்பதாகும். பேதாபேதம்—இரண்டு பொருள் சில தன்மையில் ஒத்தும், சிலதன்மையில் வேற்றுமைப்பட்டும் கூடியிருப்பதாகும்.

சிவம், சத்தி என்னும் இரண்டுபொருளும் வேறுவேறு தன்மையுடைத்தான தன்று. பொன்னிறங் கட்டினும் பூணினும் நின்றாற்போல் நிற்குந் தன்மையையுடைத்து. ஆகலின், உருவமாகவும், அருவமாகவும், உருவாருபமாகவும் சொல்லப்படும் உருவங்களாகியும், அம்மூவகை வுருவங்கள் அல்லாததாகியும் உள்ளது சத்தி. இங்ஙனமான சத்தியினிடத்து வேறுபட்டு நிற்குந் தன்மையின்றி அச்சத்தியின் வண்ணமாகவே நிற்குந் தன்மையையுடையது சிவம். இவ்வண்ணம் பெண்ணுறநின்றாடும் சிவனை, மாணவகனே! நீ பேதஞ்செய்ய அறிவையோ ? என்பார்—பேதமேசெய்வாய் ?—என்றும், பெண்ணுறநின்றாடும் பிராணுகியசிவன், “ ஆணையென்னும் பரியாயப் பெயருடைய தன துசிற்சத்தியான்வரும் இருவினைகளான் அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தல்களைப்புரியும் வண்ணம் அவ்வாணையிற் பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பவனுகலின், அவ்வவ்வுயிர்களின் வழி ஓங்கிநிற்பதாகிய சிற்சத்தி—சிவகாமி என வேறுநிற்கின்றவளாகியும், ஆன்மாக்கள் இறத்தல் பிறத்தல்களைப் புரியும்வண்ணம் செய்வதாகிய ஊனநடனமும், அவைநீங்குமாறு செய்வதாகிய ஞானநடனமும் ஆகியதாண்டவங்களை, அந்தச்சிவகாமிகாண மன்றினுள் நின்று செய்து மகிழ்கின்றவனுகியும் இருக்கின்றனன். இவ்வண்ணம் சிவகாமியார் காண சிவன் ஆடுகின்றவனுகவும், சிவகாமி—அவனுடலைக் கண்டுமகிழ்ந்து நிற்கின்றவளாகவும் பேதமாகக்காணப்படுதலால் அவர்களை, நீ அபேதம் செய்திட அறிவையோ? என்பார்—அபேதமே செய்திடுவாய்?—என்றும், உயிர்களின் வழி உடலுயிர் கண்ணருக்கன் அறிவொளிபோல் பிரிவரும் அத்து விதமாய்,பிருதிவி முதலிய எண்வகை வடிவங்களை உடையவனுய் இங்ஙனமான இருவகை நடனமும் செய்தருளும் “ அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன், ஒன்றினுந்தோய்வின்றித் தானே சுயம்பிரகாசமாய் நிற்குந் தன்னுண்மையில் சிவம் எனவும், உலகெலாமாகி வேறாய் உடனுமாய் இவ்வாறு உயிர்களின்வழி நிற்குந்தன்மையில் சத்தி எனவும், தாதான்மியத்தான் இருதிறப்பட்டு, பின் ஐந்தொழில் செய்யுந் தன்மையில் பதியெனப் பெயர்பெற்றுநிற்பனென் பது-சிவாகமநூற் றுணிபாகலான், நீ அச்சிவசத்திகளைப்பேதாபேதஞ் செய்வையோ? என்பார்—எண்ணுறும் ஐம்பூதமுதல் எட்டுருவாய் நின்றானை, நீ பேதா பேதஞ்செய்வாய்?—என்றும், “நிலம் நீர் நெருப்பு உயிர் நீள் விசும்பு நிலாப்பகலோன், புலனுயமைந்ததனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான், உலகு ஏழெனத் திசைபத்தெனத் தான் ஒருவனுமே, பலவாகி நின்றவாதோணேக்கம் ஆடாமோ ” என்ற திருவாசகப்படி எல்லாமாய் நின்று சிவசோதியாயும், சிவசத்தியாயும், பசுபதியாயும் எல்லாவுயிர்களையும் ஆண்டருளும் அவனன்றி ஒரு பொருளும் இல்லையாகலான்—நீ அவ்வுண்மை நிலையை அறியாய் என் பார்-எவ்வுலகில் எத்திறமும் மாதேயும் பாகன் இலச்சினையே-என்றும், உயிர்களை மீண்டும் ஆணவவிருள் அணுகாவண்ணம் தானே சுயம்பிரகாசமாய் சிவமென விளங்கும் காரணமும், உயிர்கள்—மீண்டும் ஆணவவிருளை அணுகாவண்ணம் அவ்வுயிர்களின் வழி சத்தி என நிற்கும் காரணமும், ஆணவ இருள்—உயிர்களை அணுகாதிருத்தற்கும், உயிர்கள் ஆணவ இருளை அணுகாதிருத்தற்கும் ஐந்தொழில் செய்தாலன்றி அவை கூடாவாகலான்,

அவைகூடுமாறு ஐந்தொழில் செய்யும் காரணமும், ஆகமப்பிரமாணத்தானும் அனுமானப் பிரமாணத்தானும், காட்சிப்பிரமாணத்தானும் முறையே காணக்கிடத்தலின், இம் மூவகைப்பிராமணங்களால் அம்மூன்றுகாரணங்களையும் உணர்ந்து மும்மலச் செய்கைகளை நீ யொழிப்பதொழிந்து, ஆகமப்பிரமாணத்தைப் பேதிக்கவல்ல ஆணவமலச் செயலையும், அனுமானப் பிராமணத்தை அபேதஞ் செய்யவல்ல கன்மமலச் செயலையும், காட்சிப் பிரமாணத்தைப் பேதாபேதஞ் செய்யவல்ல மாயாமலச் செயலையும்செய்யத் தலைப் படுவையாயின் அதற்கு யாதேனுங் காரணம் இருக்கின்றதா! யாதேனும் அடையாளம் இருக்கின்றதா! யாதேனும் பிரமாணம் இருக்கின்றதா! யாதொன்றும் இல்லையே என்பார்—யாதேனுங் காரணத்தால், பேதமேசெய்வாய், அபேதமேசெய்திடுவாய், பேதாபேதஞ் செய்வாய் பின் என்றும், ஆகலின் மேலேசொல்லியபடி—எவ்வுலகில் எத்திறமும் மாதேயும் பாகன் இலைச்சினையே நின்றபடியைக்கண்டவர், மும்மலச் செயலினின்றும் பேதப்பட்டு, சிவனருளாகிய சக்தியோடு அபேதமாய்க் கலந்துநின்று, சிவனைப் பேதாபேதஞ்செய்யாது அவனுடனாய் நிற்கும் நிறத்தை (தன்மையை)த்தெரிந்து அந்நிலையிலேயே நின்றிடுவர், அத்தன்மையைத் தெரியும் வன்மையில்லார், சிவத்தோடு பேதப்பட்டு, மலத்தோடு அபேதமாய், எண்பத்து நான்குலக்ஷம் பேதமாகிய பேதப்பிறவிகளில் நின்றலைவர் என்பார்—நின்றபடி நின்றவர்கட்கன்றி நிறந் தெரியா என்றுங்கூறினர்.

நின்றபடிநின்றவர்கட்கன்றி நிறந்தெரியா, என்பதில் தெரியா என்னும் அவாய் நிலைபற்றி—நின்றவர்கட்குத் தெரியும் என்று வருவித்துரைக்கப்பட்டது.

இத்திருவெண்பாக்களில் உந்தியாரில்—"சென்றநெறியெல்லாம்" என்றதனை—யாதேனுங் காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும் என்றும், "செந்நெறியாம்படி" என்றதை—மாதேயும் பாகன் இலச்சினையே என்றும், "நின்றபரிசு" என்றதனை—பெண்ணுற நின்றுடும்பிரான் என்றும், மன்றினுள் நின்றுடல் மகிழ்ந்தானும் என்றும், எண்ணுறும் ஐம்பூத முதல் எட்டுருவாய் சென்றுடனே நின்றானும் என்றும், (இவையே) நின்றபடி என்றும், "அறிந்து" என்றதை—(அங்ஙனம் நின்றபடியை நின்றறிந்தவர்களைப்போல நீயும் அறிந்து என்று உடன்பாட்டு முகத்தாற்கூறப்படுவதனை,) எதிர்மறைமுகத்தான் நின்றவர்கட்கன்றி நிறந்தெரியா என்றும், "நீசெயல் செய்யாதே" என்றதை—(நின்றவர்கட்கன்றி நிறந்தெரியா என மேலே எதிர்மறைமுகத்தாற் கூறியதுபோல் மீண்டும்) பேதமே செய்வா யபேதமே செய்திடுவாய் பேதாபேதஞ்செய்வாய் பின் என்றுங் கூறினர்.

இவ்விரண்டு திருப்பாட்டால் "சென்றநெறியெல்லாம்" என்றது—சத்திசென்ற நெறி என்றும், "செந்நெறியாம்படி நின்றபரிசு அறிந்து" என்றது—சத்திசென்ற அந்நெறியெல்லாம் பெண்ணுற நின்றுடும்பிரானாகிய பரசிவன் சிவமாயும் சத்தியாயும் பதியாயும் நின்று தனதுநெறியே யாக்கிய அந்நெறியை அறிந்தென்றும், "நீசெயல் செய்யாதே என்றது"—(நமதுசெயல் ஒழியும்பொருட்டு மன்றினுள்நின்று ஐந்தொழிலை இறைவன் செய்கின்றான்) ஆதலினால் பேதமே செய்வாய் அபேதமேசெய்திடுவாய் பேதாபேதஞ் செய்வாய் பின் என்றுங்கூறிய உண்மையை உணரவேண்டுமென்க. (௩எ)

௩அ. பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்
அக்கொழு நீயறிந் துந்தீபற
அறிந்தறி யாவண்ணம் உந்தீபற.

**எ - து உந் - யார் என் எனின்**—"நீ செயல் செய்யாதே" என்று மேலேசொல்லியதனை அனுவதித்துக் கூறிற்று.

(**இ-ள்**) "சென்ற நெறியெல்லாம் செந்நெறியாம் படி எவ்வுலகில் எத்திறமும் மாதேயும் பாகன் இலச்சினையே" என்று அறிதலாகிய அப்பொற்கொழுவினை அறிந்து கொண்டு பேதம் அபேதம் பேதாபேதமாக எண்ணிச் செய்யும் செயலை அறியாவண்ணம்

(இருத்தலாகிய) அந்தக் கொழுவை (காரை)யும் நீ அறிந்தவனு யிருக்க, பொற்கொழு வினைக்கொண்டு வரகை விதைப்பதற்கு உழுவார் போல எப்பொருளிலும் மாதேயும் பாகனைப் பலனுகக் கொள்ளுவ தொழிந்து அப்பொருள்களில் உழல எண்ணுவது என்ன அறிவுடைமை என்க.

பொற் கொழு (என்னும்) அக்கொழு நீ யறிந்து கொண்டு அறியாவண்ண (மும்) அறிந்து வரக்குக்கு உழுவதென் எனக்கொண்டு கூட்டுக.

சென்ற நெறி யெல்லாம் என்று மேலே கூறிய உந்தியின் பொருளை, ஈண்டுஉவமை முகத்தால் விதந்து கூறிய தென்க.

நீ சிவமாகவே யிருக்க எண்ணங் கொண்டவனல்லவோ என்பார்—நீ என்றும், அவ் வெண்ணத்தின் படியே சிவமாக்க வல்லது சிவமே என்பார்—அக்கொழு என்றும், அச்சி வம் இயல்பாகவே பாசங்களில் நின்று நீங்கி நிற்கும் இயல்புடைய தென்பார்—பொற் கொழு என்றும், பேதம் அபேதம் பேதா பேதமாக அறிவது பயனறியாத சிற்றறிவின் செயலென்பார்—வரகுக்குழுவதென் என்றும், சிற்றறிவின் செயலொழிந்து பொற் கொழுவாகிய சிவச் செயலால் சிவமாகவே யிருத்தல் அறிவதுமன்று அறியாததுமன்று என்பார்—அறிந் தறியாவண்ண மென்றுங் கூறினரென்றுங் கொள்க.

## திருக்களிற்றுப்படியார்.

அச. சிவமே சிவமாக யானினைந்தாற் போலச்
சிவமாகி யேயிருப்ப தன்றிச்—சிவமென்
றுணர்வாரும் அங்கே உணர்வழியச் சென்று
புணர்வாரும் உண்டோ புவி.

(எ - து.) ஒருபொருளும்ஆகாத சொரூப இலக்கணமுடைய பரசிவமே, யான் மன்றினுள் நின்றுடல் மகிழ்ந்தானுகவும், எண்ணுறும் ஐம்பூதமுதல் எட்டுருவாய் நின்று ஞகவும், நினைந்ததுபோல, மாணவகனே! எண்வடிவங்களுள் ஒன்றுயிருக்கின்ற நீயும் அச்சிவமாகியே யிருத்தல்வேண்டும். அவ்வண்ணமல்லாமல், இவ்வுலகிலுள்ள முத்தான்மாக் கள் முத்திக்காலத்திலே தம்மில் சிவத்தை வேருகக்கண்டு இது சிவமென்று அறிகின்ற வரும், (அதுவல்லாமல்) தங்களுக்குள்ள அறிவு, கெட்டுப்போம் வண்ணமாக தங்களோடு கலந்திருக்கின்ற சிவனறிவோடுசென்று ஒன்றுபட்டுக் கலந்திருப்பவரும் உண்டோ இல்லை என்பதாம்.

நிலமுதலிய எண்வகைப் பொருளில் சிவன்கலந்திருப்பது உண்மையாக, அப்பொ ருள்கள் அச்சிவத்தைக் கண்டதுண்டோ, அல்லாமல் அப்பொருள்கள் தமது அறிவு கெட்டுச் சிவமேயாகி செயலிறந்து நின்றதுண்டோ, இவைகள் அங்ஙனம் இல்லா தொழி யினும், சிவமாவது—அப்பொருள்களை வேறு நின்று அறிவதுண்டோ, அன்றி அப்பொ ருள்களோடு கலந்து தான் கெட்டுப் போதலுண்டோ,மற்றென்னெனின்—சிவனை—அவ் வுயிர்கள் கலந்து அறிந்தது மில்லை, உயிர்களைச் சிவன் கலவாதிருந்தது மில்லை, அவர்களி டத்தில் சங்கற்பவிகற்ப ரூபமாய் விளையும் வினைகளை அறியாதிருந்தது மில்லை. உயிர்கள் இருவினைகளை யியற்றுதிருந்தது மில்லை.

இதனுண்மையாதெனின்,—“பெத்த முத்தியிரண்டினும் ஆன்மாவால் விடயிக்கப் படும் விடயங்களை முதல்வன் உடனின்று விடயிப்பன் என்பதூஉம், பெத்தத்தில் அவன் (இறைவன்) இவனுய் (ஆன்மாவாய்) நின்று விடயித்தலின் விடயங்கள் அவனு (இறைவ னு)க்கன்றி இவனு (ஆன்மாவு)க்கும், முத்தியில் இவன் (ஆன்மா) அவ(சிவ)னுய் நின்று விடயத்தலின் அவ(சிவ னெழிந்த விடயங்களெல்லாம் இவனு(ஆன்மாவு)க்கின்றி அவ (சிவ)னுக்கும் ஆயின என்பதூஉம் இனிதுவிளங்கும்” என்று சிவஞானபோதம், கக-ம்—

சூத்திரம், ஏகமாய் என்னும் திருவெண்பாவுக்கு ஆசிரியர் சிவஞான யோகிகள் அருளியிருக்கும் உண்மையே இதன் உண்மையாமென்க.

இவ்வுண்மையான்— யான் சிவமே சிவமாக நினைந்திருக்கின்றே னாகலின் இம்முத்திநிலையில் அச்சிவ னெழிந்த விடயங்களெல்லாம் எனக்கில்லாமல் சிவனுக்காயின. என்னைப்போல் நீயும் சிவமேசிவமாக இருப்பையாயின் அது முத்தி நிலையாம், அந்நிலையில் எத்திறமும் மாதேயும் பாகன் இலச்சினையே தோன்றும். அங்ஙனம் தோன்றும் பொழுது உன்னைச் சிவனுணரவேண்டியவனே யன்றி, நீ சிவனை உணர வேண்டியதில்லை என்றும் உன்னைச் சிவன் உணர வருங்காலத்து, சிவன் உன்னைப் புணர்ந்திருப்பவனே யன்றி நீ அவனைப்புணர்ந்திருப்பவனல்லன் என்றும் அறியக்கிடக்கின்றன.

ஆகவே, மாணவகனே! நீ பொற்கொழுக்கொண்டு வரகுக்கு உழுவார்போல, மாதேயும் பாகனை விட்டு உலகிற்காணப்படும் பொருள்களில் பேதம் அபேதம் பேதா பேதம் என்னுஞ் செயலைச் செய்வதாகிய உழவுத்தொழிலை யொழித்து சிவமே சிவமாக இருக்கும் அக்கொழுவைக்கொண்டு எவ்வுலகில் எத்திறமும் மாதேயும் பாகனைக் கொள்வாயாக என்று மாணவகனுக்கு அறிவுறுத்திய வாறும்.

இத்திருவெண்பாவில், உந்தியாரில்—"பொற்கொழுக் கொண்டு" என்றதை—சிவமே சிவமாக யான் நினைந்தாற்போல என்றும், "அக்கொழு நீ அறிந்து" என்றதை-சிவமாகியே யிருப்பது என்றும், "அறிந்தறியாவண்ணம்" என்றதை--அன்றிச்சிவ மென்றுணர்வாரும், அங்கே வுணர்வழியச் சென்று புணர்வாரும் உண்டோ புவி என்றுங்கூறினர். வரகுக் குழுவதென் என்றதும் புணர்வாரும் உண்டோ என்ற பொருளிற்றானே யடங்கு மென்க.

சிவமே சிவமாக நினைத்தல் அருமையுடைத்தாகலின் அதனைப் பொற்கொழு என்றும், மாணவகன் அடையவேண்டியதும் அந்நிலையே யாகலான் அதனைச் சிவமாகியே யிருப்பது அக்கொழு என்றும், சிவமென்றுணர்தல் என்பதும் உணர்வழியச் சென்று புணர்தல் என்பதும் பயனற்ற செயலாகலின் அதனை வரகுக் குழுவது போலென்றும், உவமை முகத்தால் விளக்கினரென்க.

சென்ற நெறி யெல்லாம் செந்நெறியாம் படி நின்ற பரிசு என்றதனை—சிவமே சிவமாக யான் நினைத்தாற்போலச் சிவமாகியே யிருப்பது என்றும், நீ செயல் செய்யாதே என்றதனை—அங்கே சிவமென்றுணர்வாரும், உணர்வழியச் சென்றுபுணர்வாருமுண்டோ என்றும் முன்னுந்தியாரை அனுவதித்துக் கூறினரென்க. அங்கே என்றது—முத்திநிலை.

௩௬. அது இது என்னா அனைத்தறி வாகும்
அது இது என்றறிந் துந்தீபற
அவிழ்ந்த சடையானென் றுந்தீபற.

**எ-து உந்—யார் என் - எனின்**—அது இது என்றறிவ தொழிந்து அனைத்தையும் சிவமே என்று அறிதல் வேண்டு மென்று கூறிற்று.

**(இ - ள்)** அது இது என்று சுட்டறிவால் சுட்டி அறிந்தன வாகிய நில நீர் முதலிய சுட்டுப் பொருள்களெல்லாம், ஞான சொரூபியாகிய விரிந்த சடையானது திருவுருவமே யாகு மென்று அறிந்து அப்பொருள்களை அது இது என்று அறியும் சுட்டறிவை யொழிவாயாக என்க.

அது இது (என்றறியும்) அனைத்தும் அறிவு(ஆகிய) அவிழ்ந்த சடையானாகு மென் றறிந்து அது விது வென்னா (தொழிக) என்று கொண்டு கூட்டுக.

இது வேதாந்தப் போலிகளது கூற்றை மறுத்த தென்க.

போலிவேதாந்திகள் அது இது என்று சுட்டியறிப்பட்ட இவ்வுலகினை சிவனுடைய வடிவமென்றறியார், அது இது என்று அறியத்தக்க இவ்வுலகு நாமரூபத்தோடு கூடி யிருப்பதால் பொய் யென்றறிவார். அஃதேபோல் அனைத்தறிவும் சிவமென்று அறியார்,

அனைத்தறிவும் ஆன்மாவென்றே அறிவார். அனைத்தறிவும் ஆன்ம அறிவேயாகலின் அந்த அறிவாகிய பிரமமே இந்த ஆன்மா வென்று சிரவண மனனாதிகளால் பிரஹ்மானு சந்தானம் கைவரப் பெற்று அவிழ்ந்த சடையானை யிழந்து சரீரத்திற் புக்கிருந்து பிராரத்தானுபவத்தை அனுபவித்து வாழ்நாளை வீழ்நாளாகக் கழித்து இயமனுலகம் புக்கிருப்பர்.

சித்தாந்திகளாகிய வேதாந்திகள்—அது இது வென்று காணப்பட்ட இவ்வுலக வடிவம்—சிவவடிவ மென்பர். அனைத்தறிவும் சிவ மென்றறிவர். அது இது என்றறியும் அனைத்தறிவிலும் சிவனிருத்தலால் என்னறிவிலும் சிவனிருக்கின்றான் என்றறிந்து அது நான்என்பதாகிய சோஹம்பாவனையால் பந்தம் அவிழ்ந்து, அவிழ்ந்த சடையானைப்பெற்று, தமதுடம்பை அவனுக்குக் கோயிலாக்கிக் கசிந்துருகுந் தொண்டியற்றிச் சிவானுபவிகளாய் எந்நாளும் எவ்விடத்தும் வாழ்வர் என்க.

## திருக்களிற்றுப்படியார்.

அரு. அதுஇது என்றும் அவன்நானே என்றும்
அதுநீயே ஆகின்றாய் என்றும்—அதுவானேன்
என்றுந் தமைஉணர்ந்தார் எல்லாம்இ ரண்டாக
ஒன்றாகச் சொல்வரோ உற்று. (1)

தமையுணர்ந்தாரெல்லாம் உற்று இரண்டாக ஒன்றாகச் சொல்வரோ எனக் கூட்டுக.

(எ - து) பிரம மென்று சொல்லப்படும் அது—ஆன்ம அறிவென்று சொல்லப்படும் இதுவேயாமென்றும், நான் என்பதை அப்பிரம மென்றும், அப்பிரமமே நீயாகின்றாய் என்றும், பிரமம் நான் ஆயினேன் என்றும், ஆன்மாக்களாகிய தமது உண்மை நிலையை உண்மையாக உணர்ந்த சிவஞானிகள் சிவத்தைப் பொருந்தி அது இது என்றும், அது நான் என்றும், அது நீ என்றும் இப்படி இரண்டாகவும் அது ஆனேன் என்று இப்படி ஒன்றாகவும் சொல்லுவார்களோ, சொல்லார் என்பதாம்.

சத்துப்பொருளு மாகாது, அசத்துப் பொருளு மாகாது சத்தோடு சார்ந்த காலத்து சத்துப்பொருளே யாயும், அசத்தோடு சார்ந்திருந்த காலத்து அசத்துப் பொருளேயாயும் இருக்கும் தமது உண்மையை அனுபவமுகத்தாலுணர்ந்தவர், சத்துத்தன்மையே தமக்கு இயல்பாகவுடையதாகவும் அன்றி அசத்துத்தன்மை தமக்கு இயல்பாகவுடையதாகவும் இப்படி இரண்டாகவும், இருதன்மை யுடையோமல்லோம், எப்பொழுதும் ஒரு தன்மையே யுடையோம் என்று இப்படி ஒன்றாகவும் இரண்டாகவும் சொல்லத்துணியார் என்பார்—தமையுணர்ந்தோரெல்லாம் உற்று இரண்டாக ஒன்றாகச் சொல்வரோ என்றார்.

**பிரஜ்ஞானம் பிரஹ்மம்** என்னும் வாக்கியத்தை அது இது என்றும், **அஹம்பிரஹ்மாஸ்மி** என்னும் வாக்கியத்தை அவன் நானே என்றும், **தத்துவமசி** என்னும் வாக்கியத்தை அது நீயேயாகின்றாய் என்றும், **அயமாத்ம பிரஹ்மம்** என்னும் வாக்கியத்தை அதுவானேன் என்றும் கூறியவாறாமென்க. இந்த நான்கும் வேதாந்த மஹாவாக்கியங்களெனப்படும்.

இந்நான்கனுள் உபதேச வாக்கியமாயுள்ளது—தத்துவமசி என்பதாகும். இது சிவமாகியே யிருத்தலாகிய சோஹம் (சிவோகம்) பாவனையைக் குறித்ததா மென்க. அஃதாவது—உயிரானது "உடம்பே நானென்றும், அது நீங்கியவழிப் பிரமம் நான் என்றும், இங்ஙனம் விபரீதமாகவுணர்வுறும். அவ்வா றுணராது சுட்டுணர்வுட்பட்ட உடம்புமுதலிய தொகுதியாகிய அப்பாசமும் நானன்றென்றும், சுட்டுணர்விறந்து மேம்பட்டுநின்ற அப்பதிப்பொருளும் நான் அன்றென்றும், இரண்டற்கும் வேறெனக்கண்டுவேறாகிய பாசத்தை மேற்கூறியவாற்றால் ஒருவி, ஏனைப்பதிப்பொருள் வேறாயிருப்பினும் வியாப்பிய வியாபகபாவகத்தால் கண்ணொளியும் ஞாயிற்றினொளியும்போல வேற்றுமைசிறிதுந்

தோன்றுதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய தனது கசிந்ததொண்டினையும், உள்ளத்தே இறைவன் நின்ற கலப்பினையும் நோக்கிநின்று (கருடோகம்பாவனைபோலச்) சிவோகம்பாவனை ஒருவன் செய்யப்பெறுவானாயின், அக்கருடன் அம்மாந்திரீகனுக்கு வேறாதலின்றி அத்துவிதவாய்த் தோன்றி விடத்தைநீக்கித் தெளிவுசெய்யுமாறுபோல, சிவபிரானும் இவனில் வேறாதலின்றி அத்துவிதமாய்த்தோன்றி மலங்கள்முழுவதும் நீக்கிச் செய்வன். பழைய வேதாந்தமும் அது நானேனேன் என்னப் பாவிக்கச்சொல்லுவதும் இப்பாவனையே என்க.

"தொண்டாவது—சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடைய உயிர் கழிபரமு நானல்லேன் எனக்கருதியவழி முன்போல முனைத்தலின்றி ஓங்குணர்வினுள் அடங்கி அதன் வழித்தாய் நிற்றல். முனைத்து நின்றுசெய்யும் உலகத்தொண்டில் நீக்குதற்குக் கசிந்த தொண்டென விசேடித்தார்" என்று ஆசிரியர் சிவஞானயோகிகள் சோஹம்பாவனைக்கு இவ்வாறு வுரைகூறியுள்ளார்.

இங்ஙனங்கூறிய சித்தாந்தவாக்கியார்த்தமாகிய தெளிவுரையால் வேதாந்தமஹாவாக்கியத்திற்குப் பொருள்கொள்ள அறியாது, சீவனுடைய பிரஜ்ஞையையும், சீவனுடைய அகங்காரத்தையும், சீவனையுமே பிரமமாகவும், சீவப்பிரமமே வியாபகப் பிரமமாகவும் பொருள்கொண்டு மஹாவாக்கியத்தை அணுவாக்கி இடர்ப்பட்டுப் பிரமஹத்திசெய்கின்றனர். அந்தோ! பாவம்! பாவம்!

சூரியனுடைய ஒளி—கண்ணொளியினும், அவ்வொளிக்கு இடமாயுள்ள சூரியனது உருவம்--கண்ணுருவத்தினும், இவ்விரண்டையுமுடைய சூரியன்--கண்ணினும், சூரியனது ஒளிவியாபகம்—கண்ணொளி வியாபகத்தினும் முறையே அடங்கப்பெறுமாயின், சீவனுடைய பிரஞ்ஞையே—பிரஹ்மமாயும், அகங்காரமே—பிரஹ்மமாயும், சீவனே—பிரஹ்மமாயும், இம்முறையாக பிரஹ்மம் அடங்கப்பெற்று சீவனாகிய பிரஹ்மத்தின் வியாபகமே—பிரஹ்ம வியாபகமாகப் பிரகாசிக்கு மென்பதில் ஐயமின்று.

இதனால் சூரியனைப்போலும் அகண்டாகார சுயம்பிரகாசமாய்ப் பிரகாசிப்பது பிரஹ்மம் என்றும், கண்ணைப்போலும் பிரகாசிப்பது சீவன் என்றும் அறியக்கிடக்கின்றமைகாண்க. ஆகவே—"சிவன் முதலேயன்றி முதலில்லை என்றும் சிவனுடையது என்னறிவென்றும் சிவனவனது என்செயலதாகின்றது என்றும் அவை யிற்றைத் தன் செயலாக் கொள்ளாமைதான் என்றுங்கூறிப் போந்த பொற்கொழுவாகிய அக்கொழுவைக் கொண்டு சோஹம் பாவனைக்குக்கூறிய சித்தாந்த அர்த்தத்தை மனத்துள் வைத்து அத்வைதானந்தத்தைப் பெறுவரே யன்றி அது இது என்றும், அது நானே என்றும், அது நீயே யாகின்ற யென்றும், அதுவாயினே னென்றும் பொற்கொழுக்கொண்டு வரகுக்குக் குழுவது போல சிரவண மனனத்தால் உழுது உழுது நிதித்தியாசன நிட்டைகளால் சீவனைப் பிரஹ்மமாகக்கொள்ளுதலாகிய வரகுக்கு உழார் தம்மை உள்ளவாறுணர்ந்தவரென்பார் —இரண்டாக ஒன்றாகச் சொல்வரோ உற்று என்றார்.

மாணவகனே! சோஹம் பாவனையானது—சிவமே சிவமாக யான் நினைத்தாற்போலச் சிவமாகியே யிருப்பதென்று கூறியதே யாமென்றும், அத்வைதானந்த மென்றதும் அதுவேயாமென்றும், இதுதான் சோஹம் பாவனை யென்னும் பொற்கொழுவாற் பெறத்தக்க பயன் என்றும், இந்தப் பொற்கொழுவால் அது இது—அவன் நான்—அது நீயே—அதுவானேன் என்று சிரவணமனனங்களைச் செய்து பிரமத்தைப் பெறாது சீவனைப்பிரமமாகப் பெற்றது—பொற்கொழுக்கொண்டு வரகுக்குழுது வரகினைப்பெற்றதுபோலென்றும் அறிவாயாகவென்று கூறியவாறும்.

இனி, நாம்செய்யும் சோஹம்பாவனையினாலேயே சிவமாகியே யிருத்தல் கூடுமெனின், பாவனாதீதம் சிவம் என்றது பொய்யுரையாய்ப்போமே என்னும் ஆசங்கை நிகழுமாகலான் அவ்வாசங்கை நீங்குதற்கெழுந்தது வரும்திருவெண்பாக்கள் என்க. (1)

## திருக்களிற்றுப்படியார்.

அசு. ஈருகி அங்கே முதலொன்ருய் ஈங்கிரண்டாய்
மாருத எண்வகையாய் மற்றிவற்றின்—வேருய்
உடனுய் இருக்கும் உருவுடைமை என்றும்
கடனுய் இருக்கின்ருன் காண். (2)

அஎ. உன்னுதரத் தேகிடந்த கிடம் உறுவதெலாம்
உன்னுடைய தென்ருநீ உற்றஊயோ—மன்னுயிர்கள்
அன்னவகையே காண்இங் கழிவதுவும் ஆவதுவும்
செவ்வகையே நின்றசிவன் பால். (3)

அஅ. அவனே அவனி முதலாயி ஞனேனும்
அவனே அறிவாய்நின் ருனும்—அவனேகாண்
ஆணுகிப் பெண்ணுய் அலியாகி நின்ருனும்
காணுமை நின்ருனும் கண்டு. (4)

அகூ. இன்றுதான் நீஎன்னைக் கண்டிருந்தும் கண்டாயோ
அன்றித்தான் நானுன்னைக் கண்டேனே—என்ருல்
அருமாயை ஈன்றவள்தன் பங்கனையார் காண்பார்
பெருமாயைச் சூழல் பிழைத்து. (5)

கூ௦. கடலலைக்கே ஆடுதற்குக் கைவந்து நின்றும்
கடலளக்க வாராதாற் போலப்—படியில்
அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்
கருத்துக்குச் சேயனுய்க் காண். (6)

கூக. சிவனெனவே தேறினன்யான் என்றமையால் இன்றும்
சிவன்அவனி வந்தபடி செப்பில்—அவனிதனில்
உப்பெனவே கூர்மை உருச்செய்யக் கண்டமையால்
அப்படியே கண்டாய் அவன். (7)

(எ - து.) சுத்தம் அசுத்தம் சுத்தாசுத்தம் என்றெண்ணப்பட்ட எல்லாவுலகமும் தத்தம் மாயையில் ஒடுங்கிய காலமாகிய அவ்விடத்திலே ஒருமுதலாய், மீளவும் புனருற்பத்தியாகிய இவ்விடத்திலே சத்திசிவமாய், புனருற்பவமாகிய ஐம்பூதம், சூரியசந்திரர், ஆன்மா என்று எண்வகையாய்க் காணப்படும் அவைகளில் கலப்பான் மாறுபடாது ஒன்றுபட்டிருக்கும் எண்வகை மூர்த்திகளாய், பொருளால் அவ்வெண்வகை வடிவங்களுக்கும் வேருய், உயிர்க்குயிராதற் றன்மையால் உடனுமாய், இங்ஙனமான உருவுடைமையை எக்காலத்தும் தனக்குரிய கடமையாகக் கொண்டிருக்கின்றவன் மாணவகனே! இதனை நீ அறிவாய் என்பதாம்.

சங்கற்ப மாத்திரையானன்றி கரணத்தால் ஆக்கல் காத்தலைச் செய்யவல்ல அவாந்தர காரணராகிய பிரமனுதியரோடு உலகமெல்லாம் தன்மாட்டுஇலயத்தை அடையுங்காலத்து, தான் ஒருவாற்ருனும் அந்தத்தை யடையாது ஆனந்த சொரூபியாய் மஹாசங்காரத் தானமாகிய அந்த மஹா மயானத்தின்கண் மஹத்வடிவங் கொண்டு நின்றருளும் ஒருமுதல்வனென்பார்—ஈருகியங்கே முதலொன்ரு யென்ருர்.

சங்காரத்தால் திரோபவப் பட்டுக்கிடக்கும் உலகமெல்லாம் அத்திரோபவ எல்லே கடந்து புனருற்பவமாகும் எல்லே வந்தடுத்த காலத்து அவ்வுலகினை-முதற்காரணமாகிய மாயையினின்றும் தனது சத்தியைத் துணைக்காரணமாகக் கொண்டு, தான் நிமித்தகாரணனுய் நின்று புனருற்பவஞ் செய்யும் இயல்புடையவன் என்பார்—ஈங்கிரண்டாய்—என்றார்.

புனருற்பவமாகிய அவ்வுலகம் பலதிறப்பட்ட அண்டபிண்டங்களாய்க் காரியப்படவும், அவைகளைக் காட்சிப்புலனுய் அறிவதற்கு ஒளிவிடுங் கருவிகளாயுள்ள சூரிய சந்திரர்கள் ஒளிவிடவும், இவைகளுட்பட்டிருக்கும் ஆன்மாக்கள் மல நீக்கம் உண்டாமாறு இருவினைகளைப் புரியவும், சுதந்தரமின்மையான் அவ்வெட்டும் தத்தங்காரியங்களைப் புரிய அவைகளில் விரவி நிற்பவனென்பார்—மாறுத எண்வகையாய்—என்றார்.

அங்ஙனம் அவ்வுருவங்களில் கலந்துநின் றியக்கும் அந்நிலே ஒன்றாய் வேறாய் உடனுயிருத்தலாகிய அத்வைத நிலேயென்பார்—மற்றிவற்றின் வேறாய் உடனுயிருக்கும் உருவுடைமை—என்றார்.

சங்காரமும்,புனருற்பவமுமாகிய அந்தமாதிகளுக்குரிய பாசம் அநாதிசித்தமாகலின், அந்தப்பாசத்தைத் தனது சத்தியாற் படைத்து, அவைகளோடு அத்துவித நிலேயாற் கலந்துநின்று அம்பிகையோடு காத்தல் அவனது கடனுக என்றும் உளன் என்பார்—என்றுங் கடனுயிருக்கின்றான்காண்—என்றார்.

கடவுட் டன்மையுடையான் சங்கார கருத்தாவாகிய சிவனொருவனே என்னும் அவ்வுண்மைதோன்ற—ஈறாகியங்கே முதலொன்றாய் ஈங்கிரண்டாய் - என்றும், அத்வைத இலக்கணத்தான் எங்கும் நிறைந்த பரம்பொருளாயிருப்பதே கடவுளிலக்கணம் என்பது தோன்ற—மாறுத எண்வகையாய், மற்றிவற்றின் வேறாய் உடனுயிருக்கும் உருவுடைமை-என்றும், எங்கும் நிறைந்த பரம்பொருளாயிருக்கும் அவ்விலக்கணமுடைய கடவுளுக்கு எல்லாவுயிர்களையும் இயக்கி, அங்ஙனம் இயக்கும்வகையானே இயங்கும் உயிர்களோடு ஒன்றாய் அவ்வுயிர்கள் அறிவினைப்பிரகாசப்படுத்தி, அவ்வறிவுகளான் அனுபவிக்கப்படும் பொருள்களைச்செய்து அப்பொருள்களில் தான்வேறு நின்று அப்பொருள்களை அவ்வுயிர்கள் நுகரும்வண்ணம் காட்டி, காட்டியபின்னர் அப்பொருள்கள் ஆன்மாக்கள் அறிவிற்புகவும், புக்க அவைகளில் விழைவும் வெறுப்பும்தோன்ற, தோன்றிய அவ்வழியானே தான் உடனுய்நின்று அப்பொருள்களை நுகர்வித்தலே பரம்பொருளாயிருக்கும் கடவுளுக்குப் பேரருளுடைமை என்பதுதோன்ற-என்றுங்கடனுயிருக்கின்றான் காண்-என்றுங்கூறினார்.

இதனால் சிவனொருவனே, முழுமுதற்கடவுளெனவும், அவனே எப்பொருளிலும் நிறைந்து எல்லாம்செய்தும் எல்லாம்செய்வித்தும் வருகின்றவ னெனவும், அங்ஙனம் செய்தல் பேரருளுடைமையால் எனவும், செய்தலும் செய்வித்தலுமாகிய அச்செயல் பாவனுதீதமேயன்றி பாவனைக்கு எட்டியதன்றாகலான், அச்செயல் செய்வானுகிய அவனும் பாவனுதீதனே எனவும், பாவனுதீதனுகிய அவன் சோஹம்பாவனையால் இவனுதல்-தன்வயத்தனுதல் என்னுங் குணமுடைமையாலெனவும் விளக்கினமைகாண்க.

தன்வயத்தனுதல் எனவே—கண்ட இவையல்லேன் நான் என்று அகன்று, காணுக் கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த தொண்டினொடும் நிற்பார்க்கு—உளத்தவன்றான் நின்ற கலப்பென்க. கசிந்த தொண்டென்றதனை—முன்னர் உரைத்திருக்கின்றாம்.

இத்தன்மையாகிய கடவுட்டன்மையை யுடைய பிரமமாகிய அது—அத்தன்மையில் ஒருசிறிதும் எய்தப்பெறுது அப்பிரமத்தின் அருளுடைமையையே என்றும் எதிர்பார்க்குந் தன்மையை யுடைய இது வென்னும் சீவனுதல் எங்ஙனம்கூடும்? கூடா ஆகலான் இவ்வுண்மையை யறிந்த நீ அங்ஙனம் கூறுதொழிக என்றறிவுறுத்தி இத்திருவெண்பாவால் அது இது என்பதனை மறுத்ததாமென்க.

இனி, அவன் நானே எனுங் கூற்றை மறுக்க எழுந்தது வருந்திரு வெண்பா வென்க. (௨)

(அஎ) (எ - து.) உன்னுடைய வயிற்றின்கண்ணே வாழ்ந்துகிடப்பனவாகிய கீடமுதலிய உயிர்கள் தோன்றி அங்கு சுகதுக்கங்களை நின்றனுபவித்து, பின் அழிவதாகிய செயற்பாடுகளெல்லாம், உன்னுடையன வென்று அவைகளோடுகூடி அனுபவித்து வருகின்றனையோ, அஃதேபோல், எல்லாமாய் அல்லவுமாய் உடனுமாய் நின்ற சிவன்பால் அனாதியாய் அந்தமாதியை யடைந்துவரும் உயிர்கள்—இவ்வுலகில் இறத்தலும் பிறத்தலுமாகிய செயல்களைப்பெற்று வருகின்றன. சிவன் அச்செயல் உடையவனல்லன் என்பதாம்.

செவ்வையேநின்ற சிவன்பால், மன்னுயிர்கள் இங்கு அழிவதுவும் ஆவதுவும் அன்னவகையேகாண் எனக்கூட்டுக.

உன்னைப்போலும் கடவுள், உனது உதரம்போலும் கடவுளுக்கு இவ்வுலகம், கீடம்போலும் மன்னுயிர்கள், உதரத்திற்கிடக்கும் கீடங்கள் இறத்தல் பிறத்தல்களைப் புரிதலை நீ உடையனல்லாததுபோல சிவன்பாலுள்ள நீ இங்குஅழிவதும் ஆவதுவும் அவன் உடையவனல்லன் எனப் பொருள்கொள்க.

உன்னுதரத்தே கீடம் இருப்பதாயினும் நீ கீடம் ஆகாமையும், அதனுடைய அனுபவம் உனக்கில்லாமையும் கண்கூடாய் அறியக்கிடக்கின்றமைபோல, உனக்கும் சிவமாகிய பிரமத்துக்கும் உள்ள அனுபவமாகலின், கீடமாகிய நீயா பிரமம் நான் என்று சொல்லுந் தரமுடையை. இவ்வேற்றுமையுணர்ந்து பிரமம் நானென்று கூறுதொழிவாயாக என்று இத்திருவெண்பாவால் அவன் நானே என்பதனை மறுத்ததாமென்க.

இனி அது நீயேயாகின்றாய் எனுங் கூற்றைமறுக்க எழுந்தது வருந்திருவெண்பா என்க. (3)

(அஅ) (எ - து.) பிருதிவிமுதலிய தத்துவங்களாய்ச் சிவனேநின்றானும், உயிர்கள்—தத்தங் கன்மத்துக்கீடாய் வரும் சுகதுக்கரூபமான விஷயங்களை அறிந்து நுகர்வதற்கு அவ்வுயிர்களுடைய அறிவாய்ச் சிவனேநின்றானும், உயிர்களுக்குவரும் சுகதுக்கங்கள் அவனவளது வென்னும் முன்னிலைகளின் வழியாய் வருவனவேயன்றி வேறன்மையானும், அச்சிவனன்றி அச்சுகதுக்கங்கள் அம்முன்னிலைகளின்வழி வாராமையானும், அது நோக்கி அச்சிவனே ஆணாகவும் பெண்ணாகவும் அலியாகவும் நின்றானும், இவ்வாறு எல்லாமாய் நின்றானும், அவைகளினுலெல்லாம் காணப்பெற்றுப் போற்றுமாறின்றி நின்றானும் அச்சிவனேகாண் என்பதாம்.

உயிர்களின்பொருட்டே சிவன் பூத(தத்துவ)ங்களாய் நின்றான், ஆண்பெண் அலியெனப்படும் பவுதிகங்களாய் நின்றான், இங்ஙனமான பூதபவுதிகங்களால் நுகரப்படும் பயன்களை நுகர்தற்கு உயிர்களறிவாய் நின்றான். அங்ஙனம் சிவன் மூவகையுமாய் நின்றும், தன்னை எவைகளும் எவ்வாற்றானும் அறியாவண்ணமும் நின்றான். இவ்வண்ணம் நிற்கவல்ல சிவமாய் விளங்கும் பிரமமாகிய அது நீயே ஆகின்றாயென்பது யாது அனுபவங் கண்டோ? முன்னைத் திருவெண்பாவில் கூறியவாறு கீடமாய்க்கிடக்க வல்ல நீயா பூதபவுதிகங்களாயும் அறிவாயும் நிற்கவல்லாய்? நீ வல்லனாகாய். அச்சிவனே காண் என்று இவ்வுண்மையையுணர்ந்து அது நீயே ஆகின்றாய் என்று கூறுவதை நீ கூறுதொழிவாயாக என்று இத்திருவெண்பாவால் மறுத்ததா மென்க.

இனி அதுவானேன் எனுங்கூற்றை மறுக்க எழுந்தது வரும் திருவெண்பா வென்க. (4)

(அகூ) (எ - து.) மாணவகனே! நீ இப்பொழுது என்னைக் கண்டவனாயிருக்கின்றனை யல்லவா, கண்டவனாயிருந்தும் என்னுடைய ஆன்மநிலையைக் கண்டனையோ? இல்லை. இவ்வண்ணம் கேட்கும் அறிவுடைய நானாவது உன்னுடைய உடம்மைக் கண்டேனேயன்றி உன்னுடைய ஆன்மநிலை எவ்வண்ணமாக இருக்கின்றதோ அதனைக் கண்டேனு இல்லை. இங்ஙனம் இருவருடைய ஆன்ம நிலையைக் காணுதிருத்தற்குக் காரணம் இருவரையும் சூழ்ந்திருக்கும் மாயாகாரியமாகிய தநுவாதிகளல்லவா, நாம் நமக்குள்ளிருக்கும் ஆன்ம நிலையைக் காணுமைக்குக் காரணம் மாயாகாரியமாயிருக்குமானல் ,இந்த மாயா

காரியத்தையும் இதற்கு முதலாயுள்ள மாயையையுங் கடந்து காணத்தக்க சிவனை நாம் எங்ஙனங் காண்பேம், நாம் காணுதொழியினும் வேறுயாராவது காண்பரோ? ஒருவருங் காணர். யாவரும் பெருமாயைச் சூழலில் உள்ளவராகலினென்க. சிவனொருவனே, மாயையினின்றும் மாயாகாரியங்கள் தோன்றுமாறு செய்யவல்ல அருளைப் பாகத்திலுடையவன். ஆகலான் அவ்வுமை பங்கனே பூதங்களையுங்காண்பான், பூதகாரியங்களையுங் காண்பான், ஆன்மாக்களாகிய நம்மையுங்காண்பான். அருமாயை ஈன்றவள் தன் பங்கனாகிய அவனைக் காண்பார் யாவருமில்லை என்பதாம்.

மாணவகனே ! நான் உன்னைக் காணும்படியான உருவத்தோடு நீயிருந்தும், நீ என்னைக்காணும்படியான உருவத்தோடு நானிருந்தும் ஒருவரையொருவர் காணுந்தன்மை இழந்திருப்போமாயின், நம்மால் காணக்கூடாத அருளுருவாயிருக்கின்ற சிவனை நாம் எங்ஙனங் காணவல்லுனராவோம்; இதுதிண்ணம். நாம் பிரமமாயிருப்போமாயின் நாம் ஒருவரையொருவர் பிரமமாக அறிவோமல்லவா, நான் உன்னை சாத்தா! கொற்றா!வென்றே அறிகின்றேன், அஃதேபோல் நீயும் என்னையறிகின்றாய். சாத்தா ! கொற்றா! என்று அறியும் அறிவினையுடைய நானு அதுவானேனென்றும், நீயா அது வானேனென்றுங் கூறுவது? அந்தோ ! அந்தோ ! இவ்வுண்மையை யுணர்ந்து அதுவானே னென்று கூறும் கூற்றை நீ கூறாதொழிவாயாக.

இங்ஙனம் கூறிவந்ததனுல் நாம் பிரமமாகோம் எனத் தெளியக்கிடக்கின்றமையான் நான் இதுகாறும் நீ பிரமமாகிய சிவமாதற்கு உபதேசித்ததும், அவ்வுபதேசவாக்கியத்தை நீ கேட்டுச் சிந்தித்துத் தெளிந்ததும் நீ பிரமமாவதாகிய நிட்டைகூடாதிருத்தற்குத் தானோ எனின், அவ்வாசங்கை நீங்குதற்கன்றோ வருந் திருவெண்பா எழுந்ததென்க. (5)

(கo). (எ - து.) கடலின்கண்ணே சென்று அலைகளை அலைத்து விளையாடுவதற்குரிய சாமர்த்தியத்தை ஒருவன் கைவரப்பெற்றவனுயினும், அவனுக்கு, அக்கடலினுடைய ஆழமும் நீளமும் அகலமும் இவ்வளவினையுடைத்து என்று அறியவாராததுபோல, இவ்வுலகின்கண் கசிந்த தொண்டினொடும் சோஹம்பாவனையைச் செய்த அன்புடையாரை (சிவன்) அப்பாவனைக்குள் வந்து ஆண்டுகொண்டதுமுதலிய அருட்செயல்களெல்லாம் அவர்கள் கருத்தளவுக்கு அடங்காது செய்ததேயன்றி அவர்கள் கருத்தளவில் நின்று செய்தன்வன்றென்பதாம்.

நிலைகொள்ளமாட்டாத கடலின்கண் நிலையாகநின்று விளையாடுவதற்குரிய வன்மை ஒருவன் கைவரப்பெற்று, அவன் அவ்வன்மையைக்கொண்டு அவ்வளவில் நிற்கவேண்டுவனேயன்றி, அவ்வளவினைக்கடந்து இக்கடல்முழுவதும் நாம் அளந்து நம்முட்படுத்திக்கொண்டு நாமிருப்போமென்று எண்ணி அச்செயலில் தலைப்படுவானுயின், அக்கடல் அவனெண்ணியதுபோல் அளக்கமுடியுமோ? முடியா. இது அறியக்கிடத்தல்போல், சீவன் சிவோஹம்பாவனையில் நிற்குநிலையென்க. எனவே சிவோஹம்பாவனையில் சிவன் சோகம் பாவனை அளவினனுய்நின்று ஆனந்தத்தைவிளைவித்து தன்னடிக்கீழ்ப்படுத்தித் தான் என்றும் ஆண்டுகொண்டிருப்பனேயன்றி அவன் கருத்து ளடங்கி அக்கருத்தால் ஆண்டு கொண்டிருக்கும் அளவினையுடையவனு யிருப்பவனல்லன் என்பார்—கருத்துக்குச் சேயனுய் அன்பரை வந்தாண்டது காண் என்றார். சோஹம்பாவனையில் இறைவன் கருத்தன்றிச் சீவன் கருத்து இல்லையாகலின் அங்ஙனங் கூறியதென்க.

இதனை, "கயன்மாண்ட கண்ணிதன்பங்கன் எனைக்கலந்தாண்டலுமே, அயல்மாண்டு அருவினைச்சுற்றமு மாண்டு அவனியின்மேல், மயன்மாண்டு மற்றுள்ள வாசகமாண்டு என்னுடைய செயல்மாண்டவா" எனவும், "வான்கெட்டு மாருதமாய்ந்து அழல் நீர் மண் கெடினும், தான் கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு, ஊன்கெட்டு உயிர் கெட்டு உணர்வுகெட்டு என்னுள்ளமும்போய், நான்கெட்டவா" எனவும்போந்த திருவாக்குகளானறிக. இன்னும் பலவுள.

இதனால்—சிவோஹம்பாவனை கூடுநிலையில் பாசத்தோற்றங்களுமாண்டு, பசுபோத முங் கெட்டு, அருட்போத மேலிட்டு அருள்மயமாய் நிற்குநிலையினனாய் நிற்பன், அந்நிலை யில் அவனைத்தானாக்கி ஆண்டுகொண்டிருப்பனென்று கூறப்பட்டது.

அல்லதூஉம், அது இதுஎன்றும், அவன் நானேஎன்றும், அது நீயே ஆகின்றாயென் றும், அதுவானே னென்றும் இம்முறையால் பிரஹ்மபாவனைசெய்வானாயின் பாசத்தோற் றமு மாண்டதில்லை, பசுபோதமுங் கெட்டதில்லை, இவ்விரண்டிடத்தும் சுட்டியறியும் இயல்புடைய கருத்தும் இறந்ததில்லை; அருட்போதமும் வந்ததில்லை. வரவேண்டிய தும் வராது, கெடவேண்டியதுங் கெடாது, மாளவேண்டியதும் மாளாது இருக்குமாயின் சீவனாய் இருக்குமளவே இருப்பனன்றி சிவனாயிருத்தல் ஒருவாற்றானுங் கூடாது, ஆக லின், மாணவகனே! நீ மயக்கவுரையாகிய வேதாந்த மகாவாக்கியத்தை விட்டு, வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தைக் கைக்கொண்டு சிவமே சிவமாக நினைக்குமுறையே நினைந்து சிவமாகியே யிருப்பாயென்று மாணவகனுக்கு அறிவுறுத்தியதுமாம்.

இங்ஙனம் அறிவுறுத்தியதனால்--சிவன் கருத்துக்குச் சேயனாயினும், அருத்திசெய்த அன்பரைவந்து ஆண்டருளுமுறைமை இம்முறைமையாமென் றுணர, வருஞ் செய்யுள் எழுந்ததென்க.

(கூக) (எ - து.) அண்டத்தொகுதிகளெல்லாம், "இல் நுழைகதிரின் துன் அணுப் புரையச், சிறியவாகப் பெரியோன்"ஆகிய இறைவனைத் தெரியின்—"சிவனெனயானுந் தேறினன், அவனெனை யாட்கொண்டருளினன்" என்று குருசிகாமணியாகிய மணி வாசகமூர்த்திகள் கூறியிருக்கின்றமையால், இப்பொழுதும் குருவாய் வருபவன் அச் சிவனேயாகும், சிவன் குருவாய் இவ்வுலகில் வருவது எப்படியென்று சொன்னால், இவ் வுலகில் கடல்நீர் உப்பென்று சொல்லவே கூர்மைபொருந்திய உப்புவடிவமாகச்செய்ய நாம் காண்கின்றோமாகையால், மாணவகனே ! அப்படியே சிவன் குருவடிவாய் வருவது மாம் என்று அறிவாயாக என்பதாம்.

மலபெத்தனாகிய சீவனை மலமுத்தனாகிய சிவன் தான் அம்மலத்தை நீக்கிச் சிவ மாக்குவனேயன்றி, சீவனே சீவனைச் சிவமாக்கமாட்டான். எந்தவடிவம் சிவோஹம் பாவனையால் சீவனுள்ளிருக்கும் சிவத்தைப் பிரகாசப்படுத்தி மலத்தை அப்பிரகாசப்படுத்து கின்றதோ அந்த வடிவம் சிவவடிவமேயாம். அவ்வுண்மை தோன்றவே "சிவனெனவே தேறினன்" என்று தேற்றமாகக்கூறினார். அது எதுபோ லென்பார்க்கு—உப்பினைச் சுவைக்குங் காலத்து இந்தவுப்பின் தன்மை உவர்நீரின் தன்மையதன்றோ? அந்நீர்தான் உப்பெனக்கட்டியாய் நாம் சுவைக்கவந்தது என்றறிதலில் ஐயமின்மைபோல், குருவாய் வந்தவரிடத்தில் சிவருசியைக் காணப்பெற்றால் சிவன்தான் தனதுருசியை நாமறிய இவ் வடிவாய்வந்தது என்று எண்ணவேண்டுமென்னும் உண்மைதோன்ற—அவனிதனில் உப்பெனவே கூர்மையுருச்செய்யக்கண்டமையால் அப்படியே கண்டாய் அவனென்றார்.

இதனால், சீவனைச் சிவமே என்றாவது, பிரமமே என்றாவது பிரகாசப் படுத்துவாரா யின் அச்சிவமே இப்படி குருவாய் வந்தது என்றெண்ணாது, நாம் சீவனாகவே யிருக்க இது ஒரு பெரிய சீவன் வந்ததென்று எண்ண வேண்டு மென்றும், சீவனைச் சீவனே என்றும் சிவனைச் சிவனே என்றும் பிரகாசப்படுத்தி, சிவன் எல்லாப் பொருளுமாயிருக் கும் தன்மையுடையனாகலின், உன்னையும் அவனுடையன். அவ்வொற்றுமையான் நீ அவ னாகவே (சிவனாகவே) இருப்பாய் என்று பிரகாசப்படுத்துவாராயின் அவரைச் சீவரென் றெண்ணாது சிவனே இந்தக் குருவடிவாய் வந்தன னென்று எண்ணுவா யென்றும் வலி யுறுத்திய வாறாம். (7)

இத்திருவெண்பாக்களால், உந்தியாரில்—" அது இது என்று அறி(யும்) அனைத் (தும்) அறி(வாகிய) அவிழ்ந்த சடையானாகும்" என்றதை—ஈறாகியங்கே முதலொன்றாய் ***என்றுங் கடனாயிருக்கின்றான்காண் என்றும், "அது இது என்னா" என்றதனை— அது இது என்றும் * * * * இரண்டாக ஒன்றாகச் சொல்வரோ வுற்று என்றுங் கூறி, மீள

வும், அது இது என்றற் றொடக்கத்தனவாகக் கூறும் வாக்கியங்கள் நான்கையும் தனித்தனி அனுவாதமுகத்தான் மறுத்தற் பொருட்டு எடுத்துக் கொண்டு அவற்றுள்—" **அது இது**" என்ற முதல்வாக்கியத்தை—உன்னுதரத்தே கிடந்த என்ற திருவெண்பாவால் மறுத்தும், "**அவன் நானே**" என்ற இரண்டாம் வாக்கியத்தை அவனே அவனிமுதலாயினனேனும் என்ற திருவெண்பாவால் மறுத்தும், " **அது நீயே ஆகின்றாய்** " என்ற மூன்றாம் வாக்கியத்தை—இன்றுதான் நீ என்னைக் கண்டிருந்தும் கண்டாயோ என்ற திருவெண்பாவால் மறுத்தும், ' **அதுவானேன்** " என்ற நான்காம் வாக்கியத்தை—கடல் அலைக்கே யாடுதற்குக் கைவந்து நின்றும் என்ற திருவெண்பாவால் மறுத்தும், அனைத்தும் அறிவாகும் அவிழ்ந்த சடையான் என்ற சித்தாந்த வாக்கியத்தை சிவனெனவே தேறினன் யான் என்ற திருவெண்பாவால் வலியுறுத்தியும் விளக்கிக்கூறினாரென்க. (ந௯)

சo. அவனிவ ன்ஆன தவனரு ளால்அல்ல
திவன்அவன் ஆகானென் றுந்தீபற
என்றும் இவனேயென் றுந்தீபற.

**எ - து உந் - யார் என் எனின்**, சிவனருளால் ஆன்மா சிவனாவதன்றி ஆன்மா—தானே சிவமாவதில்லை என்று கூறிற்று.

இவன் அவனானது அவனருளால், எனக்கூட்டுக.

**(இ-ள்.)** ஆன்மாவாகிய இவன்—சிவமாந்தன்மையைப் பெற்றது, சிவனருளாலேயாம், அச்சிவனருளாலல்லது, ஆன்மா சிவமாந்தன்மையை யடையான். இந்த ஆன்மா எப்பொழுதும் ஆன்மாவேயாம் என்க.

ஆன்மாவாகிய இவன்—ஆணவமலத்தால் தன் அறிவுகெட்டு, கன்மமலத்தால் மருளடைந்து, மாயாமலத்தால் மயங்கிக் கிடப்பவன். எனவே—அறிவினைக் கெடுக்கும் ஆணவமலம், கிரியையை மருளாக்கும் கன்மமலம், இச்சையைமயக்கும் மாயாமலம் என்னும் மும்மலங்களையுடையவன் ஆன்மா, சிவனாகிய அவன்—மயக்கையொழித்து மருளைப்போக்கி, அறிவைப் பிரகாசப்படுத்தவல்ல அருட்சத்தியை யுடையவன். ஆகவே—அறிவுங்கெட்டு மருளுமடைந்து மயங்கிக்கிடக்கும் ஆன்மாவாகிய இவனா சிவனாகிய அவனாவான்? ஆகான் என்பார்—இவனவனாகான் என்றார். அவன் (சிவன்) அருளுடையவனாகலின், கெட்டு மருண்டு மயங்கிக் கிடக்கும் ஆன்மாவை, அருளாலெடுத்துத் தன் வண்ணமாக்கும் இயல்புடையான் என்பார்—அவன் இவன் ஆனது அவனருளால் என்றார். மருள் வசப்பட்டிருக்கும் இவனை, அருள்வசப்பட்டிருக்கும் அவன் அருளால் தா (சிவ)னாக்கிக் கொள்ளாதொழியின், என்றும்பெத்தான்மாவாகவேயிருப்பனென்பார்—என்றும்இவனே என்றார்.

இதனால், அவன் இவன் ஆனது—அவனருளா லென்றும், அவனரு ளில்லையாயின் இவன் அவன் ஆகானென்றும், என்றும் இவன் இவனேயென்றும் கூறப்பட்டது.

## திருக்களிற்றுப்படியார்.

கூ௨. அவனிவனாய் நின்ற தவனருளால் அல்ல
தெவன் அவனாய் நிற்கின்ற தேழாய்—அவனிதனில்
தோன்றுமாப் புல்லூரி தொல்லுலகில் அம்மரமாய்
ஈன்றிடுமோ சொல்லாய் இது.

அவனிதனில், அவனருளால் அவனிவனாய் நின்றது, அல்லது—எவன் அவனாய் நிற்கின்றது எனக் கூட்டுக.

**(எ - து.)** இவ்வுலகின்கண் சிவனருளால் ஆன்மா சிவனாய் நின்றதே யல்லாமல், அச்சிவனருளை விட்டு எந்த ஆன்மா சிவனாய் நிற்கின்றது. (என் நிற்காதெனின்) அநாதியாயுள்ள இவ்வுலகில் மரத்தின்கண் தோன்றுகின்ற புல்லூரியானது, அந்தமரமாகவே உதிக்குமோ ! அதுபோலாம். மாணவகனே ! இதனை நீ சொல்வாயாக என்பதாம்.

ஆன்ம ஞானிகள் ஆன்மாவே பிரமமென்றும், அவ்வாறறிதற்குத் துணை ஆன்ம விசாரமே என்றுங் கூறுவரே யன்றி, பிரமம் என்பது சிவனென்றும், சிவனை அறிவிப்பது சிவஞானந்தானென்றும் அந்தச் சிவஞானம் சிவனருளால் வருவதென்றும் மறந்துங் கூறுர். அங்ஙனங் கூறுராகவே, அருள்—அன்பீன்ற குழவி (மகவு) ஆகலின் அவர் அன்பிலாதவர் என்று அறியக்கிடக்கின்றது. அன்பிலாராகவே—அருளிலா ராயினர், அருளிலாராகவே—அருண் ஞானமாகிய சிவஞானம் இல்லாதவராயினர்; சிவஞானம் இல்லாதொழியவே—சிவம் இல்லாதவராயினர், சிவம் இல்லாதவராகவே—யாவையும் அவமாக்க வல்ல அகங்காரமுடையவராயினர்; அதனை யுடையவராகவே—அவர்களிடத்தில் அகங்காரம் மேலிட்டுத் தோன்றி பிரமத்தையொழித்து அவ்வகங்காரமே பிரமமாய் அகம்பிரஹ்மாஸ்மி என்று தன்னையே நினைந்து நிற்கச் செய்தது. இது தான் மரத்திற்றேன்றும் புல்லூரிபோல் ஆன்மஞானத்திற் றேன்றிய புல்லூரிஞானமாம். ஆகவே அகம்பிரஹ்மாஸ்மி என்று கூறுவாராகிய வேதாந்திகளுடைய ஞானம் புல்லூரிஞானமே யன்றி சிவஞானமாகிய அருள்ஞானமாகா என்பார்—தொல்லுலகில், தோன்றுமாப் புல்லூரி அம்மரமாய் ஈன்றிடுமோ என்று உவமை எடுத்துக்கூறி நீ சொல்லாய் இது என்று மாணவகனை வினவினர். அவ்வளவில் விடாது அருளாலல்லது—எவன் அவனுய் நிற்கின்றது ஏழாய் என்று துணிவுரையாயுங் கூறினர்.

இத்துணிபுரை எவ்வுரைகொண்டு கூறியதெனின், முதனூலாகிய உந்தியாரில் அருளால் அல்லது இவன் அவனுகான் என்றும், என்றும் இவனே என்றுங்கூறிய ஆசிரிய வசனத்துணிவாலென்க.

இவ்வாறு ஆன்மஞானிகளுடைய அஹம்பிரம ஞானம் பிரமஞானமாகிய சிவஞானத்தை யழிக்கவந்த புல்லூரிஞானமென வொழித்து, அவன் இவன் ஆனது அவனருளால் என்று கூறிய ஆசிரிய வசனத்தையே தலையாகக் கொண்டு—அவன் இவனுய் நின்றது அவனருளால் என்று கூறினரென்க. உந்தியாரில்—''அவனிவனனது அவனருளால் அல்லது'' என்றதனை—அவனிவனுய் நின்றது அவனருளால் அல்லது—என்றும், ''இவனவன் ஆகான்'' என்றதனை—இவனவனுய் நிற்கின்றது ஏழாய்—என்றும், ''என்றும் இவனே'' என்றதனை—அவனிதனில் தோன்றுமாப் புல்லூரி தொல்லுலகில் அம்மரமாய் ஈன்றிடுமோ சொல்லாய் இது என்றும் கூறினர். எனவே—புல்லூரி மரமாகாதது போல் என்றும் ஆன்மாவே என்னும் பொருளை விளக்கிற்றென்க. (சo)

சக. முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்ததென் றுந்தீபற
அப்பழம் உண்ணுதே யுந்தீபற.

**எ - து உந் - யார் என்-எனின்**, ஆன்மஞானிகளுடைய அஞ்ஞான ஞானமாகிய கொடியை யறுக்கும் வகையைக் கூறிற்று.

(இ - ள்.) முத்திக்கு முதலாயுள்ள சிவ(அருள்)ஞானத்துக்கு, அகம்பிரஹ்ம ஞானமாகிய கொடி எங்கும்பரவி, பல பிறவிகளாகிய பழம் பழுத்தது. ஆகலின் அப்பழத்தினுல் வரும் கேட்டினையறிந்து அதனை யனுபவியாதே என்க.

முத்திஎன்பது—அவனிவனுவது (சிவன் சீவனேடு கலந்து சீவத்தன்மையைப்போக்கித் தனது சிவத்தன்மை பிரகாசிக்க இவனுகவே இருப்பது) இந்த முத்திப்பழம் சிவஞானமென்னும் விருக்ஷத்திற் பழுப்பது. அந்த மரத்திற்கு முதலா(வேரா)யுள்ளது—அருள். அவ்வருளென்னுமுதல்—அன்பென்னும் நிலத்திற் றேன்றுவது. முத்திப்பழம் பழுக்குமுறை இம்முறையாக விருக்க, அன்பென்னும் நிலத்தில் அருளென்னும் வித்தாகிய முதல் பொருந்தி, சிவஞான மென்னும் விருக்ஷம் மேலோங்கி அவனிவனுவதாகிய முத்திப்பழத்தைப் பழுக்க வொட்டாது, அகம் பிரஹ்ம ஞானமாகிய மோகக் கொடிபடர்ந்து, என்பு பழுத்திருக்கும் பல பிறவிகளுக்கேதுவாகிய ஜயவிபரீதங்கட் கிடந்

தரும் பாசபசுஞானங்களாகிய பழுத்த பழங்களோடிருக்கும், ஆகலின் அவைகளை முத்திப் பழமென்றெண்ணி உள்ளத்துள் கொள்ளா தொழிவாயாக என்று இதனாற் கூறியதாகும்.

அப்பழம் உண்ணாதே என்றதனால், அன்பென்னும் நிலத்தைக் கோலி, அருளென்னும் வித்திட்டு, அதிற்றோன்றுவதாகிய சிவஞானமென்னும் விருக்ஷத்தை வளர்த்தி, பின்னர் அதிற் பழுக்கும் முத்திப்பழத்தை உண்டு உயிர்வாழ்வாயாக என்பதுகுறிப்பென்க.

## திருக்களிற்றுப்படியார்.

கூ௩. முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்த தருளென்னும்—கத்தியினால்
மோகக் கொடியறுக்க முத்திப் பழம் பழுக்கும்
ஏகக் கொடியெழுங்காண் நின்று. (1)

(எ - து.) முத்திக்கு முதலாயுள்ள சிவஞானக் கொடியிலே, அவஞானக் கொடி படர்ந்து பலபிறப்பாகிய பெத்தமென்னும் பழங்கள் பழுத்தன. அவைகளை அருளென்கின்ற கத்தியினால் அந்த அஞ்ஞானக்கொடியை அறுத்தெறிந்தால், சிவஞானக்கொடியிலே முத்தியென்னும் பழம்பழுக்கும். (அதனை நீ உண்பையேயானால்) ஈண்டுப் பரமேஸ்வரனோடு ஏகனாய் நிற்றலாகிய கொடி நிலைபெற்று வளர்ந்தெழும் என்க.

ஏகக்கொடி நின்று எழும் எனக்கூட்டுக. முத்தி முதற்கொடிக்கே—என்பதில்—கொடி—என்றது—உயர்வென்னும் பொருட்டு. ஆகவே யாவையினும் உயர்ந்தமுத்தியாகிய முதலுக்கு என்னும் பொருள்கொண்டுமுடிக்க.

உயர்ந்தமுத்தி எனவே—(க) அரிவையர் இன்புறு முத்தி, (உ) கந்தம் ஐந்தும் அறு முத்தி, (௩) திரிகுணமும் அடங்குமுத்தி, (௪) விரிவு வினைகெடு முத்தி, (௫) மலம்போ முத்தி, (௬) விக்கிரக நித்தமுத்தி, (௭) விவேகமுத்தி, (௮) பரவும் உயிர்கெடுமுத்தி, (௯) சித்திமுத்தி, (௰) பாடாணமுத்தி இப்பத்தும் பழிசேர்முத்திகளாம், திரிமலமும் அகல உயிர் அருள்சேர்முத்தி (ஒன்றே) திகழ்முத்தியாயும், முத்தித் திறத்ததாயும், உச்சமாயும், விளங்குவதென்பார்—முத்திமுதற்கொடிக்கே என்றும், வேதாந்தத் தெளிவாகிய இச்சித்தாந்த முத்தியிலேயே, போலி வேதாந்திகள் கூறும்போலி முத்தியும் கொடிபோல் முற்றும் படர்ந்து மோகத்தை விளைவித்துக் கிடக்கும் ஆற்றலுடைத் தென்பார்—மோகக் கொடிபடர்ந்து என்று அதன் சிறப்பையும் இதன் கொடுமையையும் விசேடித்தனர்.

வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்த முத்தியாவது—"கண்ட யிவை நான் அல்லேன் என்று அகன்று, காணக்கழி பரமும் நானல்லேன், எனக் கருதிக் கசிந்த தொண்டினோடும் உளத்து அவன் (சிவன்)றான் நின்ற கலப்பாலே, சோகம் எனப் பாவிக்க வேறின்றித் தோன்றுவன், (தோன்றவே) மலங்களெலாம் விண்டகலும், விமலத்தையும் அடையும், (எதுபோலெனின்) கருடதியானத்தின் விடமொழியும் அதுபோல, (ஆம்) இப்பாவகத்தைக்காண் பண்டைமறைகளும் அது நானானேன் என்று பாவிக்கச்சொல்துவது" ஆகும்.

போலி வேதாந்திகள் கூறும் முத்தியாவது—ஸோ—அது, அஹம்—நான் என்னும் வாக்கியத்தால்—கண்ட இவை நானல்லேன், என்று அவைகளைக் கழித்து, காணக் கழி பர (பிரம)ந்தான் நான், என்று அநுசந்தானம் விடாதுசெய்து பிரமமே ஆய்விடுதலாகும்.

இதுவொழிந்து—காணக்கழிபரமும் நான் அல்லேன் என்பதுமில்லை, கசிந்த தொண்டென்பதுமில்லை. உளத்து அவன்றான் நின்ற கலப்பால் என்பதும் இல்லை. பாவிக்க வேறின்றித் தோன்றுவன் என்பதும் இல்லை. மலங்களெல்லாம் விண்டகலுமென்பதும் இல்லை.

பண்டைமறைகள்—அது நானானேன் என்று பாவிக்கச் சொல்லிய முறைகளெல்லாம், வேதாந்தத்தெளிவாய், முத்தித்திறத்ததாயுள்ள சித்தாந்தத்தே ஆராய்ச்சி அனுபூதிகளுக் கிணங்கித் தெள்ளிதிற்கிடக்க, அவையொன்றுந்தோன்றாவாறு, கண்டஇவைநானல்

லேன் என்றகன்று, அங்ஙனம் அகன்று அவ்வளவிலேயே, காணுக்கழிபரமாகிய பிரமம் நான் என்று கூறும் புல்லூரிஞானம், "சோஹம்" என்ற அந்த மஹாவாக்கியத்திற் படர்ந்துமறைத்து அது நானுனேன் என்ற ஒன்றினையே யாவரும் அறிய மிக எளிதாய்க் காட்டுதலால்—முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்து என்முர்.

அது நானுனேன் என்னும் அக்கொடியில் பழுக்கும் பழம்—பிறவிப்பேதங்களாகிய பலவகையான பழங்களே யன்றி மீண்டும் பிறவாநெறியைத் தரவல்ல கற்றவர்களுண்ணுங் கனியாகிய சிவக்கனி எங்ஙனே பழுக்கும்? "தான் வரை வற்றபின் ஆரை வரைவது, தான் அவனுனபின் ஆரை நினைவது" என்றும், "உரையற்ற தொன்றை உரைசெய்யுமூடர்காள், உரையற்றதொன்றைக் கரைகாணலாகுமோ" என்றும் திருமந்திரம்—ஒன்பதாந் தந்திரத்தில்—வரையுரைமாட்சியில் கூறியிருத்தலால், உரையற்றதாகிய அதனை—நானுனேன் என்று உரைசெய்தலால் இவர் உரைசெய்யுமூடர்களாயினரே யன்றி, உரைசெய்யக்கூடாத அறிவுவடிவாகிய பிரமமாயினுரில்லை. அது இல்லையாகவே, இவர் யாது ஆயினுர் எனின்-சிதாபாசசீவராய் அகங்கார முடையராயினுர். ஆகவே அவர்களுக்குப் பிறவிப்பேதங்கள் எடுப்பதற்கான வினைகளே பழுத்திருக்குமாதலால் -அத்திபழுத்ததுஎன்முர்.

பாசஞான பசுஞானங்களைப் போக்குவதும், பதிஞானத்தை விளைவிப்பதுமான ஆற்றலுடையது அருளன்றி மற்றொன்றன்றுகலான்—அருளென்னுங் கத்தியினல் மோகக்கொடியறுக்க என்முர். மோகக்கொடி அருளால் அறுபட்டமாத்திரத்தில், கசிந்த தொண்டின் முறையானே கூடவேண்டிய சோஹம்பாவனே கூடப்பெற்று சிவக்கனியாகிய முத்திக்கனி கனியுமாகலான்—முத்திப்பழம் பழுக்கும் என்முர்.

அங்ஙனங்கனிந்த சிவக்கனி இவன்பால் வேருன்றித் தோன்றித் தானேயாய்ப்பிரகாசிக்குமாகலான்—நின்று ஏகக்கொடி எழுங்காண் என்முர்.

முத்திமுதற்கொடி என்ற அக்கொடி—முத்தியின் உயர்வையும், ஏகக்கொடி என்ற அக்கொடி சோஹம்பாவனையின் திறத்தையுங் குறித்த தென்க.

அருட்கத்தியைத் தந்ததும், மோகக்கொடியறுத்ததும், ஏகக்கொடி யெழச் செய்ததும் ஆசிரியனேயாகலான், அவ்வாசிரியனுவான் இவனென்றும் மேலே சொல்லிய செயலை இவ்வகையாய்ச் செய்தானென்றும் தெள்ளிதிலுணர அகளத்தில் என்னும் திருவெண்பா எழுந்ததென்க. (1)

கூச. அகளத்தில் ஆனந்தத் தானந்தி யாயே
சகளத்தில் தையலுடன் தோன்றி—நிகளத்தைப்
போக்குவதும் செய்தான்தன் பொன்னடிஎன் புன்தலைமேல்
ஆக்குவதும் செய்தான் அவன். (2)

சகளத்தில் தையலுடன் தோன்றி, அகளத்தில் ஆனந்தத்து ஆனந்தியாயே, நிகளத்தைப் போக்குவதும் செய்தான் எனக்கூட்டுக.

(எ - து.) குருவடிவாய்வந்த சகளத்தில், கருணையாகிய சத்தியுடன்கூடி எளிதாக யான் காணத்தோன்றி, சோஹம்பாவனை வசப்பட்ட நின்மலமாகிய என்னறிவின்கண் பரவிய ஆனந்தத்தில் தான் ஆனந்தியாய், என்னை வேறுகாணுது நான் அந்த ஆனந்த சொரூபமாகவே யிருக்க, பிறவிப்பேதங்கட் கிடஞ்செய்யவல்ல எனது அகங்காரம் என்னுள் நின்று நானென் றெழுந்திருக்காவண்ணம் போக்கும் வகையாயும் செய்தான், [அங்ஙனம் உள்ளத்தின் கண்ணே செய்ததுமன்றி,] அவன் தனது அரிய பொன்போன்ற திருவடியை, எனது புல்லியதலைமேலும் பொருந்தியிருக்கும் வண்ணமும் செய்தான்(எ-ம்)

இதனுல், அவனிதனில் உப்பெனவே கூர்மை யுருச்செய்யக்கண்டதுபோல், ஆசிரியரை சிவனெனவேதேறினன்யான், என்றதனை சகளத்தில் தையலுடன்தோன்றி என்றும், தொல்லுலகில் தோன்றுமாப் புல்லூரி, அம்மரமா யீன்றிடுமோ, என்று அந்தப் புல்லூரி ஞானமாகிய பசுஞானத்தை மோகக்கொடியென்றும், அருள்ஞானத்தை—மோகக்

கொடியறுக்குங் கத்தி என்றும், அக்கத்தியினல் நிகளத்தைப் போக்குவதும் செய்தான் என்றும் அனுவதித்துச் சிறப்பித்துக் கூறியதுபோல், அவன் இவறுய் நின்றதை—அகளத்தில் ஆனந்தத்து ஆனந்தியாயே, தன்பொன்னடி என் புன்தலைமேல் ஆக்குவதும் செய்தான் அவன் என்று அனுவதித்துக் கூறினர்.

அஃதாவது—"அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய், வேறுங் குறியதுவுடைத்தாய், வேதாகமங்களின் குறியிறந்து" (வேதாகமங்களின்கருத்திற்கதீதமாய்) நின்ற சிவன் எல்லாப் பொருளையும் இனிது விளக்குவதாகிய பதிஞானமுடையார்—உடம்பே நானென்றும் அது நீங்கியவழிப் பிரமம் நானென்றும் இங்ஙனம் விபரீதமாக வுணர்கின்ற பாசஞான பசுஞானங்களினின்றும் நீங்கி, வியாப்பிய வியாபகபாவகத்தால் கண்ணொளியும் ஞாயிற்றினொளியும் போல வேற்றுமை சிறிதுந் தோன்றுதவாறு ஒற்றித்து (சார்ந்ததன் வண்ணமாய்) நிற்றற்குரிய தமது கசிந்த தொண்டினையும், தமது உள்ளத்தே இறைவன் நின்ற கலப்பினையும் நோக்கி நிற்பர். இறைவனும் அங்கு ஓங்குணர்வொளியாய் நிற்பன். அந்நிலையின்கண் அப்பதிஞான முடையார் அவ்வோங்குணர்வினுள் அடங்கி அதன்வழியாய் நின்று சோஹம்பாவனை செய்யும் நிலை இத்துணைப்பெயருடைத்து என்பார்—அகளத்தில்—என்றார். அகளமாகிய அந்நிலையில் சோஹம் பாவனையுடையார் நிற்குநிலை இந்நிலை என்பார்—ஆனந்தத்து—என்றார். அவ்வானந்த நிலையில் ஓங்கு உணர்வொளியாய் நின்றசிவன், அவ்வானந்தநிலை அவர்க்கு அகத்தேயன்றிப் புறத்தேயும் உடையராய் ஆநந்திகளாகவேவாழ வாமபாகத்தில் விளங்கும் சத்தியைக் கருணைசத்தியாய் தன்னுள்ளத்தடைத்து, தான் குருவடிவாய் வந்து அவரது ஞானக்கிரியைகளைத் தனது ஞானக்கிரியைகளாகவே கொண்டு, பிறவிப்பேதங்களுக்கிடஞ்செய்யவல்ல இருவினை நிகளத்தைப் போக்கி, தற்போதம் தோன்றுவண்ணஞ் செய்யும், திரோதசத்திவடிவாயும், அருள்நிலை நீங்காவண்ணமும் செய்யும் அருட்சத்திவடிவாயும் உள்ள திருவடிகளை அவர்கள் முடியிற்சூட்டும் முறை இம்முறை என்பார்—அவன் ஆனந்தியாயே, சகளத்தில் தையலுடன்தோன்றி, நிகளத்தைப் போக்குவதும் செய்தான், தன் பொன்னடி, என் புன்தலைமேல் ஆக்குவதும் செய்தான்—என்றார்.

உந்தியாரில்-முத்திமுதலென்றும், அம்முதலில் மோகக்கொடி படர்ந்ததென்றும், அக்கொடியில் அத்தி பழுத்ததென்றும், அப்பழம் உண்ணுதே என்றும் கூறிவந்ததில், படர்ந்திருக்கும் மோகக்கொடியை அறுப்பது இதனுலென்றும், முத்திமுதலில் பழுக்கும் பழம் இது என்றும், அந்தப்பழத்தை உண்பதென்பது இதுவென்பதுமாகிய பொருள்கள் எஞ்சி நிற்றலின் அங்ஙனம் எஞ்சிய பொருள்களை—முத்தி முதல் என்ற திருவெண்பாவால்—மோகக்கொடியை யறுப்பது அருட்கத்தி என்றும், முத்திமுதலில் பழுக்கும்பழம் போலி முத்திப் பழங்களன்றி முத்தித்திறமாகிய முத்திப்பழங்களென்றும், அப்பழத்தை உண்பதென்பது ஏகக் கொடியாய் எழுந்து நிற்பதென்றும்—அகளத்தில் ஆனந்தத்து ஆனந்தியாயே என்னும் திருவெண்பாவால்—அக்கொடி எழுந்து அகத்தில் நிற்குநிலை இத்தன்மைத்தென்றும், புறத்தில் நிற்குநிலை இத்தன்மைத்தென்றும் விளக்கினமைகாண்க. (சுக)

சஉ. அண்ட முதலாய் அனைத்தையும் உட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே யுந்தீபற
குறைவற்ற செல்வமென் றுந்தீபற.

**எ - து - உந் - யார் என் - எனின்,** சிவனுல் கொள்ளப்படும் பொருள்களைக் கொள்ளாது, சிவனை மாத்திரங் கொள்வதே செல்வமென்று கூறிற்று.

**(இ - ள்.)** அண்டபேதங்களாயுள்ள சர்வாண்டங்களையும், அவற்றுள்ளனவாகிய சர்வ சராசரங்களையும் தன்னுட்கொண்டிருக்கும் சிவத்தை உன்னுள் கொள்வாய், அண்டவிகாரங்களை உன்னுள் கொள்ளா தொழிவாய், அங்ஙனங் கொள்ளாதொழிவாயாயின் அதுவே உனக்குக் குறைவற்றசெல்வமாம் என்க.

அண்ட முதலாய் அனைத்தையும் கொள்ளாதே அனைத்தையும் உட்கொண்டு கொண்ட அதைக்கொள்வது குறைவற்ற செல்வம் என்று கூட்டிப் பொருள் கொள்க. இதில் கொள்ளாதே என்னும் எதிர் மறையால் கொள் என்னும் உடன்பாட்டையும் அனைத்தும் என்றதை அவ்வீரிடத்தும் கூட்டிப் பொருள் கொண்டாம்.

நீ அநாதிமல பெத்தத்தன்மையும் சார்ந்ததன் வண்ணமாம் இயல்பையும் உடையனுகையின் முன்னுள்ள வாசனுவிசேடத்தான் அண்டமுதலிய விவகாரங்களுள் உன்னுள்ளம் பற்றுமானுல் நீபாசஞான முடையவனுய்ப் பசுவெனப்படுவாய். படவே—சோஹம்பாவனையில் முதல் நிலையாகக்கூறும் கண்ட இவையல்லேன் நான் என்று அகல்வதாகிய அந்நிலைபோம். அதுபோகவே—முன் உன்னைக் கொள்ளைகொண்ட பெத்தானுபவமே வந்து கைகூடும் என்பார்—கொண்டத்தைக்கொள்ளாதே—என்றுர்.

சிவன் எல்லாப்பொருளுமாய் அவைகளைத் தன்னுட் கொண்டிருத்தலால், அச்சிவத்தை யுணர்ந்த நாமும் எங்கும்நிறைந்த பொருளேயாம் என்று அவ்வண்ணமான பாவனையை நீ கொள்வையேயாயின்—காணுக்கழிபரமும் நானல்லேன் என்னும் அந்நிலைபோம். அதுபோகவே—கசிந்த தொண்டும்போம், அதுபோகவே—சிவன் உன்னில் வேறின்றித் தோன்றுதலாகிய அச்செல்வம் போம். ஆகலின்—அண்டமுதலாய் அனைத்தையும் உட்கொண்டும் வேருயிருக்கும் சிவத்தை மாத்திரங் கொள்வையாயின் நீ சிவமாகவேயிருக்கும் செல்வம் போகா. போகாவாகவே அது—குறைவற்ற செல்வமாம் என்றுர்.

ஸோஹம்பாவனையால் பெறத்தகும் பேறு சிவப்பேறேயன்றி, அண்டாதிகாரங்களையும், புவனுதிகாரங்களையும் பெறுவதாகிய பேறன்று. சிவப்பேற்றைப் பரமுத்திப்பிரயோஜனமென்றும், அண்டாதிகார போகங்களை அபரமுத்திப் பிரயோஜன மென்றும் திவ்யாகமங்கூறும். அபரமுத்தர்களுக்குப் பிறப்பிறப் பொழியா; பரமுத்தர்களுக்குப் பிறப்பிறப் பணுகா. ஆகவே பரமுத்திப்போகம் பிறப்பிறப்பைப் போக்கலின் அது குறைவற்ற செல்வமாயிற்று. அபரமுத்தி, பரமுத்தி என்னும் இருவகை முத்தியும் ஸோஹம் பாவனையால் வருவதேயாகும். எங்ஙன மெனின்—அண்டமுதலாய் அனைத்தையும் உள்ளத்துள்ளே கொண்டு சிவத்தைப்பாவித்துத் தியானித்துச் செய்தலாகிய ஸோஹம் பாவனை செய்யின் அண்டமுதலிய அனைத்தையும் தன்னுட்கொண்டிருப்பவன் சிவனுகலின் அபரமுத்திப் பிரயோஜனத்தைத் தருகின்றுன். அண்டாதிகாரமுதலியவற்றை உட்கொள்ளாது, சிவத்தையே உட்கொண்டு சோஹம்பாவனை செய்யின் தன்னையே அனுபவிப்பதாகிய பரமுத்திப் பிரயோஜனத்தைக்தருகின்றுன். அச்சிவன் "வேண்டுவார் வேண்டுவதே யீவான்" என்னும் சிறப்புடையனுகலின் என்க.

இங்ஙனங் கூறியவாற்றுன்—மாணவகனே நீ அண்டமுதலா யனைத்தையும் (நீ உள்ளத்துட்) கொண்டு, பிறப்பிறப்பைக் கொண்டிருப்பதாகிய அபரமுத்திப் பிரயோஜனத்தைக் கொள்ளாதே; சிவத்தை உள்ளத்துட்கொண்டு பிறப்பிறப்பற்றதாகிய பரமுத்திப் பிரயோஜனமாகிய குறைவற்ற செல்வத்தைக் கொள்வாயென அறிவுறுத்தியவாறுமென்க.

முத்தி முதற்கொடிக்கே என்று கூறிப்போந்த உந்தியாரில் அப்பழம் உண்ணுதே என்றபொருளியைபுக்கேற்ப ஈண்டும்—அண்டமுதலா யனைத்தையும் உட்கொள்ளுதல் மோகக்கொடியாகலின்—அண்டமுதலாய் அனைத்தையுங் கொள்ளாதே என்றுர்.

சிவத்தையுட்கொண்டு ஸோஹம்பாவனைசெய்த பெரியார்,—போகம்வேண்டி வேண்டிலேன் புரந்தராதியின்பமும், ஏக நின்கழலிணை யலாது இலேன்" என்றும், "வேண்டேன் புகழ்வேண்டேன் செல்வம் வேண்டேன், மண்ணும் விண்ணும் வேண்டேன், பிறப்பிறப்புச்சிவம் வேண்டார்தமைநாளும் தீண்டேன், சென்று சேர்ந்தேன் மன்னு திருப்பெருந்துறை யிறைதாள் பூண்டேன், புறம்போகேன் இனிப்புறம்போக லொட்டேனே" என்றும் அருளிய திருவாசகங்களானறிக.

## திருக்களிற்றுப்படியார்.

கூரு. குற்றமறுத் தென்னையாட் கொண்டருளித் தொண்டனேன்
உற்ற தியானத் துடனுறைவர்—முற்றவரின்
மாட்சியுமாய் நிற்பர்யான் மற்றொன்றைக் கண்டிடில் அக்
காட்சியுமாய் நிற்பர் கலந்து. (1)

கூசு. ஆளுடையான் எந்தரமும் ஆளுடையா னேயறியும்
தாளுடையான் தொண்டர் தலைக்காவல்—நாளும்
திருவிசைலூர் ஆளும் சிவயோகி இன்றென்
வருவிசையை மாற்றினன் வந்து. (2)

(எ - து.) அண்டபுவன அதிகாரங்களை உள்ளத்துட் கொண்டு ஸோஹம்பாவனை செய்யுங்குற்றம் என்னுள்ளத்துள் தோன்றுவண்ணம் அறுத்தெறிந்து, என்னை—தன்னை உட்கொண்டு செய்யும் சோஹம்பாவனையால் ஆட்கொண்டனன். அங்ஙனம் ஆட்கொண்டருளவே, தொண்டனாகிய யான், அச்சோஹம்பாவனையைப் பொருந்தி அந்தத்தியானத்தைச்செய்ய அது என்னுள் முற்றவருமாயின் அத்தியானத்துடன் வேறின்றி இருப்பவராய் யான் நினைந்தாற்போலச் சிவமாகியே யிருப்பர். யான் வேறொன்றைக் கண்டிடுவேனாயினும் அவைகளில் தானுங் கலந்து அக்காட்சிப் பொருளாகவும் நின்றருளுவர் எ - ம்.

ஆளுடையான், அறியுந்தாளுடையான், தலைத்தொண்டர்க்கு நாளும்காவல், திருவிசைலூர் ஆளும் சிவயோகி, இன்றுவந்து என் வருவிசையை மாற்றினன் (ஆகலான்) எந்தரமும் ஆளுடையானே எனக்கொண்டுகூட்டுக.

இத் திருவெண்பாவால் குறைவற்ற செல்வம் இத்துணைத்தா மென்று கூறியவாறாம். எங்ஙனமெனின், ஆன்ம அறிவுள்ளும் அண்டமுதலிய எல்லாப் பொருளுள்ளும் இருப்பது சிவமாகலின் சிவமே சிவமாகஇருக்கும் சோஹம்பாவனை முதிரப்பெற்றார் தமது அறிவை நோக்குங்காலத்தும் சிவமே அவரறிவுள் கலந்தும், அண்டத்தைப் பற்றிய விவகாரங்கள் தோன்ற வந்தாலும் அவற்றுள்ளும் சிவமே கலந்தும் தோன்றுமேயன்றி தமதறிவு உள்ளத்துள்ளும் முனைத்துத் தோன்றா. அஃதேபோல் புறத்தேயுள்ள அண்டமுதலிய வற்றுள்ளும் முனைத்துத் தோன்றா என்பார்—தொண்டனேன் உற்றதியானம் முற்றவரின் அத்தியானத்துடன் உறைந்து மாட்சிமையுமாய் நிற்பர்—என்றும், மற்றொன்றைக்கண்டிடில் அக்காட்சியுமாய் நிற்பர் கலந்து—என்றுங் கூறியவாற்றானறிக. (1)

(கூசு) (எ-து.) இவ்வண்ணம் உள்ளும்புறம்பும் யான் தோன்றாது சிவமே தோன்றும் குறைவற்ற செல்வத்தைத் தந்த ஆசிரியராவார் ஆளுடையாரென்னும் திருநாமமுடையார், ஆன்மாக்களது பரிபாக மறிந்து அருளும் திருவருள் ஞானமுடையார், கசிந்த தொண்டோடும் ஸோஹம்பாவனையில் தலைப்பட்ட தொண்டர்க்கு எந்நாளும் காவலாயுள்ளார், திருவிசையலூர் என்னும் திருப்பதியைப் படைவீடாகவுடைய சிவயோகியார், இன்று என்னைப் போலும் எளிதில்வந்து, எனது பிறப்பின்வேகத்தை மாற்றினர். ஆகலான், ஒன்றினும் பற்றாத என்னையும் ஆளும்படியான ஆசிரியரேயாவார் என்பதாம்.

அருட்சத்தியையாளும் சிவனே (தூயவுடம்பினை யுடையவனே) எனது ஆசிரியர் என்பார்—ஆளுடையான்—என்றார். இதில் அருள் என்றதனால் திருவருள் ஞானமுடையார் என்றும், இயற்கையுணர்வும், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குமுறைமையும் உடையார் என்றும் ஆம். முற்றுணர் உடையவர் என்பார்—அறியுந்தாளுடையான்—என்றார். பேரருளுடைமையே தனக்கு இடமாக உடையவர் என்பார்—திருவிசையலூர் ஆளும்—என்றார். வரம்பிலின்பமுடையவரென்பார்—சிவயோகி என்றார்.—முடிவிலாற்றலுடையவரென்பார்—இன்று வந்து என் வருவிசையை மாற்றினன்—என்றார். தன் வயத்தனாதலை உடையவரென்பார்—எந்தரமும் ஆளுடையான்—என்றார்.

இத்திருவெண்பாவால், அவனிதனில் உப்பெனவே கூர்மை யுருச்செய்யக்காண்டல் போல் எண்குணமுடைய சிவனே ஆசிரியன் என்று ஆசிரியரது சிறப்புக்கூறியவாறும்.(2)

இவ்விரண்டு திருவெண்பாக்களால் உந்தியாரில் "அண்ட முதலாய் அனைத்தையுங் கொள்ளாதே" என்றதை—குற்றமறுத்து" என்றும், "அண்டமுதலாய் அனைத்தையும் உட்கொண்டதைக்கொண்டு" என்றதை—தொண்டனேன் உற்ற தியானத்துடன் உறைவர், முற்றவரின் மாட்சியுமாய் நிற்பர், யான் மற்றொன்றைக் கண்டிடில் அக்காட்சியுமாய் நிற்பர் கலந்து என்றும், "குறைவற்ற செல்வம்" என்றதை—சிவயோகி இன்று என் வருவிசை மாற்றினான் வந்து என்றுங் கூறினார்.

இவற்றுள் குற்றமறுத்து என்ற திருவெண்பாவில் தொண்டனேன் உற்ற தியானத்துடன் என்றற் றொடக்கத்தனவாக கலந்து என முடித்துக்கூறிய அம்முறை சோகம் பாவனையின் முறை. அம்முறையில் சிவத்தாற் கொள்ளப்பட்டவற்றைக் கொள்ளாது விடுத்தலும் சிவத்தைக் கொள்ளுதலும் முறையாகலின் அம்முறையை "அண்டமுதலாய் அனைத்தையுங் கொள்ளாதே" என்றும், "அனைத்தையும் உட்கொண்டதை(சிவத்தை)க் கொண்டு" என்றும் உந்தியார் கொண்டுகூறிய பொருளின் கருத்தை இவ்வெண்பாக்களில் விடுதலையை—குற்றமறுத்தென்றும், சிவத்தைக் கொள்ளுதலை—தொண்டனேன் உற்ற தியானத்தென்றும், அங்ஙனந் தியான முறையால் அச்சிவத்தைக் கொள்ளுங்கால் அண்ட முதலாய் அனைத்தையும் உட்கொண்ட சிவனார் அத்தியானத்துடன் உறைவர் என்றும், அத்தியானம் முற்றவரின் மாட்சியுமாய் நிற்பர் என்றும், யான் மற்றொன்றைக் கண்டிடில் அக்காட்சியுமாய்க் கலந்து நிற்பர் என்றும் பயனையும் விதந்து உடன் கூறினார். அப்பயன் "குறைவற்ற செல்வம்" என்று உந்தியார் உட்கொண்டு கூறிய பொருளை—என் வருவிசை மாற்றி என்றும், அங்ஙனம் மாற்றினவர் ஆசிரியராகலின்—வந்து என்றுங் கூறிப் பின் அவ்வாசிரியரது சிறப்பையும், அவர்—இவராமென்பதும் அறிய ஆளுடையான் எந்தரமும் ஆளுடையான் அறியுந்தாளுடையான் தொண்டர் தலைக்காவல் என்றும், திருவிசையலூர் ஆளுஞ் சிவயோகி என்றும் வியந்தும் விதத்துங் கூறினார். (சஉ)

சரு. காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் உண்டாரென் றுந்தீபற
வரட்டுப் பசுக்களென் றுந்தீபற.

**எ-து-உந்தியார் என்-எனின்**—சிவோஹம்பாவனையைச் செய்யத்தலைப்படுவோர் சிவத்தைப்பெறாது, அவத்தைப்பெற்று அவமாய்ப் போவரென்று கூறிற்று.

(இ-ள்.) தனது உடம்பகத்துள்ளே மெய்ஞ்ஞான சொரூபமாய் விளங்கும் சிவமாகிச் சிவானந்தத்தேனை யுண்டு சிவமாகியே யிருப்பதொழிந்து, மாயாகாரியமாகிய பிரபஞ்சாகாரமாகி அதிற்பெருகும் விடயமாகிய கள்ளையுண்டு அறிவுமயங்கிக் கிடக்கும் இயல்பினையுடைய ஆன்மாவே பிரமமென்று கிடப்பர். இவர் வரட்டுப் பசுக்களோடொப்பர். இந்த வரட்டுப் பசுக்களால் உயிர் பெறும்பயன் என்னையுள என்க.

இதனால்—பாசத்துக்குவேறாகிய தன்னுள் சிவத்தைக்கண்டு அச்சிவமே தானாகி சிவானந்தத்தைப் பெற்றுக் களித்திருப்பவரே ஆசிரியராவரென்றும், அவரே பெத்தான்மாக்களுக்குச் சிவானந்தத்தேனை அளிக்கும் ஆற்றலுடையவரென்றும், பாசத்துள்ளிருக்கும் தன்னைப் பிரமமாகக்கண்டு சிவமாகிய பிரமத்தை யொழித்து, உடலைப் பற்றிவரும் பிராரத்தத்தைக் கடக்கமுடியாமல் அப்பிராரத்த அநுபவத்துட்பட்டுக் கள்ளுண்டார்போல் அறிவு மயங்கிக் கிடக்கும் ஆன்மஞானிகள் அநாசிரியரென்றும், அவர்கள் பெத்தர்களே யன்றி முத்தர்க ளன்றென்றும், அவர்கள் முன்னனுபவித்திருந்த சிற்றின்பானுபவத்தை யொழித்து, பின்னர் சிவனால் பெறவேண்டிய பேரின்பத்தையும் இழந்து பால் சுரக்கும்வகையற்ற வரட்டுப் பசுக்களைப்போல் உலாவுகின்றவராகலான் அவர்களால் பெறும் பயன் ஒன்றில்லை என்றுங் கூறப்பட்டன.

## திருக்களிற்றுப்படியார்.

கூஎ. தூலத் தடுத்தபளிங்கின் துளக்க மெனத்
தூலத்தே நின்று துளங்காமல்—காலத்தால்
தாளைத்தந் தென்பிறவித் தாளை யறவிழித்தார்க்
காளன்றி என்மா றதற்கு. (1)

கூஅ. இக்கணமே முத்தியினை எய்திடினும் யானினைந்த
அக்கணமே ஆனந்தம் தந்திடினும்—நற்கணத்தார்
நாயகற்கும் நாயகிக்கும் நானடிமை எப்பொழுதும்
ஆயிருத்தல் அன்றியிலேன் யான். (2)

கூகூ. என்னை யுடையவன்வந் தென்னுடனாய் என்னளவில்
என்னையும் தன் ஆளாகக் கொள்ளுதலால்—என்னை
அறியப்பெற் றேன்அறிந்த அன்பருக்கே ஆளாய்ச்
செறியப்பெற்றேன் குழுவிற் சென்று. (3)

பளிங்கின் தூலத் தடுத்ததுளக்கமெனவும், அதற்குமாறு ஆளன்றி என் (1) எனவும். யான் நினைந்த முத்தியினை இக்கணமே எய்திடினும் என்றும், யான் நற்கணத்தார்(2) எனவும். அறிந்த அன்பருக்கே ஆளாய் (அவர்) குழுவிற்சென்று செறியப்பெற்றேன் (3) எனவுங் கொண்டுகூட்டுக.

(கூஎ) (எ-து.) புறத்துப்பொருந்திய வன்னங்களின் மயமாய் ஒளிசெய்யும் படிகக்கல்லைப்போல யான் புறத்தேயுள்ள தூலசரீர அபிமானியாய், அத்தூலத்தைப் பொருந்திக் கிடக்கும் பஞ்சேந்திரியங்களின்வழி யுழலும் அறிவினை யுடையவனாய் ஐயுணர்வுகளின் வுணர்வே என்னுணர்வாய்நின்று அவ்வழியுழலாமல், தனது அருளை எனது பரிபாகத் தளவை நோக்கிக் கொடுத்து, இனிப் பிறவாவண்ணம் ஆணவமலமென்னும் வேர் அற்று நீருகும் வண்ணம் சக்ஷுதீக்ஷையுஞ் செய்தா (திருநோக்கத்தால் நோக்கின)னாகலான் அதற்கு நான் அடிமையாயிருத்தலன்றி வேறு என்னகைம்மாறு செய்யவிருக்கின்றது எ-ம்.

சத்த பரிச ரூப ரச கந்த மென்னும் ஐம்புலன்கள் சுரோத்திரமுதலிய ஐம்பொறிகளையும், அவ்வைம்பொறிகள் உடம்பினையும் பொருந்திக்கிடக்க, அவ்வுடம்பினைப் பொருந்தி ஐயுணர்வுகளான் மயங்கித் தன்னையுணராது, பன்னிறமே காட்டும் படிகம்போற் கிடப்பதே ஆன்மநிலையாகலான் யான் அந்நிலைபோல் நின்றேனென்பார்—தூலத்தடுத்த பளிங்கின் துளக்க மெனத், தூலத்தே நின்று என்றார்.

அங்ஙனம் ஆன்மா துளங்கி நிற்கும் அவசரத்தில், சிவன் ஆசிரியனாய் வந்து, ஊசலானது கயிறு அற்றால் தாய்போல் தரையே துணையாதல் போல, அவ்வான்மாவை நீ இந்திரியத்தின் வேறு எனக்காணும்படிச் செய்ய அவனுங் காணவே பின் தமது முதல்சீபாதத்தை அணைவித்தும், அம்முதலை அணைவிக்குங் காலத்தில், அது வாக்கு மனாதீத கோசரமாய் (பாசஞான பசுஞானங்களுக்கு அதீதமாய்) நிற்றலான், அம்முதலைப் பதிஞானத்தாற் காணுமாறு செய்தும், அங்ஙனம் செய்தவழி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காணவுளதாய் நிற்பது ஞான சொரூபமென்றுணர்த்தியும், அங்ஙனம்ஞானத்தை உணர்த்திய வழியும், அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகவின் அது நீக்குதற்கு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க வைத்தும், அங்ஙனம் வைக்கவே, யான் எனதென்னும் செருக்கற்று, பரமேஶ்வரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையால் அவனிடத்து ஏகனாகி நிற்கச் செய்தும், அவ்வாறு ஏகனாகி நிற்கு நிலையில் அப்பரமேஶ்வரன் அருளாலல்லது ஒன்றையுஞ் செய்யான் என்னும் அவனருள் தோன்றி அவ்வருட்டெரிசனத்தால்—செயலின்வழியேவந்துகூடுவதாகிய அஞ்ஞானமும் கன்ம

மும் ஒழியப்பெற்று இறைபணி வழுவாது நிற்கச் செய்தல் போல் எனக்குச் செய்தனன் என்பார்—துளங்காமல், காலத்தால் தாளைத்தந்து, என் பிறவித்தாளை அறவிழித்தார்க்கு என்றார்.

இங்ஙனம் சொல் பல்காமைப்பொருட்டு இவ்வாறு கூறினரேனும் இதனைச் சிவ ஞான போதம்—எட்டாஞ் சூத்திரம் மூன்றாம் அதிகரணமுதல், பத்தாஞ் சூத்திரம் இரண்டாம் அதிகரணங் காறும் போந்த நுண்ணிய பொருள்களை எடுத்துரையாக்கால் பொருளியல்பு தெரிதல் கூடாதாகலான் அது தெரிந்துகூடுமாறு இங்ஙனம் கூறியதென்க.

அஃதாமாறு காட்டுதும்,—துளங்காமல் என்றது—ஐயுணர்வுகளால் மயங்கித்தன்னை யுணராது, பளிங்கிலிட்ட வன்னம்போல் காட்டிற்றைக் காட்டி நிற்கு நிலையில், தன்னை இந்திரியத்தின் வேறாகக் காணக்காட்டி ஊசல் கயிறற்றால் தாய் தரையேயாந் துணை போல் தனது முதல் ஸ்ரீபாதத்தை யணையச் செய்ததாகிய பொருளைக் குறித்த தென்க.

காலத்தால் தாளைத்தந்து என்றது—தனது முதல் என்ற அது—வாக்குமனோதீத கோசரமாய் நிற்றலான், அம்முதலை ஞானக்கண்ணாலே காணச்செய்து, அதனால் அசத்தா யுள்ள வன்னபேதங்களை அசத்தென்றுகாண, அங்ஙனம் உளதாய் நிற்பது ஞானசொரூப மென்றுணர்த்திய அக்காலத்தில்—ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கத்தந்த பொருளைக் குறித்ததென்க.

என்பிறவித்தாளை அறவிழித்தார்க்கு என்றது—அங்ஙனம் ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கத் தந்தபடி உச்சரித்ததனால், பரமேஶ்வரன் தானாய் நின்றமுறைமை யான் அவனிடத்து ஏகனாகி யான் எனதென்னும் செருக்கற்று அவனது ஸ்ரீபாதத்தை யணையவே, இனி இறைவன் அருளால் அல்லது ஒன்றையும் செய்யான் என்று அருட் கண் தெரிசனமாய் அஞ்ஞானமும் கன்மமும் பிரவேசிப்பதற்கின்றி அவ்விரண்டுமற்று, இறைபணி வழுவாது நிற்கச் செய்தலாகிய அப்பொருளைக் குறித்ததென்க.

இனி—அதற்கு ஆளன்றி என்மாறு என்றது—எவ்வகைச் செயலுக்கும் சுதந்தர மற்ற என்னையும், சடமாகிய கன்மத்தையும் முதலாக்காது இறைவனருளை முதலாகக் கொண்டு அச்செயலெல்லாம் இறைபணிஎன அவைகளில் யான் நிற்குங்கால், அவ்விறை வன் எனது விடயத்தையும் உணர்ந்து என்பால் காட்டும் உபகாரத்தோடு, காணும் உப காரமும் உடையானென்று வெளிப்பட்டது. படவே யான் பத்தியினால் மறவாது எத் தலே அவ்வுபகாரச்செயலுக்குக் கைம்மாறுமன்றி வேறொன்றில்லை என்று அச்செயலை மேற்கொள்வானாயினேன் என்னும் அப்பொருளைக் குறித்ததென்க.

அப்பொருள் யாதெனின், ஆன்மா—இறைவனையின்றி ஒன்றினும் தான் பொருந்தி விடயிக்க மாட்டாதென்னும் உண்மையைக் குறித்ததென்க.

எனவே—விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண்ணொளியோடுகூட வுருவத் தினுங் கலந்தாலன்றி, கண் அவ்வுருவத்தைக் காண்டலின்றாய வாறுபோல, அறிவிக்க அறியும் இயல்பினையுடைய உயிர்களும் முதல்வனது உணர்வு தம்மோடு கலந்துநின்று தம் மோடுகூடச்சென்று விடயத்தினுங் கலந்துநின்றால் அறிவு விளங்கி அதனையறியும் இயல் பினவன்றித் தனித்தறியவுமாட்டா, தனித்து ஒன்றனை விடயிக்கவுமாட்டாவாகலான் அறிவு விளங்குதன் மாத்திரைக்கேயன்றி விடயத்தைப் பற்றுதற்கண்ணும் முதல்வன் உடனின்றறிதல் ஒருதலையான் வேண்டப்படுதல் என்னும் உண்மையேயாம்.

இனி, செய்யுங்கைம்மாறு இது என விளக்குவான் எழுந்தது இக்கணமே எனுந்திரு வெண்பா என்க. (1)

(கூஅ) (எ-து) முன்னை யான் நினைந்ததாகிய முத்தியினை இந்தக் கணப்பொழுதிலே பெறவரினும் வேண்டாம். அஃதேபோல், முத்திநிலையைப் பெற்ற அந்தப்பொழுதிலேயே பரமானந்தத்தைக் கொடுத்தலும் வேண்டாம். வேறு யான் வேண்டுவது யாதெனின், அன்பரோடு கூடி எனது முதல்வனாகிய சிவனுக்கும், என்னை அம்முதல்வனுக்கு ஆட் படுத்திய அருட்சத்திக்கும் எந்தப்பொழுதிலும் நான் செய்யப்படும் சரியை யாதிகளில்

ஆதியந்தம் அடையாமல் செய்வதாகிய அடிமைத்திறத்தையே உடையவனு யிருத்தலே யாம். அதுவன்றி வேறு வேண்டுகோளில்லை என்பதாம்.

முத்தியைவேண்டாது, ஆனந்தத்தையும் வேண்டாது, நற்கணத்தார் நாயகற்கும்நாயகிக்கும் அடிமை வேண்டியது யாது நோக்கியெனின்—முத்தியைக் கொடுப்பது ஞானம், முத்திநிலையைக் கெடுப்பது ஆணவம் காமியம் மாயை என்னும் மும்மலங்கள். "அம்மலங்கள் மூன்றும் மெய்யுணர்ந்து நிட்டைகூடினுர் மாட்டும் யாதானும் ஓர் வழியால் நுழைந்து தம்மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகிய பண்டை விபரீத வுணர்வை மேற்படுத்துவனவாம். ஆகலான் அவ்வுணர்வு முத்தியை வேண்டினுர்க்கு ஆகாமையின், அத்துவித நிலையைக் கடைப்பிடித்துச் செய்யும் அன்பனே முதல்வன் அருள்வழி நின்று மும்மலங்கழீஇனுராகிய சீவன் முத்தர்க (சிவபத்தர்க)ளோடு இணங்கின் அவர்களது இணக்கத்தான் மும்மலங்களும் விட்டொழியும், அவை விட்டொழியவே முத்தி நிலை நிலைபெறும். ஆகவே முத்திவேண்டினுர் முன் வேண்டத்தக்கது நல்லாரது இணக்கத்தைக் கூடி அவர்க்கு அடிமை செய்தலே. அவரது அடிமையை வேண்டாது முத்தியை வேண்டினுல் மும்மலங்களும் அல்லற்படுத்தி முத்திநிலையைக் கூட்டா. ஆகலான் இக்கணமே முத்தியினை எய்திடினும், (எனக்கு எய்த வேண்டியது) **நற்கணத்தார்க்கு** அடிமை என்று அவரடிமை வேண்டினுர்.

பரமேஸ்வரன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும், பத்தரது திருவேடம் சிவாலயம் என்னும் இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரில் நெய்போல விளங்கி நிலைபெற்று அல்லாத இடங்களிலெல்லாம் பாலில் நெய்போல வெளிப்படாது நிற்பன் என்று சித்தாந்தங் கூறுதலின், நற்கணத்தார்க்கு அடிமை வேண்டினுராகிய இவர் தயிரில் நெய்போலவிளங்கி நிலைபெற்றிருக்கும் பத்தரது திருவேடத்தையும், சிவாலயத்தையுமே வேண்டி **நாயகர்க்கு** அடிமை வேண்டினுர்,

உயிர்க்குயிராகிய முதல்வன் உயிர்ப்பொருள் உயிரில்பொருள் எல்லாவற்றினும் கண்ணின் அருக்கன்போல் அதுவும் இதுவும் எனப்பிரித்துச் சொல்லப்பட்ட பேத நிலைமையனும் அல்லனுய், உடலுயிர்போல் அதுவே யென்றோதப்பட்ட அபேத நிலைமையனும் அல்லனுய், குணகுணிபோல் அதுவாகிய இதுவென்று பிரிக்காமல் சொல்லப்பட்ட பேதாபேத நிலைமையனும் அல்லனுய், அறிவொளிபோல் அம்மூன்றற்கும் பொதுமையான் அத்துவித நிலைமையனுய் எல்லாப் பொருளிலும் அருளுடனிருக்கும் முதல்வனது அருள் அந்தப் பொருள்களில் எல்லாம் பாலில் நெய்போல் காணுதற்கின்றி, பத்தரது திருவேடம், சிவாலயம் என்னும் இரண்டிடத்தில் மாத்திரம் தயிரில் நெய்போற் காண வெளிப்படுதலின் அவ்வெளிமையைநோக்கி, அவ்விரண்டிடத்திலுமுள்ள நாயகன் அடிமையைவேண்டிய இவர் அந்நாயகனிடத்துள்ள அருளுருவாகிய **சத்திக்கும்** அடிமை வேண்டினுர்.

சீவன்முத்தியையும், பரமுத்தியையும், அவ்விரண்டுநிலையில் விளையும் இன்பத்தையும் வேண்டுவோர் பலராக இவ்வுலகில் காண்கின்றோம். இங்ஙனம் கூறிய அடிமைத் திறத்தை வேண்டினுரை அதுபோல் காண்கிலோம். அங்ஙனமிருக்க இவர் வேண்டியது யாது நோக்கியெனின், "தன்னையறிவித்துத் தான்றனுச் செய்தானைப், பின்னை மறத்தல் பிழை" என்று சிவஞானபோதம் கஉ-ம் சூத்திரத்தும், "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்று திருக்குறளிலும் கூறிய கருத்து நோக்கி என்க.

அஃதாவது—" தன்னுண்மையை அறியமாட்டாது குருடாய்க்கிடந்த உயிர்க்குப் பல வாற்றானும் அதனைத் தெரிந்துணர்த்தி எத்தனையும் எளிய அவ்வுயிரை எத்தனையும் அரிய தானும்வண்ணம் செய்தளித்த பெரியதோர் உதவியை அதன்பின்னர் மறக்குமாயின் அஃது இதற்குமுன் அறியாமையான் மறந்த குற்றம்போலத் தீர்திறன் உடையதோர் குற்றம் அன்று" என்றும், "பசுமுலை யறுத்தலும், மகளிர் கருவினையழியச் செய்

தலும், பார்ப்பாரைக் கொலைசெய்தலுமாகிய மஹாபாதகங்களைச் செய்தார்க்கும் அப்பாவத்தில் நின்று நீங்கும் வாயிலுண்டாகும். ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு அது நீங்கும் வாயிலில்லை" என்றும் கூறிய விதிமொழிகளின் திறத்தை நோக்கி என்க.

அதுவேயுமன்றி—பெத்தான்மாக்களாகிய உலகினர்க்கு, முனிவர்கடன் தேவர்கடன், பிதுரர்கடன்ஆகிய மூவகைக்கடனும், கேள்வியானும்வேள்வியானும் மக்கட்பேற்றினாலும் தீர்திறம்விதித்திருப்பதுபோல், நற்கணத்தார் நாயகன் நாயகியாகிய மூவர்மாட்டும் செய்நன்றிகோறலைச்செய்யவல்ல மும்மலங்களைக்களைக,சிவபக்தர்களாகிய சீவன்முத்தர்களோடு இணங்குக, திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபடுக என இவ்வரிய செயல்களை முத்தான் மாக்களுக்கு விதித்திருக்கின்ற அவ்விதியை நோக்கியு மென்க.

ஆகவே—இவ்வாசிரியர், தன்னையறிவித்துத் தான் தானாய்ச் செய்தானைப், பின்னை மறத்தல் பிழை என்ற அப்பழிக்கும், செய்நன்றி கொன்றமகற்கு உய்வில்லை என்ற பாவத்துக்கும் அஞ்சும் நிலையுடைய விழுமியோராகலின்-எப்பொழுதும் யான் அடிமையா யிருத்தலன்றி யிலேன் என்றார்.

இங்ஙனமான பாவத்துக்கும் பழிக்கும் அஞ்சும் அறிவுடைமையும் அடிமையும் உண்டானால் முத்தியும் அதில்விளையும் ஆனந்தமும் தானே அவர்க்கு உண்டாமென்பது பெற்றாம்.

இதனால் அடிமை விரும்புவதே நமது கடமை என்றும், முத்திவீட்டிலிருத்தி ஆனந்தத்தைக் கொடுப்பது முதல்வனது கடமை என்றும், அறியக்கிடக்கின்றமை காண்க.

அன்பர்களோடு வாழப்பெறுவதே பயன் என்பதை—"உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீ யிருத்தி, அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் அடியேன் உன், அடியார் நடுவுளிருக்கும் அருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம், முடியா முதலே என்கருத்துமுடியும் வண்ண முன்னின்றே" என்று ஆணையிட்டு வேண்டியதனாலறிக.

இனி—"என்கடன் பணிசெய்துகிடப்பதே என்ற வேதமொழிப்படி, அடிமைமையைத் தாம் வேண்டியதனால், வரட்டுப் பசுக்களோடு கூடிப் பயனிலியாய்ப் போவதொழிந்து, அன்பராகிய கறவைகளோடு கூடிப் பணிசெய்து வாழ்ந்துகிடப்பதாகிய பயன் பெற்றேன் என்று என்னையுடையவன் என்னுஞ் செய்யுளாற் கூறுகின்றார். (2)

(கக) (எ-று) என்னை அநாதியே ஆளாகவுடைய முதல்வன், என்னைப்போலும் மானுடவடிவங்கொண்டுவந்து, என்னறிவுனுள்அறிவாய் அங்ஙனம்தன்னறிவாய்நிற்கின்ற என்னை அவ்வளவில் நிறுத்தாது, தனக்கு மீளா அடிமையாகவும் கொள்ளுதலால், என்னை முதல்வன் புறம்பே நின்று காட்டும் உபகாரத்தானும் உள் நின்று காணும் உபகாரத்தானும் வாழும் இயல்புடையேனென்று அறியப் பெற்றேன், அவ்வாறு அறியப் பெற்ற யான், "முதல்வன் காட்டியுங் கண்டும் உபகரித்துநிற்கும் அத்துவிதநிலையை மறவாது கடைப்பிடிக்கும் தமது ஞானக்கண்ணை இழப்பித்துத் தீயநெறிக் கண்கொண்டு சென்று மலங்களான் ஆய பிறவிக்குழியில் வீழ்வித்துத் துயருறுத்துவாராகிய சிறப்(அன்) பிலார் கூற்றிலே தொன்றுதொட்டுப் பயின்று வந்த தேர்ச்சி அறும்படி, அம்மறவழியை மாற்றி ஞானக்கண்ணை யுதவிப் பிறவிக்குழியினின்றும் எடுத்து நன்னெறிக்கட்செலுத்தி வாழ்விக்கும் சிவபத்தரது கூற்றிலே பேரன்புடையனாய்ச் சென்று அவரது கூட்டத்துட் புக்கு அவர்களுக்கு அடிமையாய் எங்கொங்கை அவரது தோளிற் பொருந்திக் கிடக்கப்பெற்றேன் என்பதாம்.

"அநாதியெனப்பெற்ற அணுவை(ஆன்மாக்களை) அநாதிசிவன் உடைமையால்" என்னும் அவ்வுண்மைதோன்ற—என்னையுடையவன் என்றார். "என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்கொண்டருளி" என்ற அத்திருவாசகப்படியே என்னை ஆண்டருளினன் என்னும் அவ்வுண்மைதோன்ற—என்னளவில்வந்து என்னுடனாய் என்னையும் தன்னுளாகக் கொள்ளுதலால் என்றார். "நானார் என் உள்ளமார் ஞானங்களார் என்னையார் அறி

வார், வானோர் பிரான் என்னை ஆண்டிலனேல்'' எனவே—வானோர்பிரான் என்னைத் தன்னாளாகக் கொண்டு ஆளாது ஒழித்திருப்பானாயின் நான் இன்னானென்றும், என்னுள்ளம் இது என்றும், என்னுடைய ஞானம் இத்தன்மைத் தென்றும் என்னை யாவர் அறிவார்? ஒருவரும் அறியார். ஆண்டதனாலன்றோ யாவரும் அறியலாயினர் என்ற அம்மணிவாசகத்தின்படி என்னையறியப் பெற்றேன் என்னும் அவ்வுண்மை தோன்ற-என்னை யறியப் பெற்றேன் என்றார். ''சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டு உன் திருவார்த்தை, விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வேறு இருந்து உன் திருநாமம், தரிப்பார் பொன்னம்பலத்தாடும் தலைவா'' என்பாராகிய அடியாரோடு கலந்து களித்திருந்தேன் என்னும் அவ்வுண்மை தோன்ற—அறிந்த அன்பருக்கே ஆளாய் குழுவிற் சென்று செறியப்பெற்றேன் என்றார்.

இதனால், கறவைபோன்ற அன்பரோடு கூடிப் பெற்ற பயன் இத்திறமா மென்று கூறப்பட்டது.

இம்மூன்று திருவெண்பாவினுள் உந்தியாரில்'காயத்துள்' என்றதனைத் தூலத்தடுத்த பளிங்கின் துளக்கமெனத் தூலத்தே நின்று என்றும், 'மெய்ஞ்ஞானம்' என்றதனை-துளங்காமல் காலத்தால் தாளைத்தந்து என் பிறவித்தாளை யறவிழித்தார்க்கு, ஆளன்றி என்மாறு அதற்கு என்றும், இக்கணமே முத்தியினை எய்திடினும் யானினைந்த, அக்கணமே ஆனந்தம் தந்திடினும்-நற்கணத்தார், நாயகற்கும் நாயகிக்கும் நானடிமை எப்பொழுதும் ஆயிருத்தலன்றியிலேன் என்றும், ''கள்ளுண்ண மாட்டாதே மாயக்கள் உண்டார்'' என்றும், ''வரட்டுப் பசுக்கள்'' என்றும் கூறியதனை—என்னையுடையவன் வந்து என்னுடனாய் என்னளவில், என்னையுந் தன்னாளாகக் கொள்ளுதலால், என்னையறியப்பெற்றேன் என்றும், அறிந்த அன்பருக்கே ஆளாய் குழுவிற்சென்று செறியப்பெற்றேன் என்றும் கூறினார்.

இதனால், மெய்ஞ்ஞானக் கள்ளுண்ட கறவைப்பசுவைப்போன்றவர் இவர் என்றும் அக்கள்ளுண்ணமாட்டாதே மாயக்கள்ளுண்ட வரட்டுப்பசுக்கள் போன்றவர் இவரென்றும் அறியக்கிடக்கின்றன. எனவே அன்பருக்காளாய் அவருடன் செறிந்து, சிரித்தும் களித்தும் தேனித்தும் திரண்டு திரண்டு முதல்வன் திருவார்த்தை விரித்தும், கேட்டும் மெச்சியும் வெவ்வேறிருந்து இறைவன் திருநாமத்தைத்தரித்தும் பொன்னம்பலத்தாடும் தலைவா என்றும், இவ்வண்ணமாய் மனமொழி மெய்கள் அன்பர் வசப்பட்டு அவசமுற்று இருப்பவரே காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ட ஆசிரியர் என்றும்,—இந்நிலையொழிந்து—தூலத்தடுத்த பளிங்கின் துளக்கமெனத், தூலத்தே நின்று துளங்கி, காலத்தால் முதல்வன் தாளைப்பெற்று பிறவித்தாளை யறப்பெறாது, அம்முதல்வனுக்கு ஆளாவதும் எண்ணாது, முத்தியும் இன்பமுமே வேண்டி, நற்கணத்தார் முதலிய மூவர்க்கும் எப்பொழுதும் அடிமையாயிருக்கும் கைம்மாறையும் கைவிட்டு, என்னைப் பிரமமென்று அறியப்பெற்றேனென்று அவ்வளவில் அகமகிழ்ந்து அஹமாகிய பிரமம் பிடித்து, ''மறப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்கும் சிறப்பிலாராகிய'' பெத்தான்மாக்களோடுகூடி மாயாவசப்பட்ட உடம்பைச் செறிந்துவரும் பிராரத்தானுபவத்தை அனுபவித்து அதிற்களித்திருப்பவரே - மெய்ஞ்ஞானக்கள்ளுண்ண மாட்டாது மாயக்கள்ளுண்ட அநாசிரியர்—என்றும் அறிக. (சரு)

சச. சிந்தையி னுள்ளும்என் சென்னியி லும்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்தீபற
மடவா ளுடனேயென் றுந்தீபற.

**எ - து-உ - யார் - என் -** எனின், தன்னை அடியாரோடு கூடும் வண்ணம் செய்த அருமையைநாடி முதல்வனை வாழ்த்துதல் கூறிற்று.

(**இ - ள்.**) எனது சித்தத்தினுள்ளும் எனது தலைமேலும் பொருந்தவந்த அம்மையப்பர் அம்மையோடு பிரியாது வாழக்கடவர் என்பதாம்.

சிந்தையிலும் என்றன் சிரத்தினிலும் என்றது, சிந்தையினுள்ளும் என்றதனால் எனதுதலைமேலும் எனப்பொருள்கொண்டாம்.

இந்நூல் முகத்தில், அகளமாய் யாரும் அரிவறிதப் பொருள், சகளமாய் வந்ததென் றும், (வந்த அச்சகளம்) தானாகத் தந்தது என்றும் கூறினாராகலின் அந்தச்சகள மூர்த்தி யாகிய ஆசிரியரையே ஈண்டு இறுதிக்கண்ணும் வாழ்த்தினாரென்க. எனவே சிந்தையினுள் சிவஞானத்தையும், சென்னியில் திருவடியையும் வைக்கும் முறையுடையார் ஆசிரியராக லான், அவ்வாசிரியர்கோலம் இது என்பார்—சகளமாய் வந்தது-என்றும், அந்தச்சகள மாகிய அவ்வுருவம் இவ்வுலகில் பிறந்திறந்துழலும் உருவம் அன்றென்பார்—அகளமா யாரும் அறிவரிதப்பொருள்-என்றும், அவ்வரிய பொருள் இவ்வெளிய உருவங் கொண்டு வந்தது என்பால் வைத்த கருணையினால் என்னைச் சிவமாக்க என்பார்—தானாக—என்றும், சிவஞானமன்றி யான் சிவமாகேன் ஆகையால் அந்தத் திருவருள் ஞானத்தை எனக்குத் தந்தது என்பார்—தந்தது என்றுங் கூறினார்.

இந்நூலின் முதற்பாசுரத்திற் போந்த அப்பொருளையே அனுவதித்து சிந்தையினுள் ளும் என் சென்னியிலும் சேரவந்தவர் என்றும், அவ்வாறு ஆசிரியனாய்வரினும் அவன் அம்பலக் கூத்தனாகிய பராசக்தியோடு அபின்னமாய் விளங்கும் சிவமேயாகலின் மடவா ளுடனே வாழ்க என்றுங் கூறினார்.

## திருக்களிற்றுப்படியார்.

கOO. சிந்தையினும் என்றன் சிரத்தினிலும் சேரும் வண்ணம்
வந்தவனை மண்ணிடை நாம் வாராமல்—தந்தவனை
மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்
ஏது சொலி வாழ்த்துவேன் இன்று.

(எ - து) சித்தம் சிவமாகச் சிந்திக்கும் எனது சிந்தையில் அருளும், "பிணநெஞ்சே பாதமலர் சூடுகின்றிலை" என்றெண்ணும் குறையகல எனது சிரத்தினில் அருளுருவாகிய திருவடியும் சேரும் வண்ணமாக குருவடிவாய் வந்தவனை, அங்ஙனம் குருவாய் வந்த அவன் சித்தத்தில் அருளும் சிரத்தில் அடியும் சேருவண்ணம் செய்ததேயல்லாமல், சித்தத் தைச்சேர்ந்த அருள் யான் சிவத்தோடு ஏகனாகி நிற்கவல்ல செயலைச் செய்யும்அக்காலத்து அதனை மாற்றும் வண்ணம் பிரவேசிக்கவரும் அஞ்ஞான கன்மம் பிரவேசியாவண்ணமும், மீண்டும் யோனிவாய்ப்பட்டு மேலிருக்கும் எனது தலை-கீழ் நோக்கி மண்ணிடை வாராவண் ணமும் அடியார் கூட்டத்துள்வாழும் வாழ்வைத் தந்தவனை, அடியார் கூட்டத்துள் எவ்வகை யானும் பிரியாது வாழும் வாழ்வில் யானிருக்கும்போது எனது முதல்வனும் உமாதேவியை விட்டுப்பிரியாமல் அவளுடன் அம்மையப்பனாய் என்னுள்ளத்தை விட்டுப் பிரியாது எவ்வகைத் திறத்தும் வாழ்ந்திருக்கவேண்டும் என்று சொல்லுவதல்லாமல், அடியாரோடு கூடி யான்வாழும் இந்நிலையில் வேறு எதனைச்சொல்லி வாழ்த்தவல்லேன் என்பதாம்.

மடவாளுடனே வாழ்க என்ற தேற்றம் பிரிவின்மையை யுணர்த்துதலால்—மாதினு டன் எத்திறமும் வாழ்ந்திருப்ப-என்றார். யான் வேறு வாழ்த்தக் கூறவெண்ணினும் இது காறும் யான் ஆசிரியர் வசனத்தையே பொன்னேபோற் போற்றிக் கூறிவந்தவனேயன்றி வேறு யாதொன்று எடுத்துக் கூறியதில்லையாகலின் அந்நிலையில் வந்தயான் ஈண்டு வேறு கூறின் மிகைபடக்கூறல் என்னும் குற்றத்துட் படவருமென்றஞ்சி—என்பதலால் ஏது சொலி வாழ்த்துவேன்-என்றார்.

சித்தம் சிவமாகச்சிந்திக்கும் எனது சிந்தையில் **அருள்சேரும்** வண்ணம் என்றதனை —திருவாசகம்—"திருத்தோணோக்கம்—அத்தன் கருணையினால் சித்தம்சிவமாக்கிச் செய் தனவே **தவமாக்கும்**" என்றதனாலும், பாதமலர் சூடுகின்றிலை **என்றெண்ணும்** எனது

குறையகல அருளுருவாகிய **திருவடி** சிரத்தில் சேருவண்ணம் என்றதனை—"மங்கைநல் லீர் வானந்தொழும் தென்னன் வார்**கழலே நினைந்து** அடியோம், மானமழிந்தோம் மதி மறந்தோம், ஆனந்தக்கூத்தன் அருள்பெறில் நாம் அவ்வணமே ஆனந்தமாகிநின்றாடாமோ" என்றதனாலும், திருக்கழுக்குன்றப்பதிகம்—இலங்குகின்ற நின்**சேவடிகள்** இரண்டும் வைப்பிடம் இன்றியே, கலங்கினேன் கலங்காமலே வந்து **காட்டினாய்** என்றதனு லும், மண்ணிடைநாம் வாராமல் அடியார் கூட்டத்துள் வாழும் **வாழ்வைத்** தந்தவனை என்றதனை—பிரார்த்தனைப்பத்து—"ஊடியூடி உடையா யொடுகலந்து உள்ளுருகிப்பெருகி நெக்கு, ஆடிஆடி **ஆனந்தம்** அதுவே யாக அருள்கலந்து, கூடிக்கூடி உன்னடியார் குனிப் பார் சிரிப்பார் களிப்பாரா" என்றதனாலும். என்னுள்ளத்துள் மாதினுடன் வாழ்ந்திருக்க வேண்டுமென்றதனை "உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீ இருத்தி அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் அடியேன் உன்னடியார் நடுவுளிருக்கும் அருளைப்புரியாய்" என்றதனாலும், வாழ்ந்திருக்கவேண்டுமென்பது **உள்ளத்துள்**ளே யாம் என்றதனை—பிடித்தபத்து—"பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து நீ பாவியே னுடைய, ஊனினையுருக்கி உள்ளொளிபெருக்கி உலப்பிலா ஆனந்தமாய, தேனினைச் சொரிந்து புறம்புறந்திரிந்த செல்வமே சிவபெருமானே, யான் உனைத்தொடர்ந்து சிக்கெனப்பிடித்தேன் எங்கெழுந்தருளுவதினியே" என்றதனாலும் ஆராய்ந்து அறிந்து தெளிக.

இதனால் இறைவன் அடியாருள்ளத்தைக் கோயில் கொண்டிருப்பதே யன்றி அவரது முடியிலும் அடிசூட்டி மகிழ்விப்பன் என்று கூறப்பட்டது.

இத்திருவெண்பாவால் உந்தியாரில் "சிந்தையினுள்ளும் என் சென்னியிலும் சேரவந் தவர்" என்றதனை-சிந்தையிலும் என்றன் சிரத்தினிலும் சேரும்வண்ணம் வந்தவனை என் றும், "மடவாளுடனே வாழ்க" என்றதனை—மாதினுடன் எத்திரமும் வாழ்ந்திருக்க என்பதலால் ஏது சொலி வாழ்த்துவேன்—என்றுங்கூறினார்.

சிந்தையினுள்ளும் என் சென்னியிலும் சேர வந்தவர் என்றதனுள் வந்தவர் என்றது மண்ணிடை நாம் பிறந்திறந்துழலாது அடியாரோடு கூடியிருக்க என்று விதந்து கூறி யதாமென்க. (சுச)

சரு. வைய முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தானுரை யுந்தீபற
உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற.

**எ-து - உந் - யார் என் - எனின்,** இந்நூற் சிறப்புக்கூறிற்று.

(இ - ள்.) உய்யவந்தானாகிய யான் ஆன்மாக்களை யெல்லாம் தன்னுட்கொண் டிருக்கும் பாசஞான பசுஞானங்களாகிய சமுத்திரங்களைக்கடந்து கரையேறச்செய்யும் படிக்கூறிய இத்திருவுந்தியாரின் உண்மை யுணர்ந்தவரே உண்மை யுணர்ந்தவராவர் என்க.

உய்ய வந்தான் வையமுழுதும் மலக்கயம் (முழுதும்) கண்டிடும் உரை உண்மை யுணர்ந்தார் (உணர்ந்தவர்) எனக் கொண்டுகூட்டுக.

இதனால், இத்திருவுந்தியார் மும்மலக் கடலைக்கடந்து முத்திக்கரையை ஆன்மாக்கள் அடையச்செய்யும். ஆகையால் இந்நூற்பொருளை யுணர்ந்தவர்களே உண்மைப்பொரு ளுணர்ந்தவர்களாவர்" என்று இந்நூலாசிரியர் உய்யவந்த தேவநாயனர் கூறியருளினா ரென்று கூறப்பட்டது.

இத்திருவுந்தியாரில் "உண்மையுணர்ந்தார்" என்றதை—திருக்களிற்றுப்படியார் தம் மிற்றலைப்பட்டார் என்ற இரண்டாவது திருவெண்பாவானும் "உய்யவந்தான் உரை வைய

முழுதும் மலக்கயம் கண்டிடும்'' என்றதை—என்னறிவு சென்றளவில் யான் நின்றறிந்த படி * * * அறிக என்று ஒருவன் சொன்னபடி சொல்லக்கேள் என்று ஒருவன் எனக்கு அதனைச் சொன்னான் நான் உனக்கு அச்சொல் சொல்லக்கேள்—என்ற திருக் களிற்றுப்படியார் மூன்றாவது வெண்பாவானும் அறிக.

* உந்தீபற—எனவே—மேலெழுந்து பறந்து செல்கின்ற ஈப்பறவைபோல், சிவபுண் ணிய விசேடத்தால் பொதுநூற் பொருளிற் பற்றும் பற்றொழிந்து சித்தாந்த நூற்பொரு ளிற் பற்றும் பற்றுடையார்க்கு அப்பற்றால் அடையப்படும் பயன் இதுவென மேலெடுத் துக் காட்டிப் பறந்து செல்லும் சிறப்பினையுடையது இந்நூல் என்க. ஆகவே-இந் நூலுணர்ந்தவரே சித்தாந்த நூல்களின் உண்மையை உணர்ந்தவராவரென்று துணியக் கிடக்கின்றது.

எனவே—பறவையானது—பூமியிற் பரவிக்கிடக்கும் பலபொருள்களில் தனக்கு வேண்டுவதொன்றை கவ்விக்கொண்டு மேலே செல்லுதல் இயல்பு. அங்ஙனம் செல்லும் பொழுது அது கவர்ந்துகொண்டு சென்றபொருள் இதுவென்று தெற்றென அறியவரு தல்போல், சிவஞான போத முதலிய மெய்கண்ட நூல்களிற் பரந்துகிடக்கும் உண்மைப் பொருள்களுள் முடித்துக்கூறும் † உண்மைப்பொருள் ஒன்றை மேலே எடுத்துக்கொண்டு அதனையே இந்நூல்—முதல், இடை, கடைகளில் அறியச்செய்து உய்யச்செய்யும் என்க.

## திருக்களிற்றுப்படியார்

கoக. ‡ ஆதாரமாகி யருளோடு நிற்கின்ற
சூதான இன்பச்சுகவடிவை - ஓதாமல்
உள்ளவர்கள் கூடி உணர்வொழிய நிற்பதலால்
தெள்ளவாராதே சிவம்.

## திருவுந்தியார் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

* உந்தி-என்றது குழாங்கூடிய மகளிரது ஓர் விளையாட்டு. பற-என்றது ஒருமை பன்மை மயக்கம். மகளிர் விளையாட்டென்பதனை-இரண்டாம் உந்தியாரில் ''பழக்கந் தவிரப் பழகுவதன்றி யுழப்புவதென் பெண்ணே'' என்றதனாலறிக. இப்படி யன்றிப் பறக்க என்னும் வியங்கோளைப் பற என விகாரமாக்கிக்கருதின் உம்-தீ-பற எனப்பிரித்து உம்முடைய அநாதி குற்றமாகிய மலங்கள் விட்டுப் போம்படி, இந்நூலின் கருத்தே கருத் தாகக்கொள்க. இப்படி யன்றிப் பறக்க என்னும் எச்சத்தைப்பற என விகாரமாக்கி உம் முடைய தீமைகளெல்லாம் பறந்து போம்படிக்குக் கருதி நிற்பீரெனினுமமையும் இதில் நிற்பீர் என்பது வருவித்துக்கொள்க.

† உண்மைப்பொருள் என்றது—சிவஞானபோதம் பதினோராஞ் சூத்திரப்பொருள்.

‡ இத்திருவெண்பா சில பிரதிகளிற் காணப்பட்டது.